# சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் - ஓர் ஆய்வு

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி – பகுதிநேரம்)
பட்டபேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**இரா. ஜோதி, எம்.ஏ., எம்ஃ.பில்., பி.எட்.,**

No.Ph.D/Regn./ 100/PT/07/2014/10735

**நெறியாளர்**

**முனைவர் கு. வெங்கடேசன், எம்.ஏ., எம்ஃ.பில்., பிஎச்.டி.,**
முதல்வர், தமிழ்த்துறைத்தலைவர்,
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.






தமிழ்த்துறை
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.


**சூன் – 2019**

# சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் - ஓர் ஆய்வு

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி – பகுதிநேரம்)
பட்டபேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**இரா. ஜோதி, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்.,**
No.Ph.D/Regn./ 100/PT/07/2014/10735

**நெறியாளர்**
முனைவர் கு. வெங்கடேசன், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
முதல்வர், தமிழ்த்துறைத்தலைவர்,
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.






தமிழ்த்துறை
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்


**சூன் – 2019**

**முனைவர். கு. வெங்கடேசன். எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,**
முதல்வர், தமிழ்த்துறைத்தலைவர்,
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.

# நெறியாளர் சான்றிதழ்

**“சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும்”** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு சென்னைப் பல்கலைக்கழகத்தின் முனைவர் (பிஎச்.டி – பகுதி நேரம்) பட்டத்திற்காக திருமதி. இரா.ஜோதி அவர்களால் ஜீன் 2014 முதல் ஜீன் 2019 வரையிலான கல்வி ஆண்டில் என் மேற்பார்வையில் தன்னியலாகச் செய்யப்பட்டதாகும். காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி தமிழ்த்துறையில் இவர் செய்த இவ்வாய்வின் மீது இதற்கு முன் வேறெந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

**இடம்:** காஞ்சிபுரம்,

**நாள்:** .

**(முனைவர் கு. வெங்கடேசன்)**
நெறியாளர் கையொப்பம்

**முனைவர். கு. வெங்கடேசன். எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,**
முதல்வர், தமிழ்த்துறைத்தலைவர்,
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.

## முதல்வர் சான்றிதழ்

காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி தமிழ்த்துறையில் தமிழாய்வுத்துறை இணைப்பேராசிரியர் மற்றும் தலைவர் முனைவர் கு. வெங்கடேசன் ஆகிய எனது நெறியாளுமையின்கீழ் திருமதி.இரா.ஜோதி முனைவர்பட்ட (பகுதிநேர ஆய்வாளராகச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் முனைவர்பட்டப்பேற்றிற்காகச் சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் ஓர் ஆய்வு என்னும் தலைப்பில் ஆய்வு செய்து இந்த ஆய்வேட்டினை எழுதி அளித்துள்ளார். இந்த ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வரங்கத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

**இடம்:** காஞ்சிபுரம்,

**நாள்:** .

(முனைவர் கு. வெங்கடேசன்)

**முதல்வர்**

**திருமதி. இரா. ஜோதி. எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்.,**
No. Ph.d/Reg No /100/PT/ 2014/10735,
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும்"** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி – பகுதி நேரம்) பட்டத்திற்காக சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு (ஜீன் 2014 முதல் ஜீன் 2019) வரையில் என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஓர் ஆய்வுப்பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

**இடம்:** காஞ்சிபுரம்,

**நாள்:** .

(இரா. ஜோதி)

**ஆய்வாளர்**

# நன்றியுரை

காஞ்சி ஸ்ரீ கிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரியில் முனைவர்பட்டம் ஆராய்ச்சி செய்திட உறுதுணையாக இருந்த கல்லூரி முதல்வரும், நெறியாளருமான முனைவர் திரு.கு.வெங்கடேசன் ஐயா அவர்களுக்கு முதலில் என்னுடைய மனப்பூர்வமான நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர்பட்ட ஆய்விற்கு நூல்கள் வழங்கி உதவிய காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலைக் கல்லூரி நூலகத்தாருக்கும், வேலூர் மாவட்ட மத்திய நூலகத்தாருக்கும், சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், ஆய்விற்குத் தேவையான நூல்கள் வழங்கிய அன்பு தோழியர் முனைவர் திருமதி. சுமதி அவர்களுக்கும் உளம் கனிந்த நன்றியை நவில்கிறேன்.

முனைவர்பட்டம் மேற்கொள்ள உறுதுணையாக இருந்த அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி வாலாசாப்பேட்டை, தமிழ்த்துறை அனைத்துப் பேராசிரியர்களுக்கும் என்னுடைய மனம் உவந்த நன்றியை நவில்கிறேன்.

முனைவர்பட்டம் படிக்க என்னை ஊக்குவித்த என் பெற்றோரான திரு.பெ. இராமச்சந்திரன் திருமதி இரா. லலிதா அவர்களுக்கும், என் சகோதரியான திருமதி.இரா.சங்கரி அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுத் தொடர்பாக எனக்கு உறுதுணையாக இருந்த என் அன்புக் கணவர் திரு.அ.மோகன்பாலாஜி அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேடு சிறந்த வடிவம் பெற உதவிய அனைத்து நண்பர்களுக்கும் எனது மேலான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| கலித் | - | கலித்தொகை |
| குறிஞ்சி | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| குறள் | - | திருக்குறள் |
| திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற் | - | நற்றிணை |
| நெடுநல் | - | நெடுநல்வாடை |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| பதிற்று | - | பதிற்றுப்பத்து |
| பரி | - | பரிபாடல் |
| புறம் | - | புறநானூறு |
| பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | - | பொருநராற்றுப்படை |
| மதுரை | - | மதுரைக்காஞ்சி |
| மலை | - | மலைபடுகடாம் |
| முல்லை | - | முல்லைப்பாட்டு |
| ப | - | பக்கம் |
| ப.ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| மேலது | - | மேலே கூறப்பட்ட நூல் |

# உள்ளடக்கம்

# பொருளடக்கம்

# சங்க இலக்கியத்தின் தோற்றப்பின்னணி

**முன்னரை**

திருமலிந்த தெய்வத்தமிழ் மிகத் தொன்மையானது. பன்னெடுங்கால மக்களின் பண்பாட்டு வாழ்வு முறைகளை அளந்தறிந்த கருத்திற்கும் கற்பனைக்கும் எட்டாப்பழமை உடையது. வளமார்ந்த பல்வேறு இலக்கியக் கூறுகளைப் பெற்று என்றும் இளமைத்தன்மை குன்றாது, இன்றளவும் வாழ்வாங்கு வாழ்ந்து வரும் நிலைபேறுடையது. குன்றின்மேலிட்ட விளக்காகவும், வரலாற்று காலநிலையை தன்னகத்தே கொண்ட காலக்கண்ணாடியாக அமைவது சங்க இலக்கியம். பாட்டும் தொகையுமாக இளமைக் குன்றா வண்ணம் எழுச்சியும் தமிழரின் பீடுநடையை ஏற்றம் காணுவதாகும். சீரிய சிறப்பும் ஓங்கிய ஆற்றல் தன்மையுடைய பண்டைய தமிழரின் வாழ்வுநிலைகளை ஏற்றம் காண அமையப் பெற்றதே சங்க இலக்கியமாகும்.

நீண்ட நெடுங்காலம் மக்களிடையே வழங்கி வரும் நம் தமிழ்மொழி காலந்தோறும் பல்வேறு நிலைகளில் வளர்ந்து வருவதாகும். பண்டைய தமிழ் இனமக்களின் நாகரிக பண்பாட்டு வளர்ச்சிகளைச் சமகால உலக நாகரிக பண்பாட்டு வளர்ச்சிக்குத் தமிழரின் வாழ்வு நிலைகளை ஏற்றம் பெற வைப்பதே சங்க இலக்கியமாகும். சங்க இலக்கியம் பல இலக்கண கூறுகளும், தற்கால இலக்கியத்தின் புதிய புதிய கோட்பாட்டு ஆக்கநிலைக்குத் தமிழ்மொழியில் நிகழும் மாற்றங்களை இனம் கண்டு புத்தியல்போடு பொலிவுபெறச் செய்வது சங்க இலக்கியமாகும்.

அகப்புற மரபு விழுமியங்களும் நிலக்கோட்பாட்டு வரைவுக்குள் உட்செலுத்தி மனிதநேய மானிடவியலை மாண்புறச் செய்வது சங்க இலக்கியம் என்பர். தமிழரின் மொழிப்புலமையும், அவர்தம் வாழ்வின் மரபும் புதிய கோட்பாடுகளைப் புனைவதற்குக் காரணமாக அமைவது சங்க இலக்கிய நூல்கள் பெரிதும் துணைபுரிவனவாம். தமிழ் இலக்கியத் தோற்றமானது கண்ணிற்கும் கருத்திற்கும் கற்பனைக்கும் எட்டாத மிகத் தொன்மையான காலத்தில் நிகழ்ந்தமையால் தான் அதன் தோற்றத்தை அறிவின் நுட்பத்தால் அறிந்துணர இயலும் என்பதைச் சங்க கால கவிதை புலப்படுத்தும்.

தமிழ்மொழியில் எண்ணிறந்த நூல்கள் இருந்த போதிலும் பாட்டும் தொகையுமாக அமைந்து மூவாயிரம் ஆண்டுக்கு முன்னரே அறம்பாடுதல், நீதி கூறல், பக்தியைப் போற்றல், தெய்வப்பனுவல், கற்பனை வளம் செறிந்தவைகளைக் கொண்டுள்ளிட்ட பேரிலக்கியத் தமிழ்ப்பரப்பே சங்க இலக்கியமாகும். எத்துணை இலக்கியங்கள் எழுந்தாலும் சங்க இலக்கியத்துள் அதன் பாடுபொருள் கருதி

வகைப்படுத்தும்போக்கு ஆய்வாளரின் முறைமைக்கு அறிய வைக்கும் தொகை நூலே எனலாம். பாட்டிலக்கிய யாப்பு வகைகளை விரித்துக் கூறும் தொகை நூலே சங்க இலக்கியமாகும். வாழ்வியல் இலக்கியம் என்பது காலச்சூழல், மக்கள் தேவை அதனதன் பாடு பொருண்மையினுள் வடிவ மாற்றத்தில் பலவற்றை உருவாக்கி மலர்ந்த இலக்கியமே சங்க இலக்கிய நூலாகும். பொதுமைக் கூறுகள் வாழ்வில் பேணும் முறைமைகளை சங்க இலக்கிய நூல்கள் கால ஓட்டத்திற்கு ஏற்பத் தன்னைப் புதுப்பித்துக் கொண்டு வாழும் வெற்றியுடையது.

மனிதனின் ஐம்புல நுகர்ச்சியோடு அறிவுக்கும் சேர்த்து இன்பம் அளிப்பவனவாக உள்ள இலக்கியம், மனிதர்களுடைய வாழ்க்கைப் பிரச்சனையில் ஒருவர் கொள்ளும் ஈடுபாட்டினால் விளைபவையாக உள்ளது. இவ்வாறு தோன்றும் ஒரு மொழியின் இலக்கியம் காலந்தோறும் வெவ்வேறு வடிவங்களைப் பெறுவதென்பது அம்மொழி பெற்றுள்ள வளர்ச்சியைக் குறிக்கும். இலக்கியங்களின் வளர்ச்சி ஒரு மொழியின் தொன்மை, அம்மொழி பேசுவபவர்களின் பாதிப்பு முதலிய காரணங்களை மையப்படுத்தி திண்ணமுற வளர்ச்சிப் பெற்று எழுந்த நூலே சங்க நூலாகும்.

சங்க இலக்கியத்தில் மானிட நோக்குக் கருத்தியல் தர்க்கமாகத் தோன்றாத காலத்தில் மக்களிடையே மனிதம் தழுவிய விழுமியச் சிந்தனைகள் பெருகி இருந்தமைக் காணலாகிறது. பிறர்க்கெனவாழ்தல், தன் வாழ்வின் நோக்கம்அறிதல் எல்லா உயிர்களிடத்தும் அன்பு பாராட்டுதல், தன்னால் இயன்றவரை உதவி செய்தல், தன்னை நாடிவருவார்க்கு உதவுதல் இன்னபிறவும் சங்க நூல்கள் எடுத்துக்காட்டுவனவாக அமைகின்றது.

சங்கநூல்களில் பாடற்பரப்புகளில் தமிழர்தம் காலப்பழமை, மொழித்தொண்டு(சங்கம்) இலக்கியக் கொள்கை (தொல்காப்பியம்- தொகை நூல்களின் ஒத்திசைவு), பொருளிலக்கணக் கொள்கை (அகம் - புறம்), தமிழர்தம் பண்பாடு, அரசியல், வாழ்வியல் முதலியன. மாந்தர் தம் உளவியல் ஆய்வு, பாடிய புலவர்தம் நெறி, பாடல்களின் சொல்நயம், பொருள்நயம், இறைச்சி, உள்ளுறை, அணிநலன்கள், மொழிப்பெயர்ப்பு, இயற்கை, வருணனை என பலவகை விழுமியக் கோணங்களில் சங்க இலக்கிய ஆராய்ச்சி வளர்ந்து வருகின்றன.

ஆய்வு என்பது ஒரு தொடர் நிகழ்வாகும். முடிவுகள், திரிபுகள், மறுப்புகள், ஏற்புகள் என்று பலநிலைகளில் ஆய்வு நிகழ்கின்றன. இவற்றின் வழியே, சங்க இலக்கிய நூலான பாட்டும் தொகையும் அவற்றின் மரபின் அமைப்பும் அதன் பாடுபொருளும் பற்றி ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கமாக அமைகின்றது.

**ஆய்வறிமுகம்:-**

உலக இலக்கியங்கள் யாவும் மக்களின் வாழ்க்கையினின்று முகிழ்த்தவை. முகிழ்த்த இலக்கியங்கள் மலர்ந்த காலத்தின் வாசங்களாய் வண்ணங்களாய் வெளிப்பட்டு, எண்ணங்களைப் பறைசாற்றி நின்று நிலைத்துள்ளன. அங்ஙனம் தமிழில் காலந்தோறும் பலஅரிய இலக்கியங்கள் தோன்றி தமிழை வளப்படுத்தியது மட்டுமின்றிப்

பெருமைப்படுத்தியும் நின்று நிலவியது. இத்தன்மையில் தோன்றிய நூல்களுள் சங்க இலக்கியப் புலவர்களால் இயற்றிய பாடல்கள் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. அப்புலவர்களின் கவிதைச் சிறப்பினை ஆய்வறிஞர் பெருமக்கள் பலர் ஆய்ந்து வெளிப்படுத்தியுள்ளனர்.

**"பொய்யகல நாளும் புகழ்விளைத்தல் என்வியப்பாம்**
**வையகம் போர்த்த வயங்கொலீநீர் - கையகலக்**
**கற்றோன்றி மண்தோன்றா காலத்தே வாளொடு**
**முன்தோன்றி மூத்தக் குடி".**

என ஐயனாரிதனார் தமிழ்க்குடியின் பழமையை விளக்கியுள்ளார். இத்தகு சிறப்பும் பெருமையுமிக்க மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, வாழ்வியல் கூறுகள் என்ற அனைத்து நிலைகளையும் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. தமிழ் மொழிக்கு உயிரும் உடம்புமாக திகழ்வது சங்க இலக்கியம் என்று பேராசிரியர் து. சீனிச்சாமி அவர்கள் எழுதிய தமிழில் காப்பியக் கொள்கை என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**ஆய்வின் ஆதாரங்கள்:-**

சங்க இலக்கியம் பல ஆழமான சிந்தனைகளைக் கொண்ட கருவூலம் ஆகும். அதனால்தான், சங்க இலக்கியத்தில் பல ஆய்வுகள் இன்றும் மேற்கொண்டு வருகின்றனர். அவ்வகையில் சங்க இலக்கியத்தில் அமைந்துள்ள பாடல்கள், சமுதாய பண்பாட்டுக்கு உட்பட்ட மரபினது விழுமியங்களின் கருத்துக்கள் அனைத்தும் இவ்வாய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டு எல்லையாக அமைகின்றது.

சங்க இலக்கியங்களே மனிதனின் அடிப்படையான சமுதாய அமைப்பின் கட்டமைப்பை விளக்கும் பழங்காலச் சான்றாதாரமாகும். **இன்று பேச்சு வழக்கில் உள்ள இந்திய மொழிகளின் இலக்கியங்களில் மிகப்பழமையானது சங்க இலக்கியமே என்பது ஆராய்ச்சியாளர்கள் கண்ட உறுதியான முடிவாகும்.**

ஒரு நாட்டின் இலக்கியங்கள் என்பன அந்நாட்டு மக்களின் பண்பாட்டு நெறிமுறைகளை வழிப்படுத்துவனவாக அமைதல் வேண்டும். இலக்கியங்கள் காலத்தின் தேவைகளுக்கேற்ப தன்னுணர்வுச் சிந்தனைகளை வெளிப்படுத்திக் கொண்டே இருக்க வேண்டும். இக்கருத்தையொட்டியே தொல்காப்பியரும் **கடிசொல் இல்லை காலத்துப் படினே** என்று சமகாலங்களில் ஏற்படும் மாற்றத்தை அன்றே குறிப்பிட்டுள்ளார்.

**களம்:-**

சங்க இலக்கியங்கள் என்பது காலம் கடந்த இலக்கிய வளமையின் அடையாளமாகும். இவ்விலக்கியக் காலத்தின் களம் பிற்போக்கு நிலைமையை உணரமுடியாத, மிகவும் முந்தைய காலக்கட்டத்தை ஒட்டியது. சமுதாயப் பின்புலம் என்பது மனிதன் சிந்தித்த பல்வேறு சூழலில் வெளிப்படுத்தும் நோக்கம் கொண்ட பண்டைய மக்களின் வாழ்வியல்(அகம், புறம்) யாவும் ஒரு தனிமனிதனின் ஆற்றல் மிக்க

விழுமிய உணர்வாக இல்லாமல் சமுதாய உணர்ச்சியின் மரபில் அமைந்த விழுமிய செயல்திறனாக இருக்கின்றது. எக்காலமும் ஏற்றுக்கொள்கின்ற சமுதாய பண்பாட்டுத் தளங்களைத் திறனாய்வு நோக்கில் வெளிப்படுத்தும் பயன்பாடே மனித சமுதாயத்தின் காலத் தேவையாகும். இத்தேவையே சங்க இலக்கியத்தின் முழுமையுமாகும். இலக்கியம் என்பது ஒரு மனிதனின் வாழ்க்கையைப் புரிந்துக்கொள்ளும் களமாக அமைந்ததால் அதுவே பண்பாட்டின் மேம்பாடுகளாகப் பெற்றுவிடுகின்றன.

**சங்க இலக்கியக் காலம்:-**

பல நூற்றாண்டு கால மக்களின் முந்தைய வாழ்வியல் அமைப்பை அறுதியிட்டுக் கூறுவதென்பது முடியாதவொன்றாகும். ஆய்வாளர்கள் சங்ககாலத்தின் அனுமானத்தால்தான் கண்டு தெளிகின்றனர். சங்க காலத்திற்கு முற்பட்ட இலக்கண நூலான தொல்காப்பியம் இன்றும் நிலைத்துள்ளது. தொல்காப்பியத்தில் காணப்படும் சில போக்குகள் சங்ககாலத்தில் நன்கு நிலைபெறுகின்றன. தொல்காப்பியத்தமிழ், சில மாற்றங்களைத் தவிர முழுக்க சங்ககாலத் தமிழேயாகும் என்று தெ.பொ. மீனாட்சி சுந்தரனாரின் கருத்தினின்று தொல்காப்பியம் சங்க இலக்கியத்தின் வழிகாட்டி என்பது புலப்படும்.

இலக்கிய நெறிமுறைகளைத் தோற்றுவிக்கும் முதல் நூலாகத் தொல்காப்பியம் தோற்றம் பெறுகிறது. தொல்காப்பியம் சங்க இலக்கியத்திற்கு முந்தையது என்பதை அதன் சொல்லமைப்பு கொண்டே விளக்க இயலும். சங்க இலக்கியத்தில் பாடல்கள் மூன்று அடி முதல் எழுநூற்று எண்பத்திரண்டு அடிகள் கொண்டு அமைந்துள்ளன. சங்க இலக்கியத்தில் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 2386 ஆகும். அவற்றுள் அகப்பாடல்கள் 1876. புறப்பாடல்கள் 510. இவ்விலக்கியத்தைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 473. ஆசிரியர் பெயர் இல்லாத பாடல்கள் 10 ஆகும். இவர்களுள் பெண்பாற் புலவர்கள் 30. இந்த எண்ணிக்கைக் குறித்து சிலவேறுபாடுகளும் உள்ளன. வாழ்க்கையின் உரைகல் என இவ்விலக்கியத்தைப் போற்றித் தமிழ் மொழியின் வாயிலாக வாழ்க்கையை உணர்த்துவதாகும். அம்முறையில் தனக்கென ஒரு விழுமிய வரலாறும், வாழ்க்கை நெறியும் படைத்த தமிழினம், பழமையும் சிறப்பும் கொண்டு விளங்குகின்றது.

இவ்விலக்கியம் ஒரு வரையறைக்குப்பட்ட கற்பனை, சிறந்த உணர்ச்சி, விழுமிய கருத்து, மனத்தை ஈர்க்கும் வடிவம், அளவான ஓசை இவற்றினைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது. இதனால் அன்றுதொட்டு இன்றுவரை இந்நூலுக்கு முன்னோடி வேறெதுவுமில்லை என்று கூறமுடிகின்றது. அன்பும் அறனும் உடைய இல்வாழ்க்கையை உள்ளவாறு உணர்ந்து, உலகிற்கு உணர்த்திய உன்னதமான வாழ்வியல் பதிவுகளாக சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. அப்பாடல்கள் வழி மனமாண்பையும், பண்பாட்டு வாழ்வையும் சங்க இலக்கியப்பாடல் திறத்தாலே அறியக் காணலாம். கருத்துச் செறிவோடும் பொருள் நிறைவோடும் இயற்றப்பட்ட சங்கத் தமிழ்ப் பாடல்கள் பிறமொழி இலக்கியங்கள் விட சிறந்தவை, வியத்தகு கவித்துவம் வாய்ந்தவை எனலாம். இப்பாடல்களை அனைத்தும் தமிழிலக்கிய நெடுவரலாற்றில் படைப்புச் சூழலில் தனக்கெனத் தனிச்சிறப்பான இடத்தைப் பிடித்துள்ளன. இவ்வகையான இலக்கிய

வளர்ச்சியே ஒரு நாட்டின் வளர்ச்சியைத் தீர்மானிக்கும். இவ்விலக்கிய கருவூலமே தமிழர்களுக்கு கிடைத்த முதன்மை இலக்கியமாகும். இவ்வரிய இலக்கியம் சமூக வளர்ச்சிக்குத் துணைபுரியும் என்பதால் எதிர்காலத் தேவைகளையொட்டி அவை ஆய்வு செய்யும் தளமாக அமைகின்றன.

சமகாலம் சமூக முரணோடும் இணைந்திருக்கின்றது. ஆனால், சமூக வளர்ச்சிப் பாதையை விரும்பும் நாம் முரண்களைக் கண்டறிவதும், அதனைக் களைவதும் அவசியம் மட்டுமல்லாமல், வழிமுறைகளை ஆராய்ந்து அளிப்பது நம் கடமையும் ஆகும். ஆராய்தல் என்ற தளத்தில் ‘மரபு’ எனும் முந்தைய இலக்கிய விழுமிய வடிவங்கள் ஆய்வு செய்யப்படவேண்டியவையே.

சங்க இலக்கியத்தின் சமன்பாட்டுத் தன்மைகளை ஆராய்ந்து அறிந்து அவற்றை உலகுக்கு அளிப்பதும், அதே வேளையில் ஆராய்ந்துக்கொள்ளும் முரண்களுக்கான காரணிகளையும் சமூக மெய்ப்பாடுகளோடு ஆராய்ந்து அளிப்பது சமூகத் தேவையின் அவசியம். இத்தகைய இலக்கிய ஆய்வுகளினால் சமூகம் மீட்சி எனும் உயர்வுக்கொள்ள வாய்ப்புண்டு என்பதால் அத்தகு சிந்தனையோடு இந்த ஆய்வு நிகழ்த்தப்படுகின்றன.

நம் முன்னோர் சொற்களின் பொருளை இன்னின்ன சொல் இன்னின்ன பொருளை தரும் என வரையறைப்படுத்தியுள்ளனர். பலநெடுங்காலமாக இவ்வரையினுள் ‘மரபு’ என்னும் உலகத்து நிகழ்வுகளை யாவையும் கூறி நிற்பர். அம்மரபு சொற்களின் பொதுப் பண்புகளையும், மொழியின் இயல்புகளையும், தமிழர் தம் அகப்புற வாழ்வியலையும் உலக நாகரிகத்தில் அடக்கி, இலக்கிய மரபுகள் கற்பனை மரபுகள் என வரையறை செய்து சமூக நிலை விழுமியத்தோடு உணர்த்துவதே சங்க இலக்கியம் என்று உய்த்துணரமுடிகின்றது.

செந்தமிழ் இயற்கை பொருந்திய நிலத்தோடு முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி புலமைசார் புலவர்களின் சங்கப் பாடல்களை ஆராய்ந்தப் பின் இலக்கிய மரபுகள் யாவுமே சங்க இலக்கியங்களாக தோன்றியுள்ளன. கூர்மையாக நோக்கும் அளவில் கடந்த காலத்திலிருந்து பல நூற்றாண்டுகளாகச் செயல்பட்டு வரும் வாழ்வியல் மேன்மைகளை திறம்பட ஆராய்ந்து எடுத்துரைப்பதே இவ்வாய்வின் கருதுகோள்களாக அமைகின்றன. இங்ஙனம் நாடு சிறக்கவும் உயர்ந்தோங்கவும் வேண்டுமெனில் சங்க இலக்கியப் புலவர்களைப் போல நுண்மான் நுழைபுலமும் உலகோர் ஏற்றுப் போற்றும் அறிவுடைமையும் பெற்று, அகில உலகமும் போற்றும் விதத்தில் வாழவும், முந்தையதை நினைவுக் கூறவும் நினைத்ததைச் செயல்படுத்தவும் இது போன்ற ஆய்வுகள் வருங்காலத்தவர்க்கு பயன்பாடுடையதாக அமையும்.

சங்க இலக்கிய புலவர்கள் பற்றியும், அவர்தம் பாடல்கள் பற்றியும் தனித்தனியே பலர் பல்வேறு நோக்கில் ஆய்ந்து திறனாய்வு நூல்களாகவும் கட்டுரைகளாகவும்,

மொழிப்பெயர்ப்புகளாகவும் ஆய்ந்து, ஆக்கம் செய்து வெளியிட்டுள்ளனர். அவை பின்வருமாறு,

1. சுந்தரம்.மெ., ''சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை'' அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.
2. அப்துல் சத்தார். இ., '' சங்க இலக்கியத்தில் பெருமிதம்'' திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
3. அமிர்தகௌரி. ஆ., ''சங்க இலக்கியத்தில் உரையாடல்கள்'' சென்னைப் பல்கலைக்கழகம்
4. அமிர்தவல்லி . எஸ்., ''சங்க இலக்கியத்தில் வைணவ நெறி'' சென்னைப் பல்கலைக்கழகம்
5. அருணாசலம். எஸ்., ''சங்ககால விழாக்களும் சடங்குகளும்'' மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
6. அருளானந்தம். எஸ்.பி., ''சங்கப் பாடல்களில் கருப்பொருள்களின் தாக்கம்'' சென்னைப் பல்கலைக்கழகம்
7. ஆறுமுகம்.அ., ''சங்ககால சமுதாயம்'' சென்னைப் பல்கலைக்கழகம்
8. ஆனிலெட்பாமி . வி., ''சங்க அகப்பாடல்களின் அடிக்கருத்துக்கள்'' மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
9. இந்திரா சுபலெட்சுமி. A. Critical study of the life sketches of the sankam poets in the chronological order
10. இராசேந்திரன்.எஸ்.எம்., ''சங்க தமிழ் இலக்கியத்தில் கையறுநிலைப் பாடல்கள்'' மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
11. இராசரத்தினம்.க., ''சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்'' பாரதியார் பல்கலைக்கழகம்
12. இராமசாமி.கொ. , ''சங்க இலக்கியத்தில் தோழி'' அழகப்பா பல்கலைக்கழகம்
13. இராமநாதன். இராம., ''சங்க இலக்கியத்தில் போர் முறை'' மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
14. இராமலிங்கம் .அரங்க., ''சங்க இலக்கியத்தில் வேந்தர்'' சென்னைப் பல்கலைக்கழகம்
15. ஈஸ்வரி. ஆர்., ''சங்க இலக்கியத்தில் வாழ்த்து முறைகள்'' சென்னைப் பல்கலைக்கழகம்
16. உலகநாதன்.பெ.கு., ''சங்கத் தமிழ் இலக்கியத்தில் புறத்திணைக் கருத்தமைதி'' சென்னைப் பல்கலைக்கழகம்

17. கசேந்திரன்.கோ., “ சங்க இலக்கியத்தில் செவிலித்தாய்”
சென்னைப் பல்கலைக்கழகம்

18.கல்யாணசுந்தரம்.டீ., “சங்க இலக்கிய அகப்பாடல்களில்உணர்வுப் போராட்டங்கள்” சென்னைப்பல்கலைக்கழகம்

19.குமார்.ஆர்.சி., “The Heroicfeatures of Romantic Poems of sangam Age”.
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

20. குருசாமி.எஸ்., “சங்க காலச் சேரர் அரசியல் முறைகள்”
சென்னைப் பல்கலைக்கழகம்

21. குளோரியா சுந்தரமதி. இல., “Evalution and Evolution of sangam Litetrature” திருவனந்தபுரம் பல்கலைக்கழகம்

22. சஞ்சீவி. ந., “Imageinary in Sangam Poetry”

சென்னைப்பல்பலைக்கழகம்.

23. சண்முகம். இராம., “சங்க இலக்கியங்களில் வரைவு கடாதலும் அறத்தொடு நிற்றலும்”.

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

24. சத்தியமூர்த்தி., “சங்க இலக்கியத்தில் தத்துவச் சிந்தனைகள்”
கேரளப் பல்கலைக்கழகம்

25.சந்திரலேகா. பி., “சங்க அகப்பாடல்களில் புறம்” மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

26.சாந்தாமணி.வி., “சங்க இலக்கியத்தில் மலர்கள் வழி அறியப்பெறும் உண்மைகள்”
பாரதியார் பல்கலைக்கழகம்

இலக்கியத்தில் மா, புள் வருணனையும் கருத்து வெளிப்பாடும்”
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

28. சாமுவேல் சுதானந்தா “Architecronics of Aarrupatais of path pattu” மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

29. சாரதா கலாவதி. “சங்க இலக்கியத்தில் மலர்கள்” சென்னைப் பல்கலைக்கழகம்

30. சாரதாம்பாள். செ., “ சங்க இலக்கியத்தில் செவ்வியல் பண்புகள்”
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

31. சிங்கார வடிவேல். ரெ., ‘‘சங்க இலக்கிய உவமைகள்’’
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

32. சிவராஜ். டி., ‘‘சங்க இலக்கியத்தில் உளவியல்’’
சென்னைப் பல்கலைக்கழகம்

33. சீனிவாசன். இரா., ‘‘Sanga Illakkiyathil Uvamaikal’’

34. சுப்பிரமணியன். ‘‘Sankam Poilty’’

35. சுப்புலெட்சுமி.கே., ‘‘ சங்க அகப்பாடல்களில் தலைவன்’’
சென்னைப் பல்கலைக்கழகம்

36. செயராமன். பி., ‘‘சங்க இலக்கியத்தில் பாடாண்திணை’’

37. செல்லையாப்பிள்ளை. எஸ்., ‘‘சங்க இலக்கியத்தில் பிரிவு’’
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

38. செல்வம். டி., Concept of lone in Natrrinai(theme and Expression) A Critical study’’ திருவேங்கடவன் பல்கலைக்கழகம்

39. சேஷாத்திரி. என்., ‘‘An investigation in to the Study of the psychological aspect as depicred in Sangam literature’’ சென்னைப் பல்கலைக்கழகம்

40. ஞானாம்பாள்.கே., ‘‘Homelife among the Tamils in the Sangam Age

41. தட்சிணாமூர்த்தி. இரா., ‘‘Study into the classification of thinai and thurai in Eight anthology Work’’. சென்னைப் பல்கலைக்கழகம்

42. தயாபர சுந்தரி. ஏ.ஆர்., ‘‘சங்கப் பாடல்களில் கொடைக் கோட்பாடுகள்’’
பாரதியார் பல்கலைக்கழகம்

43. தாயம்மாள் அறவாணன், The treatment of child in Sangam literature upto 15th century. கேரளப் பல்கலைக்கழகம்

44. தியாகராஜன். பெரு., ‘‘சங்க குறிஞ்சித் திணைப்பாடல்கள் - ஒரு மதிப்பீடு’’
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

45. நடராசன். து., The Women poets in Tamilnadu.

46. துப்யான்ஸ்கி. ஏ., ‘‘The Mullai theme in old Tamil poetry.

47. தேவகிருபை தியாகராஜன்., "Studies in Akattinai"

48. நா. இராகு., "A Critical of palaithinai on Sangam Litreature"

49. பழனிசாமி.மு., "சங்க அக இலக்கியத்தில் துணைமாந்தர்"
சென்னைப் பல்கலைக்கழகம்

50. பாலகிருஷ்ணன்.எஸ்., "சங்க இலக்கியத்தில் வாகைத்திணை"
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

51. பாலசுப்ரமணியன். சி., A Study of the Literature of the cera country(up 11th centuary)

52. பாலகிருஷ்ணன். மு., "சங்க இலக்கியத்தில் சமணம்"
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

53. பாலசுப்ரமணியன். வெ.கு., "சங்க இலக்கியத்தில் புறப்பொருள்"
சென்னைப் பல்கலைக்கழகம்

54.பாஸ்கரதாஸ். ஈ.கோ., "சங்கப் பாடல்கள் உணர்த்தும் நிலைபேறுடைய மானுட மதிப்புக்கள்"
சென்னைப் பல்கலைக்கழகம்

55. பெரியகருப்பன். இராம., "Literary Conventions in Sangam poetry"
சென்னைப் பல்கலைக்கழகம்

56. இரத்தினம். க., "சங்க அகத்திணைப் பாடல்களில் கூற்று"
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

57. ராஜேஸ்வரி., "சங்க இலக்கியத்தில் அன்றாட வாழ்க்கை"
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

58. வீரப்பன். பா., "சங்க இலக்கிய நடை(பத்துப்பாட்டு மட்டும்)
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

59. ஸ்ரீனிவாசன். வி., "சங்க இலக்கியத்தில் அவலச்சுவை

60. ஜோதிமணி. மா., "பழந்தமிழ் இலக்கியம் காட்டும் துறவறம்"

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

**கருதுகோள்:-**

சிற்பி தான் செதுக்கிய சிற்பத்தில் வாழ்கிறான். ஓவியன் தான் வடித்த ஓவியத்தில் வாழ்கிறான். அவ்வாறே உயர்ந்த சிந்தனையுடைய கவிஞன் தன் உன்னத கவிதையில் வாழ்கிறான். அவ்வகையில் காலத்தால் அழியாத கருத்தோவியமாகவும் எண்ணங்களில் நிறைந்து நிற்கின்ற நீடுபுகழ் வண்ணங்களான சங்க இலக்கியப் பாடல்களைத் தந்த புலவர்களின் பதிவுகள் என்றுமே அழியாத கல்வெட்டுகளாய் நின்று நிலவுகின்றன. சங்க இலக்கியப் புலவர்களின் படைப்புகள் வளர்ந்து வரும் தலைமுறைக்கு வளம் சேர்க்கும் வகையில் அமைந்துள்ளன.

எந்த வகை இலக்கியமானாலும் அவை தாம் தோன்றிய காலத்தைப் பிரதிபலிக்கும். அவ்வகையில் தோன்றியது சங்க இலக்கியப் பாடல்களாகும். தமிழ் மொழியையும் சமூகநிலை இயல்பையும் இலக்கியத் தரத்தையும், சங்ககால புலவர்களின் புலப்பாட்டு நெறியையும் அடியொற்றி பண்பாட்டை இழையோடச் செய்து வாழ்வியல் விழுமியச் சிந்தனைகளை நிலைநிறுத்தி வாழும் வரலாறாய் நிலைக் கொண்டது எனலாம்.

அங்ஙனம் நிலைத்த புகழுடன் நின்று நிலவும் சங்ககாலப் புலவர்களின் கவிதைகளில் தோன்றிய காலத்தில் எத்தகைய பின்புலத்துடன் வெளிப்போந்தது என்பதையும், அப்பாடல்களில் இழையோடிக் கிடக்கின்ற அகப்புற வாழ்வியல் விழுமியச் சிந்தனைகள் எவ்வகையில் பொருத்தமுடையவையாகச் சிறக்கின்றன என்பனவற்றையும், அக்கால மக்களின் வாழ்வியல் கூறுகள் எவ்விதம் அமைந்தியல்கின்றன என்பவனவற்றையும் கருதுகோள்களாகக் கொண்டு இந்த ஆய்வு அமைகின்றன. மேலும் இந்த ஆய்வின் மூலம் சங்க இலக்கியம் எவ்வெவ்வகை மெய்ப்பாடுகளுடன் வரலாற்று நிலையில் சமூகத்திற்குப் பயன்பட்டிருக்கின்றன என்பன பற்றியும், சங்க இலக்கியம் படைத்த புலவர்களின் நோக்கத்தையும் அந்நோக்கம் படைப்பில் எந்தளவிற்கு வெற்றி பெற்றிருக்கின்றது என்பதை அறிவதோடு அப்படைப்புகளின் அகப்புற இலக்கண இலக்கிய வாழ்வியல் தரத்தைப் பேணிக் காண்பதும், வெளிப்படுத்துவதும் ஆய்வின் பயன்பாடாக அமைகின்றது.

சங்க இலக்கியப் பாடுபொருள், கற்பனை, உணர்ச்சி, வடிவக்கோட்பாடு, அரசியல்நிலை, தமிழ்மொழியில் செறிந்துள்ள தன்னுணர்ச்சிப் பாடல்கள் எழுந்ததன் மரபுப் பின்னணி, சிறப்புகள் போன்றவற்றின் மாண்பையும். கருத்து புலப்பாட்டுச் செறிவும், பொருளை எடுத்துரைக்கும் பாங்கும் அக்காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் பதிவுகளையும் உள்ளடக்கிய நோக்கம் மற்றும் சங்கத் தமிழ் இலக்கியப் போக்கினை அறிந்து உணரவும் கருத்துத் திறனின் வலிமையினை அறியவும் வழிகாட்டும் என்பதை இவ்வாய்வு எடுத்துரைக்கும் வகையில் அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்:-**

சங்க இலக்கியம் படைத்த புலவர்கள் அவர்கள் தாம் வாழ்ந்த காலச் சூழல்களுக்கு ஏற்பவும், சமூக சூழலுக்கு ஏற்றவாறும் மானுட மேம்பாட்டிற்காக அவர்கள்

செய்த பணியினையும், கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளமையே காண இயலும். ஆதலால், இது அகநிலை ஆய்வாகும். அவர்தம் படைப்புகள் பலவற்றில் உணர்வார்ந்த தன்மை மிளிரக் காணலாம். அவற்றை வெளிக்கொணரும் வண்ணம் தொகுத்தல், பகுத்தல், உயத்துணர்தல், விளக்குதல் போன்றவை பின்பற்றப்படுகின்றன அவற்றை விளக்கும் வண்ணம் விளக்கமுறை ஆய்வும் சங்ககாலத் தமிழரின் வாழ்வியல் விழுமியங்கள் மரபுநிலை சிந்தனையோடு மதிப்பீட்டு உரைக்கும் மதிப்பீட்டு ஆய்வு முறையும் இவ்வாய்வேட்டில் மேற்கொள்ளப்படுகின்றன. இவ்வாய்வு முறைகள் பொருள் கொள்ளும் இடத்திற்கேற்பவும், பயன்பாட்டிற்கேற்பவும் தக்க இடத்தில் அணுகுமுறைகளாக பயன்படுத்தப்படுகின்றன.

**ஆய்வின் ஆதாரங்கள்:-**

1. **முதன்மை ஆதாரங்கள்**
2. **துணைமை ஆதாரங்கள்**

**முதன்மை ஆதாரங்கள்:-**

சங்க இலக்கிய நூல்களின் பாடல்கள் மற்றும் உரை விளக்கங்கள், நூல் எழுந்த காலத்தின் வரலாறு, தமிழர்களின் வாழ்வு முறை தகவல்கள் ஆய்வுக்காக முதன்மை ஆதாரங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**துணைமை ஆதாரங்கள்:-**

சங்க இலக்கிய நூல்கள்(எட்டுத்தொகை, பத்துப்பாட்டு) ஆய்வுத் தொடர்பான கருத்தரங்கக் கட்டுரைகள், தொகுப்புரைகள், விளக்க ஆய்வுகள், ஆய்வேடுகள், பயிலரங்கக் கருத்துக்கள், செய்தித்தாள் தகவல்கள் போன்றவைகள் கருத்துக்கு வலுவூட்டும் துணைமை ஆதாரங்களாக ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

**ஆய்வின் மொழிநடை:-**

ஆய்வேடு தூயத்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது. மேற்கோளிற்காகச் சங்க இலக்கியப் பாடல்களும் நுண்மான் நுழைபுலமிக்க பேரறிஞர்களின் கருத்துரைகளும், கருத்து மாறாமல் ஆய்விற்கு எடுத்தாளப்பட்டுள்ளன.

**இயல்பகுப்பு முறை:-**

இவ்வாய்வேடு நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு இயலிலும் தனித்தனியாக முன்னுரையும், உட்தலைப்புகளும், தொகுப்புரையும் இடம் பெற்றுள்ளன. முன்னுரைப் பகுதிகள் இயலின் தோற்றுவாய்களாகவும், தொகுப்புரைப் பகுதிகள் செய்யப்பட்ட ஆய்வுகளின் தொகுப்புரையாகவும் அமைந்துள்ளது. துணைநூற்பட்டியல் ஆய்விற்குப் பயன்பட்ட நூல்களை வரிசைப்படுத்தித் தருகின்றன.

**ஆய்வேட்டின் அமைப்புமுறை:-**

**ஆய்வறிமுகம்:-**

ஆய்வறிமுகத்தில் ஆய்வாளர் இவ்வாய்வைத் தேர்ந்தெடுத்ததன் காரணம் - ஆய்வின் நோக்கம், அணுகுமுறைகள் - ஆதாரங்கள் - மொழிநடை – ஆய்வின் பாகுபாடு – துணைநூற்பட்டியல் - பின்னிணைப்புகள் போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

**தலைப்பு:**

**"சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் - ஓர் ஆய்வு"**

இயல். ஒன்று. சங்க இலக்கியத் தோற்றப் பின்னணி

இயல். இரண்டு. சங்க இலக்கியத்தில் விழுமியங்கள்

இயல். மூன்று. அகப்புற சமூக மரபுநிலை விழுமியங்கள்

இயல். நான்கு. வாழ்வியல் விழுமியங்கள்

**இயல் . ஒன்று. சங்க இலக்கியத் தோற்றப் பின்னணி** என்னும் அறிமுக இயலில் சங்க இலக்கியத்தை அறிமுகப்படுத்தும் விதமாக தமிழ் மொழியின் தோற்றக்களம் – சங்க இலக்கியம் - -இலக்கியத்தின் பாடுபொருள் - மொழிக் கட்டமைப்பு - இலட்சியம் - இலக்கியவளம் - விழுமியம், பொதுமைப்பண்பு, தற்சார்பின்மை, தாய்மைத்தன்மை, உயர்சிந்தனை, அமைப்பு, புறநூல்கள், திணைஅமைப்பும விழுமியமும், குறிஞ்சிநில விழுமியங்கள், முல்லைநில விழுமியங்கள், மருதநில விழுமியங்கள், நெய்தல்நில விழுமியங்கள், பாலைநில விழுமியங்கள் போன்றவை பொருண்மையின் நிறைவைச் சுட்டுவதாகவும் இவ்வியல் அமைகின்றது.

**இயல். இரண்டு. சங்க இலக்கியத்தில் விழுமியங்கள்**

தமிழ் என்பது இனிமை என பொருள் கண்டனர் நம்முன்னோர். அக்காட்சி தேன் பால் அமுது என்றும், இணையில்லா இன்பவீடு என்றும், பொருள் கொள்ளுமாறு சங்க இலக்கிய புலவர்களின் அறிவைத் தூண்டியது எனலாம். இத்தன்மையில் விழுமியம் - சங்க இலக்கியத்தில் விழுமியம் எனும் சொல்லாட்சி – தனிமனிதவிழுமியம் - தமிழர் வாழ்வு பேணும் முறைமை – வாழ்வில் தலைமைப்பண்பு – உலகத்தோற்றம் பற்றிய விழுமியம்(இயற்கைபோற்றல், நீரியல் அறிவு, நிலம்நீர்) - நிலப்பாகுபாடு விழுமியம்(மழை, மருத்துவக்கலைஞர், இயற்பியல் அறிவு) - உயிர்கள் பற்றிய விழுமியம் - மெய்ப்பாடு விழுமியம் - கல்வி விழுமியம்(அறிவுலை பகர்தல், நட்பு) – கொடைமடம் - நம்பிக்கை விழுமியம் - அரசியல்விழுமியம்( நாட்டுப்பற்று, தொழில்நுட்பம், உழவுத்தொழில்) - அரசர்,

அமைச்சர், ஒற்றர், காவலர், மெய்க்காப்பாளர், அறிவர், ஆசிரியர் ஆகியவை இவ்வியலில் விழுமியக் கொள்கைகளைக் கொண்டு ஆராயப்பட்டுள்ளது.

**இயல். மூன்று. அகப்புற சமூகமரபுநிலை விழுமியங்கள்**

அகப்புற சமூகநோக்கு என்பது மூன்றாவது இயலாகும். அகம் - அகம் விளக்கம் - அகம் பற்றிய விழுமியக்கூறுகள் - அகமும் கற்பும் - முல்லை, நெய்தல்நில அகம் - திருமணம் - குடும்பம் - மக்கட்பேறு – வாயில் மரபு – அகவாழ்வில் தோழி – செவிலியின் மரபுகள் - பாங்கன் - சான்றோர் - இற்செறிப்பு – வெறியாட்டு - இடந்தலைப்பாடு – உடன்போக்கு – காமம் - காதல்நெறி – புறநிலை சமூக விழுமியங்கள் - துணங்கைக் கூத்து – மகட்பாற்காஞ்சி – போர் - போர்விழுமியங்கள் - போர்க்காரணம் - படை – அமைதி முயற்சி – போர் அறம் - நடுகல் - நீதி – மன்னர் - மரபும் விழுமியமும் - அறம் - சமூக அறம் - சமூக அறமும் புறநிலை விழுமியமும் - காடு வாழ்த்து என்னும் தலைப்புகளின் வழி சங்ககால அகவாழ்விலும், புறவாழ்விலும் தமிழர் தம் சமூக மரபுகளாக உள்ள செய்திகளை இவ்வியல் ஆராய்ந்து அமைகின்றது.

**இயல். நான்கு. வாழ்வியல் விழுமியங்கள்**

வாழ்வியல் மாண்புகள் என்னும் ஐந்தாவது இயலில் சங்க இலக்கியப் புலவர்கள் தோன்றிய காலத்திற்கு முன் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைத்தரம் - வாழ்வு முறை – வாழ்வியல் பண்பாடுகள் போன்றவற்றை சங்க கால புலவர்கள் தம் கால மக்கள் எங்ஙனம் மரபாக பேணி ஏற்றியும், போற்றியும் வாழ்ந்தார்கள் என்பது பற்றியும், சமகால வாழ்வியல் நிலையோடு மெய்ப்பிக்கின்றது. இத்தன்மைகளாக சங்ககால சமூகம் - சமூகமும் இலக்கியமும் - வாழ்வியல் கூறுகள் - அறமெனப்பட்டதன் இல்வாழ்க்கை - இறைவழிபாடு – விருந்தோம்பல் - விளையாட்டு – அணிகலன் - திருமணம் - பழக்கவழக்கம் - விலங்கினம் வளர்தல் - பல்வேறு தொழில்கள் - அன்றாட நிலைகள் - வாழ்வு பேணும் முறைமை போன்ற தலைப்புகளில் அமைந்துள்ள நிலைப்பாடுகளை நிரல்படுத்தி அமைகின்றது.

வாழ்க்கைக்கு இலக்கணம் கூறும் சங்க இலக்கியப் பாடல்கள் தமிழுக்கே உரிய சிறப்பிலக்கணமாக அமையப்பெற்று, அகப்புற உள்ளத்தின் உணர்ச்சிகளை சங்க இலக்கியம் பொருத்தமுற வடிவமைத்து தருகின்றது. பழந்தமிழர்களின் வாழ்வில் ஏற்றம் போற்றிய இலக்கிய இலக்கண வழிமொழிதல்களையும், சமூக மாண்புகளை

ஆய்வுக்குட்படுத்தி. பின்னையோரின் நினைவுக்கும் நினைவுறுத்துகின்ற மரபு வழிப்பட்ட போற்றுதலுக்கு உய்த்துணரச் செய்துள்ளன. சங்க கால மக்களின் நிலைபாடுகளாக அறிவாற்றல், பண்பாடு, திறனுட்பம், புலப்பாட்டு நெறி யாவும் ஆய்ந்துணர்ந்து உலகத்தார் உய்த்துணர விளக்கப்பட்டுள்ளன. அவர்தம் நுண்மான் நுழைபுலன் மிக்க கோட்பாடு நெறிகள் அனைத்தும் சுருக்கமாக தரப்பட்டுள்ளன. பல்வேறு ஆய்வுகள் நிகழ்ந்த வண்ணம் இருந்தாலும் அனைவரும் ஒப்புக் கொள்ளத்தக்க கருத்துக்களை ஒருங்கிணைத்து ஆராய்ந்து ஏற்புடையதாக உணரவைக்கப்பட்டுள்ளது.

இயல்களின் முடிவில் ஆய்வுரைப் பகுதியில் கண்ட இன்றியமையா மெய்ம்மைகளின் அடிப்படையில் ஆய்வேட்டின் முடிவில் ஆய்வு நிறைவுரை கொடுக்கப்பட்டுள்ளதோடு. ஆய்வதற்கான தலைப்புகளின் உண்மைகள் தொகுப்புரைகயாக அமையும். ஆய்வுக்குத் துணைநின்ற முதன்மை, துணைமை ஆதாரங்கள், துணை நூற்பட்டியல் பிரிவில் நிரல்படுத்துப்படுகின்றன.

**முடிவுரை**

**இயல் - ஒன்று: சங்க இலக்கியத் தோற்றப் பின்னணி** என்ற இயலில் தமிழின் மாண்பும், தமிழரின் மாண்பும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. தமிழில் தோன்றிய அனைத்து வகை இலக்கியத்திற்கும் முன்னோடியாக திகழ்ந்தவை சங்க இலக்கியமாகும். சங்க இலக்கியத்தின் அமைப்பும், திணைப்பகுப்பும், ஐந்திணை நிலத்தில் வாழ்ந்த மக்களின் மரபியல் விழுமியங்கள் ஆகியவை நாம் பின்பற்றும் வகையில் செவ்வனே எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**இயல். இரண்டு. சங்க இலக்கியத்தில் விழுமியங்கள்** என்ற இயலில் விழுமியம் என்ற சொல் மிகுதியாக கையாளப்பட்டுள்ளன. மதிப்புமிக்க விழுமியச் செயல்களாக மனிதனின் செயல்பாடுகள் விளங்குவதை பறைசாற்றுகின்றன. சங்க கால மனிதன் தலைமைப்பண்பு, அறிவு, கல்வி தொழில் என பல்வேறு வகையில் பெருமதிப்புடன் நடந்துக்கொண்டதை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

**இயல். மூன்று. அகப்புற சமூகமரபுநிலை விழுமியங்கள்** என்ற இயலில் ஒரு மனிதனின் அகவாழ்க்கை மற்றும் புறவாழ்க்கையில் அவனின் மேம்பட்ட செயல்பாடுகள் பெருமைகளாக இவ்வியலில் பேசப்படுகின்றன. ஒரு மனிதனுக்கு அகமும், புறமும் இரு கண்கள் போன்றவை, இவற்றை சரியான வகையில் கட்டிக்காப்பவனே தலைசிறந்தவனாக கருதப்படுகிறான். மக்களின் செயல்திறன் சிறப்புற்றிருந்தால் அச்சமுதாயமே சிறப்புற்று இருக்கும் என்பதை இவ்வியல் வலியுறுத்துகின்றன.

**இயல். நான்கு. வாழ்வியல் விழுமியங்கள்** என்ற இயலில் மனிதனின் வாழ்வியலை எடுத்துரைக்கின்றன. 'விழுவதெல்லாம் எழுவதற்கே' என்ற பழமொழியை மெய்ப்பிக்கும் வகையில் சங்ககால மக்களின் ஆரம்ப வாழ்க்கை போரட்டமான வாழ்க்கையாக இருந்தாலும், மக்கள் நற்குணத்துடன் வாழ்ந்து வந்தனர். இன்றைய நாகரிக வாழ்க்கைக்கு அடிக்கோலூன்றிய பல்வேறு தொழில்களுக்கு வித்திடும் வகையில் சங்ககால மக்களின் தொழில்வளம் சிறந்து காணப்பட்டன. ஒரு சமுதாயம் மேன்மையுற ஒவ்வொரு மனிதனின் குணம், செயல்திறன். தொழில்வளம் ஆகியவை சிறந்திருந்தாலே அச்சமுதாயம் ஒளிவீசி காணப்படும் என்பதை மரபுவழி விழுமியங்களாக சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. இவற்றை எடுத்துரைப்பதே இவ்வாய்வேட்டின் நோக்கமாகும்.

**முடிவுரை**

ஒவ்வொரு இயலின் இறுதியிலும் கண்டறியப்பட்ட முடிபுகள் தொகுக்கப்பட்டு முடிவுரையாக அமைக்கப்பட்டுள்ளது.

**துணைநூற்பட்டியல்**

இவ்வாராய்ச்சிக்குப் பயன்பட்ட நூல்களின் பட்டியல் பின்னிணைப்பாக அகர வரிசையில் தரப்பெற்றுள்ளது.

**பின்னிணைப்பு**

இவ்வராய்ச்சியில் இடம்பெற்றுள்ள அரிய செய்திகள் பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளது.

# இயல் - ஒன்று

## சங்க இலக்கியத்தின் தோற்றப் பின்னணி

**முன்னுரை**

**"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவ தெங்கும் காணோம்"1** என்ற பாரதியின் பாடல் வரிகளுக்கேற்பப் பழம்பெருமை வாய்ந்த தமிழ்மொழி செம்மொழி என்று அங்கீகாரம் பெற்றிருப்பது அதன் பெருமைக்குப் பெருமைச்சேர்க்கும் மணிமகுடமாய் விளங்குகிறது. உயர்தனிச் செம்மொழியாக உயர்வினைப் பெற்றுள்ள தமிழின் பொருள் அழகு, இனிமை என்பதாகும். அதனால் தான் இம்மொழியைத் தேன்தமிழ், தீந்தமிழ் என்று அடைமொழியிட்டு அழைத்தனர். தமிழ் மொழியின் சிறப்புக்களை எளிதில்கூறி முடித்துவிட முடியாது. தமிழரின் தலை இலக்கியமாய்த் தன்னிரகற்ற இலக்கியமாய் தரணியில், தமிழின் புகழ்பாடும் ஒப்பற்றப் படைப்பாய்த் தமிழ்மொழி விளங்குகிறது. இம்மொழி இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழைப் பெற்றுள்ள சிறப்புமிக்க மொழி என்றால் அது மிகையன்று. **இயல்** தமிழ் படிப்பவர் எண்ணங்களை வளர்க்கிறது. **இசைத்தமிழ்** உள்ளத்தை உருக்கி மகிழ்விக்கிறது. **நாடகத்தமிழ்** நடித்துக் காட்டி மக்களை நல்வழிப்படுத்துகிறது. இத்தகைய சிறப்புகளையுடைய தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நமது நாட்டிற்குச் செந்தமிழ்நாடு என்று பெயர் வைத்தவர் மகாகவி பாரதியார். இதில் நாட்டிற்கு அடைமொழியாக நமது மொழியும் அதேபோன்று மொழிக்கு அடைமொழியாகச் செம்மையும் என்று அமைந்திருப்பது இதன் தனிச்சிறப்பாகும்.

தமிழ்மொழி உலகமொழிகளில் மிகவும் முதன்மையானது. உலக மொழிகளுக்கெல்லாம் பழமையானமொழி தமிழ் என்பது இன்றைய உலகில் ஆராயப்பட்டு பன்மொழி அறிஞர்களின் பட்டறிவின் மூலம் இன்றைக்கு ஒத்துக்கொள்ளப்பட்ட முடிவாகும். அம்மா என்று மகவு அழைத்தால் தாய்க்கு ஒரு பெருமை மகிழ்ச்சி எனலாம். தமிழ்மொழியின் மேன்மை உலகெல்லாம் உணர்ந்து உரைக்கப்பட வேண்டும். இது தமிழ் உள்ளங்களின் நெடுங்கால பேரவாவாகும்.

மனித வாழ்வின் கருத்தேற்றங்களுக்குக் காவலாய்ப் படைக்கப் பெற்ற இலக்கியங்களே வாழ்வியல் இலக்கியங்களாகத் தகுதிப் பெற்றன. அவை தாம் எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் என்பர். ஒத்த சிந்தனைகள் ஒருமித்த ஆற்றலுடன் வெளிப்படும் போது நல்லதொரு மாற்றங்களைச் சமூகம் எதிர்கொள்கிறது. அவற்றின் விளைவுகளை காலத்தின் தேவைகளுக்கேற்ப, தெரிந்து பயன்படுத்தும் போது அவை சிறப்பானதாகவும், சங்க இலக்கிய நூல்களுள் முறையானதாகவும் நெறிமுறைகளாகப்

பின்பற்றப்பட்டுள்ளன. பழந்தமிழ் இலக்கியங்களின் அடிப்படையிலான சமூக கருத்தேற்றங்களைக் கொண்டு ஆய்வாளர்கள் வாழ்வியல் கூறுகளைப் பல்வேறு நிலையில் வெளிப்படுத்தியுள்ளனர்.

சங்க இலக்கியங்கள் அக்கால மனிதனின் அடிப்படையான சமூக அமைப்பின் கட்டமைப்புகளைக் கொண்டு பழமையானதாக சான்று பகர்கின்றது. இதனை, ''இன்று பேச்சு வழக்கில் உள்ள இந்திய மொழிகளின் இலக்கியங்களில் மிகப் பழமையானது சங்க இலக்கியமே என்பது ஆய்வாளர்கள் கண்ட முடிவாகும்''**2**. ஒவ்வொரு நாட்டு இலக்கியங்களும் அந்நாட்டு மாந்தர்களின் பண்பாட்டு நெறிமுறைகளுக்கு உட்பட்டு வழிக்காட்ட வேண்டும். ஆகவே இலக்கியங்கள் அனைத்தும் காலத்தின் தேவைக்கு ஏற்ப தன்னுணர்வுச் சிந்தனைகளை வெளிப்படுத்திக் கொண்டே இருக்க வேண்டும். இவ்வாறான நிலையில் **''கடிசொல் இல்லை காலத்துச் படினே''**[3] என்ற புதுமைகளையும், இலக்கிய வகைமைகளுக்கத் தொல்காப்பியர் சான்று பகர்ந்துள்ளார்.

### 1.1 தோற்றக்களம்:-

சங்க இலக்கியங்கள் என்பது காலம் கடந்த இலக்கிய வளத்தின் அடையாளம் எனலாம். இவ்விலக்கியக் காலத்தின்களம் பிற்போக்கு (நவீனத்துவ) நிலைமையை உணரமுடியாததாகவும், மிகவும் முந்தைய காலக் கட்டத்தை உடையதாகும். சமூகத்தின் பின்புலத்தைக் காண உதவும் என்பது மனித சிந்தனையைப் பல்வேறு சூழலில் வெளிப்படுத்தும் நோக்கம் உடையதாகும். இத்தகையச் சூழலில் பழங்கால மக்களின் வாழ்வியல் ஒரு தனிமனிதனின் ஆற்றல் உணர்வாக இல்லாமல், சமுதாய உணர்ச்சியின் செயல்திறனாக இவ்விலக்கியங்களாக பிரதிபலிக்கின்றது. எக்காலமும் ஏற்றுக் கொள்கின்ற சமுதாயப் பண்பாட்டுத் தளமாகவும், திறனாய்வு முகமைக்கும் உட்பட்டு, அவை பயன்படுத்தும் வகையில் வெளிப்படுத்தும் பயன்பாடே மனித சமுதாயத்தின் காலத்தேவை எனலாம். இத்தேவையே சங்க இலக்கியத்தின் முழுமையாகும். இலக்கியம் ஒரு மனிதனின் வாழ்க்கையைப் புரிந்துக்கொள்ளும் களமாக அமைந்தால் அதுவே பண்பாட்டின் மரபார்ந்த விழுமியச் சிறப்புத் தகுதியைப் பெற்றுவிடுகின்றது.

''பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வாழ்ந்த மக்களின் வாழ்வியல் அமைப்பை அறுதியிட்டுக் கூறுவதென்பது முடியாத ஒன்றாகும். ஆய்வாளர்கள் சங்ககாலத்தை அனுமானத்தால் தான்(பொருண்மையின்) அடிப்படையில் கண்டு தெளிகின்றனர். சங்க காலத்திற்கு முற்பட்ட இலக்கண நூல் தொல்காப்பியம். இன்றும் முழுவதுமாக கிடைக்கப் பெறுகின்றது. இந்நூலுள் அமைந்துள்ள அகப்புற செய்திகள் அனைத்தும், சங்க காலத் தமிழ் மக்களுடையதாகும் என்று தெ.பொ.மீனாட்சி சுந்தரனாரின் கருத்தினின்று தொல்காப்பியம் சங்க இலக்கியத்தின் வழிகாட்டி''[4] என்பது ஆய்வினால் புலப்படுகின்றது. பல இலக்கணக் கூறுகளைக் கொண்ட தொல்காப்பியம் இலக்கிய விதிகளுக்கு உட்பட்டதெனவும், அதன் காலம் கி.மு. 4நூற்றாண்டாகக் கணிக்கப்படுகிறது.

சங்க நூல்களுக்குரிய சொல்லமைப்பை விளக்க இயலும் **தொல்காப்பியம்** மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களைக் கூறும் போது **“சகரக் கிளவியும் அவற்றோரற்றே அ ஐ ஔ வெனும் மூன்றலங்கடையே”**[5] என்று கூறப்பெற்றுள்ளது. அவை சங்க காலத்தில் மொழி முதல் எழுத்தாக ‘ச’ பயன்படும் மாற்றத்தை கீழ்வரும் பாடல் சான்றாக அமைகின்றது. **“சகடம் பண்டம் பெரிது பெய்நன்றே”**[6] என்றும், **“அந்துவன் பாடிய சங்க கெழு நெடுவரை”**[7] மேற்காணும் சான்றுகளில் தொல்காப்பியர் காலச் சொல்லடைவுக்குச் சங்க இலக்கியம் சான்று பகர்ந்துள்ளதைக் காணமுடிகிறது. பண்டைக் காலத்தில் தமிழ்மொழியை வளர்த்தது சங்கம் என்ற அமைப்பேயாகும். ஆயினும் அவை தலை, இடை, கடை என மூன்று சங்க அமைப்புகளாக இருந்தனவென்று ஆராய்வதனால் புலனாகின்றது.

தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் இருந்தன. சங்கம் என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இது பிற்காலத்தில் தோன்றிய வழக்குச்சொல் என்பர். சங்கம் என்னும் சொல் சமண பௌத்த சமயத்தவரால் கையாளப்பட்டது என்பர். பின்னர் இறையனார் அகப்பொருள் உரையில் நக்கீரர் சங்கம் என்ற சொல்லைப் பலமுறை பயன்படுத்தியுள்ளார். சங்கம் என்னும் சொல் சபை, அவையம், புணர், கூட்டு எனப்பல பொருளில் வழங்கப்படுகிறது. தொல்காப்பியர் சங்கம் என்பதை அவையம் என்று பொருளில் சுட்டுகிறார். அதாவது, **“நிலந்திரு திருவிற் பாண்டியன் அவையத்து”**[8] என்று தொல்காப்பியப்பாயிரம் குறிப்பிடுகிறது. சங்க காலத்தில் புலவர்களும், பாணர்களும், பாடினியர்களும், ஊர்விட்டு ஊர்ச்சென்று தமிழ் மன்னர்களின் அவைகளில் அவர்களின் புகழினைப் பாடிப் பரிசில் வாங்கிச் சிறப்பித்ததோடு மட்டுமல்லாமல் அவையங்களையும் ஏற்படுத்தித் தமிழைப் போற்றினர். அத்தமிழைப் புலவர்கள் பலர் கூடி ஆராய்ந்துள்ளனர். அவற்றிற்கு மாங்குடி மருதன் என்ற புலவன் தலைவனாக இருந்தான் என்ற செய்தியைப் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.

**“ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவனாக**
**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்**
**புலவர் பாடாது வரைக என்நிலவரை”**[9]

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியதாகும். சங்க காலத்தில் பாண்டியன் அவையில் புலவர்கள் பலர் சென்று கூடி ஆராய்ந்ததும், பின் புதுமைச் சொற்கள் பலவற்றை உருவாக்கியும் மகிழ்ந்தனர் என்று பல்வேறு சான்றுகள் கூறுகின்றன.

**“பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுச் செல்வர்க்கு**
**முதுமொழி இடன்மாலை வினைவர்போல் வல்லவர்**
**செதுமொழி சீத்த செவி செறுவாக**
**முதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனல்ஊர”**[10]

இப்பாடல், புலவர்கள் உருவாக்கிய புதுமொழிகளை அரசனும், புலவர்களும் கேட்டு மகிழ்ந்தனர் என்று சுட்டுகின்றது. இளவேனில் காலமாகிய சித்திரை, வைகாசி மாதங்களில் மதுரையில் புலவர் கூட்டங்கள் நிகழ்ந்துள்ளன என்று கலித்தொகை சுட்டுகின்றது.

**“நிலன் நாவில் திரிதருஉம் நீர்மாடக் கூடலார்**
**புலன் நாவில் பிறந்தசொல் புதிது உண்ணும் பொழுதன்றோ**
**பலநாடு நெஞ்சினோம் பிரிந்து நாம் விடுத்தகால்**
**சுடர் கிழாய் நமக்கு அவர் வருவதும் என்று உரைத்ததை”**[11]

பாண்டியன் புலவர்களை அழைத்து மகிழ்ந்ததை மதுரைக்காஞ்சியில் சுட்டப்படுகிறது.

**“தொல்லாணை நல்லாசிரியர்**
**புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்**
**நிலந்தரு திருவின் நெடியோன் போல”**[12]

என்கிறது. இதனால் மதுரை எப்பொழுதும் தமிழால் மலர்ந்து மக்களுக்கு மகிழ்வைத் தந்துகொண்டிருந்தது என்று சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது.

**“தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை”**[13]

என்கிறது. சங்கம் இருந்தமைக்குப் பிற்கால இலக்கியங்கள் மிகுதியான சான்றுகள் தருகின்றன. சங்கம் நிறுவிப் புலவர்கள் அனைவரும் கூட்டமாக ஒன்றுகூடி நூல்கள் இயற்றினர் என்று பெரிய புராணம் கூறுகிறது. கம்பர் சங்க முத்திரை பெற்றப் பின்னரே தம் காவியத்தை அரங்கேற்றினர் என்று கதையில் வழங்கப்படுகின்றது. வைணவத்தின் இருகூறுகளாக விளங்கும் வடகலை, தென்கலைக் குழு பரம்பரைச் செய்திகள் பற்றிய திருவாய்மொழி நூலானது சங்கப்பலகை ஏறியதெனக் கூறுகின்றனர். பழையதும் பிந்தியதுமான இரண்டு திருவிளையாடற்புராண நூல்களுள் **சங்கப் பலகை தந்த படலம்** எனச் சங்கத் தோற்றத்தை முப்பத்தெட்டுப் பாக்களில் கூறுகின்றது என்று அடைக்கலசாமி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பிற்காலத்தில் எழுந்த தேவாரம், ஆழ்வார் பாடல்கள், திருக்கோவையார், சின்னமனூர்ச் செப்பேடுகள் போன்றவற்றில் சங்கம் இருந்ததற்கான சான்றுகள் காணப்படுகின்றன. திருமங்கையாழ்வார் சங்கமுகத்தமிழ், சங்கமலித்தமிழ் என்று தமிழைக் குறிப்பிடுகிறார். திருநாவுக்கரசர் சிவன், தருமிக்கு அருளியதைக் கூறும் போது, **“நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி”**[14] என்கிறார். **“சங்கத்தமிழ் மாலை முப்பதும்”**[15] என ஆண்டாளும், **“தலைச் சங்கப் புலவனார் தம்முன்”**[16] எனச் சேக்கிழாரும், **“சங்கத் தமிழ் மூன்றும் தா”**[17] என ஔவையாரும், **“தமிழ்ச் சங்கம் சேர்கிற் டிரேல்”**[18] எனக்கம்பரும் சங்கம் என்ற சொல்லைப் பல்வேறு இடங்களில் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது.

கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சின்னமனூர்ச் செப்பேடும் தமிழ்நாட்டில் சங்கம் இருந்தமையைச் சுட்டுகின்றது.

**“மகாபாரதம் தமிழ்ப் படுத்தும்**
**மதுராபுரிச் சங்கம் வைத்தும்”**[19]

என்கிறது. எனவே மதுரையில் அமைந்த சங்கம் மகாபாரதத்தைத் தமிழ்ப்படுத்தியுள்ளதாகக் குறிப்பிடுகின்றது. இவ்வாறு சங்கம் இருந்தது என்பதைப் பல்வேறு சான்றுகள் உணர்த்துகின்றன.

## 1.2 சங்க இலக்கியம்

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகில் எந்தமொழி செம்மையான இலக்கிய இலக்கணங்களைப் பெற்றுள்ளதோ அம்மொழி நீண்டதோர் வரலாற்றைப் பெற்றிருக்கும். இந்நிலையில் உயர்தனிச் செம்மொழியாகத் தமிழ் திகழ்கின்றது. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்க்கூறும் நல்லுலகத்துத் தமிழ் வழக்கில் இருந்தாலும் சிறப்பாக வளர்க்கப்பெற்றது பாண்டிய மண்ணில் தான் என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்கின்றார்கள்.

**“பொருப்பிலே பிறந்து தென்னன்**
**புகழிலே கிடந்து சங்கத்து**
**இருப்பிலே இருந்து வைகை**
**ஏட்டிலே தவழ்ந்த பேதை**
**நெருப்பிலே நின்று கற்றோர்**
**நினைவிலே நடந்தோர் என**
**மருப்பிலே பயின்ற பாவை**
**மருங்கிலே வளருகின்றாள்”**[20]

என்று வில்லிபாரதச் சிறப்புப் பாயிரம் இக்கருத்தை உறுதி செய்வதை அறியலாம். மேலும் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த வரலாறு பழம்பெருமையாகப் பேசப்படுகிறது. இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளாகத் தனக்கென நாட்டு வரலாறும், மொழி வரலாறும் கொண்ட தமிழகம் தன்மொழியை வளர்ப்பதில் தனிக்கவனம் செலுத்தியது.

தமிழகத்தின் வடஎல்லை வேங்கடமாகவும். தெற்கெல்லை குமரி முனையாகவும், கிழக்கு மேற்கு எல்லைகள் கடல்களாகவும் விளங்கின. இவ்வெல்லைக்குள் சேர, சோழ, பாண்டிய நாடுகளை முடிமன்னர்களும் பிற நாடுகளைக் குறுநில மன்னர்களும் ஆண்டனர். இவர்கள் புலவர்களை ஆதரித்து அவர்களின் வறுமையைப் போக்கினர். புலவர்களும் தங்கள் புலமையை மன்னரிடம் காட்டிப் பரிசுகள் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தனர். சுமார் எழுநூறு ஆண்டுகள் கொண்ட காலத்தை (கி.மு.500 – கி.பி.200) சங்ககாலம் என்று கூறுவர். இக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களையே சங்க இலக்கியங்கள் என்பர்.

கி.மு.500-இல் தமிழ்நாட்டில் மாற்றார் நுழையாத காலம். எனவே இக்காலத்தில் இலக்கியங்கள் வேற்றுமொழிக் கலப்பின்றிச் சொந்த மண்ணின் பண்பாட்டு மணத்தோடு பொதிகைத் தென்றலாய் இயற்கைச் சூழலில் இலக்கியங்கள் தோன்றின.

சங்க இலக்கியங்கள் தோன்றிப் பெருமைடைய காரணமாக இருந்தவை முச்சங்கங்கள். முதற்சங்க காலத்தின் இறுதியும், கடைச்சங்க காலத்தின் தொடக்கமுமாக அமைந்த காலகட்டத்து முதல் முழு இலக்கண நூலாகத் தொல்காப்பியம் நிலைபேறுடையதாக அமைகின்றது. தொல்காப்பியத்திற்கும் சங்க இலக்கியத்திற்கும் கடைச்சங்கத்திற்குமான இடைப்பட்ட பகுதியாகும். ஆயினும் தொல்காப்பியம் தோன்றி 3700 ஆண்டுகளுக்குப் பின் சங்க நூல்கள் அனைத்தும் தோன்றியிருக்கலாம் என்பது ஆய்வாளர்களால் கணக்கிடப்படுகின்றதை ஆய்வினால் உய்த்துணர முடிகிறது.

### 1.3 இலக்கியத்தின் பாடுபொருள்:

ஒரு இலக்கணம் இலக்கியத்திற்கான மையத்தைப் பாடுபொருள் வடிவமைக்கின்றது. அதன் கட்டமைப்புக் குன்றாமல் இலக்கியத்திற்கான தகுதிபாடுகளை அதன் இலக்கணத்தைப் பின்பற்றுவதாகும். இன்று கிடைக்கும் தமிழ் நூல்களிலும், முச்சங்க நூல்களிலும் தொன்மையுடையதாகவே தொல்காப்பியம் திகழ்கின்றது. ‘இலக்கணத் தன்மையினும் இலக்கிய தன்மை அதனில் மிகுந்ததனால் அது காப்பியமென்றே அழைக்கப்பெற்றது’[21] என்று டாக்டர் மூ. கோவிந்தசாமி கூறுகிறார். மனித வாழ்க்கைக்கு வழிகாட்டும் முதல் நூலாக அமைந்துள்ளது. கிட்டதட்ட 5000 ஆண்டுகளுக்கும் மேலான நாகரிகத் தொன்மைக் கொண்ட தமிழர்களின் வாழ்வியலைக் காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குகிறது. அகப்புற வாயில்களாக முதல், கரு, உரி என்ற பாடுபொருள் கொண்டதாக அமைவது.

**“முதற் கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலும் காலை முறை சிறந்தனவே**
**பாடலும் பயின்றவை நாடுங் காலை”[22].**

என்கிறது தொல்காப்பியம். அகம் என்பது ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பமாகும். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாகமல் இருப்பர். ஆகையால் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்று கூறுகின்றனர். மனித வாழ்க்கையோடு தொடர்புகொண்ட அறிவார்ந்த நிலையின் பண்பாட்டை விளக்கும் வாழ்வியல் உறுதிப் பொருள்களான அறம், பொருள் என்னும் நெறியில் தனிமனிதநிலை, சமூகவியல்நிலைகளை உள்ளடக்கியதாக சங்க இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. அவை தாம், களவு, கற்பு, கல்வி, வீரம், ஒழுக்கம், புகழ், அறிவு, ஆளுமை, அறம்,

வாய்மை, நட்பு, மனிதநேயம் ஆகிய நிலைபேறுகளாக அமைத்துப் பாடியுள்ளதன் சிறப்பு ஆய்வினால் உற்றுநோக்க காணலாம்.

**மொழி கட்டமைப்பு:**

சங்க இலக்கியக் காலச் சூழலின் மொழியமைப்பு என்பது அக்கால இலக்கியங்களின் தகுதி பற்றியதாகும். மொழியமைப்பு அதன் பாடுபொருள் விளக்கும் முகமாக மனித உணர்வுகளுக்கு வழிகோலுகின்றது. மொழியினுள் பாடலின் அமைப்பும், அப்பாடலின் கருத்துச் செறிவும் விளக்குவதுமாக அமைவனவாகும். ஓசையினின்று பிறக்கும் கருத்து வளம் குன்றியிருந்தால் அதன் இலக்கணமும் அது சார்ந்த இலக்கியமும், காலச்சுழலில் மறைந்து போகும். அப்பொழுது மொழியின் தன்மையை மொழியிலாளர்க்கு உணர்த்தும் நிலைபெற்று இலக்கணப் பொதுமையைத் தொடரச்செய்வதென்பர். வழக்குமொழியும், செய்யுள் மொழியும் இருநிலை பாங்கில் சங்க இலக்கியம் எழுதப் பெற்றதாகும். 'தமிழ்கூறு நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலியன எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தோடு'[23]**.** என்று தொல்காப்பிய சிறப்பு பாயிரம் கூறுகின்றன. மொழி மனிதனின் எண்ணங்களைச் சுமந்து செல்லுவது மட்டுமின்றி அந்த எண்ணத்தோடு இரண்டறக் கலந்து நிற்பதும் அதுவே மொழியையும் மனித எண்ணத்தையும் ஆராய்ந்த பல்வேறு அறிஞர்கள் இவ்விரண்டும் மனிதனுக்கு கிடைத்த ஒப்பற்ற பரிசாக கருதுகின்றனர். ஒன்றிலிருந்து மற்றொன்றை பிரிக்க முடியாது என்றும் மனித இனத்தின் கலாச்சாரம் அதன் எண்ணம் போன்றவற்றை அவ்வினத்தின் மொழிப் பண்புகளைத் தெரிந்துக் கொண்டே ஆராய்வதாகும்.

**“நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்”[24]** என்பது பண்டைய தமிழரின் வாழ்க்கை நலன்களான கற்பனையையும், வழக்கையும் பேசுவது இலக்கியமாகும். இலக்கியம் தோற்றம் பெற உணர்ச்சிகளே வடிவமாக மாறி, ஆழமுடைத்தான கருத்தாக்கப் படைப்பாக்கம் பெறுகின்றது. வாழ்க்கையைப் படைப்பதும், வாழ்க்கைக்கான ஆசைகளைக் கற்பனையாகத் திட்டமிடுவதுமான இருவேறு போக்குகள் சங்க காலத்திலிருந்த வழக்காறுகளாக காணமுடிகிறது.

சங்கச் செய்யுட்கள் உலக இலக்கியங்களில் காணப்பெறும் பல்வேறு இலக்கியப் பண்புகளையும், இலக்கிய உத்திகளையும் மிக அருமையாக தத்ரூபமாகக் கொண்டுள்ளவை.“சிறந்த இலக்கியங்களில் காணப்படும்பண்பு(Excellence),உலகப்பொதுமை(University),கட்டுப்பாடு(Modrcation), கண்ணியம் (Diginity), கற்பனைத்திறன் (Imagination), கவிதை அழகு(Poetic beauty), பெருந்தன்மை கொண்ட பெருமையான போக்கு(Nobility), கருவும் உருவும் ஒன்றியைந்து இரண்டறக் கலந்தது உள்ளத்தே உறையும் நிலை(Protion of structure and the union of form), சமன்நிலை(Balance) போன்ற சிறந்த கவிதைப் பண்புகளை சங்க இலக்கியம் இடமளிக்கின்றன”[25]**.**

**இலட்சியம்**

அகம் அல்லது புறம் ஏதாவதொன்றை இலக்காகக் கொண்டு பாடுவதையே இலட்சியம் என்கிறோம். இலக்கு + இயம் என்பது இலக்கினை இயம்புவதால் இலக்கியமாக(இலட்சியம்) இருத்தல் வேண்டும் என்று பொருள் கொள்ளப்படுகிறது. இங்கு இலட்சியம், குறிக்கோள் அல்லது இலட்சியத்துடன் செயல்பட வேண்டும். அப்போது தான் எந்த இலட்சியத்தையும் நிறைவேற்ற முடியும். இலட்சியம் என்பது வாழ்க்கைக்கு அடிப்படையான ஒன்றாகும். அதுபோல் இலக்கியங்களும் சிறப்பான இடத்தைப் பிடிப்பதற்குத் தன்னிரகற்ற தனித்தன்மைகளைப் பெற்றிருக்க வேண்டும். அத்தகைய தன்மையைச் சங்க இலக்கியத்தில் காண முடிகின்றது.

## 1.4 இலக்கிய வளம்

சங்க இலக்கியம் அகம், புறம் என்ற இரண்டு தலைமைக் கூறுகளை உடையது. தமிழைச் செம்மொழியாக்கும் தகுதிகளுள் ஒன்றாக இலக்கிய வளம் பேசப்படுகிறது. இலக்கியம் மனிதனை மனிதனாக்கும் இயல்புடையது. எழுத்தும் மொழியும் என்று தொடங்கியதோ அன்று தொட்டே இலக்கியவளம் மனித வாழ்வோடு ஒன்றிவிட்டது என்பர். **“பலாப்பழத்தைச் சிறுசுளை பெரும்பழம் எனவும்”**[26] **“முயலை நெடுஞ்செவிக் குறுமுயல் எனவும்”**[27], **“ இலை அடர்ந்து நிழல் படரும் பொழிலை வெயில் நுழைவு அறியாக் குயில் நுழை பொதும்பர் எனவும்”**[28] பாடியுள்ளனர். இப்பாடல்கள் இலக்கியவளம் பெற்றுத் திகழ்வதை அறிய முடிகின்றது. மேலும் தொல்காப்பியம் இலக்கண நூல் மட்டுமன்று இலக்கிய நூலுமாகும். இந்நூலில் இலக்கியச் சாயலையும், இலக்கியம் தோன்றுவதற்கான அடிச்சுவட்டையும் காணலாம். இலக்கணம் தத்துவத்தோடும் தர்க்கநீதியில் இணைந்து வளராமல் இலக்கியத்தோடு ஒன்றி வளர்நத காலத்தில் தொல்காப்பியம் தோன்றியது. ஆதலால் இலக்கியச் சாயல் தொல்காப்பியத்தில் ஒளிவிடுகின்றது என்பதை,

**“தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதினால்**
**அந்தமில் சிறப்பின் மக நெருங்கினும்”**[29]

**“காதல் எங்கையர் காணின் நன்றென**
**மாதர் சான்ற வகையின் கண்ணும்”**[30]

என்ற வரிகள் சிறந்த இலக்கியப்போக்கு உடைய நூல் தொல்காப்பியம் என்பதற்குச் சான்றாகத் திகழ்கிறது.

**விழுமியம்**

தொன்மை என்னும் சொல்லிற்குப் பழமை என்று பொருள் கூறுவர். தமிழ்மொழி இலக்கிய வளமும், இலக்கண வளமும் மிக்கது. தனித்தியங்கவல்லது. காலந்தோறும் நிகழ்ந்துக் கொண்டிருக்கும் புதிய சமூக, பொருளியல், அரசியல், பண்பாடு மாறுதல்களுக்கு ஈடுகொடுக்கவல்லது. உலகின் தொன்மையான நாகரீகங்களில் ஒன்று தமிழர் நாகரிகம், மிகப்பழமை வாய்ந்த இனம் தமிழினம் அவற்றை,

**“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு**
**முன்தோன்றிய மூத்தக்குடி”**[31]

என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுவதால், தமிழினத்தின் தொன்மை புலப்படுகிறது. இவ்வுலகில் தமிழரைப்போல் முன்பு உயர்ந்தவன் இல்லை முதன்முதல் நாகரீகம் விளக்கேற்றி நானிலம் முழுவதும் அறிவொளி பரப்பியவன் தமிழன். ‘எங்கு முதல் மனிதன் தோன்றினானோ அங்கு தான் ஞாலமொழியும் தோன்றியிருக்கமுடியும். குமரி முதல் இமயம் வரை அவன் பேசிய மொழியே முதன்மொழி. அதுவே நம் தாய்மொழியாம் தமிழ் என்று பாவணார் மனிதனின் தோற்றம் குறித்து கூறுகிறார். இன்று உலகில் வழங்கும் மொழிகளின் எண்ணிக்கை குறித்து வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. உலக மொழிகள் 4000 என்றும், 3500 என்றும் 1500 என்றும் வேறுபட்ட எண்ணிக்கையில் கூறுகின்றனர். எது எவ்வாறோ உலகில் பல மொழிகள் தோன்றி வழங்கி மறைந்தன. இவற்றுள்ளும் ஒருசில மொழிகள் மட்டுமே அழியாமல் நிறைபெற்றுள்ளன என்பது உண்மை. இவற்றிலும் கூடச் சில பேச்சு வழக்கு இழந்து இலக்கிய மொழியாக மட்டுமே உள்ளன. இந்நிலையில் உலக மொழிகளில் இன்று பழமையாகக் கருதப்பெறும் மொழிகள் இலத்தீன், கிரீக், சமஸ்கிருதம், தமிழ் முதலான மொழிகளாகும். இவற்றுள் தமிழ் மட்டுமே உயிர்ப்புள்ள வழக்கிலுள்ள மொழியாகத் திகழ்கிறது என்பதைப் பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் எடுத்துரைக்கின்றது.

மூவாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தொல்காப்பியர் தமக்கு முன் வாழ்ந்த தமிழறிஞர்களை, **“என்மனார் புலவர்”**[32], **“யாப்பறி புலவர்”**[33] **“நூல்நவில் புலவர்”**[34], **நுணங்கு மொழிப்புலவர்”**[35] **“தொன்மொழிப் புலவர்”**[36] என்று குறிப்பிடுவார். தொன்மைக் காலத்து வாழ்ந்த தொல்காப்பியரே தமிழைத் தொன்மொழி எனக் கூறுவதை நோக்கும் போது தமிழின் பழமை கற்பனைக் கெட்டாத கடுந்தொலைவானது என்பது புலனாகின்றது.

**“திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்**
**விண்ணோடும் உடுக்களோடும்**
**பொங்குகடல் இவற்றோடும் பிறந்த தமிழ்”**[37].

என்று பாரதிதாசன் பாடுகின்றார் என்றால் தமிழ் மிகத் தொன்மையானது எனலாம். இதில் சிலப்பதிகாரம் காலத்தாலும், கதையாலும், பழமையானது. வடமொழியில் தோன்றிய மகாபாரதக் கதை ஜெயம் என்னும் கதையினை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டதாகக் கூறுவர். அதே போன்று சிலப்பதிகாரக் கதையும் பழங்காலத்தில் வழங்கி வந்தமையைச் சில சான்றுகளால் அறியலாம். சிலப்பதிகாரத் தலைமைப் பாத்திரமாகிய கண்ணகி குறித்த செய்தி நற்றிணையில் இடம்பெற்றுள்ளது. அவை,

**“எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்**
**குருகார் கழனியின் இதனைத் தாங்கண்**
**ஏதிலாளன் கவலை கவுற்ற**
**ஒருமுலை மறுத்த திருமா வுண்ணி”**[38].

இப்பாடலில் இடம்பெற்றுள்ள திருமாவுண்ணி கண்ணிகியாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. பொதிகை மலையானது அகத்தியர் வாழ்ந்து தமிழை வளர்த்த இடம்

என்பர். அந்தப் பொதிகை மலையைப் பெற்ற பாண்டிய மன்னன் என்று குறிப்பிடுவதால் தமிழனின் ஆட்சியானது மிகத் தொன்மையானது என்றே ஆய்வினால் உய்த்துணரமுடிகிறது.

## 1.5 பொதுமைப்பண்பு

பொதுவாக இலக்கண இலக்கியங்கள் உலக நிலையில் பொதுப்பண்புகள் பெற்றுக் காணப்படும். அவை சில நிலைகளில் ஒவ்வொரு மொழியின் இலக்கண இலக்கியங்கள் வேறுபட்டுத் தனித்துவம் பெற்று விளங்கும். எடுத்துக்காட்டாக அகத்திணைப் பாடல்களினல் இடம்பெறும் தலைவன் தலைவியா் பெயா் கூறக்கூடாது என்பது தொல்காப்பியரின் கட்டளை இது.

**“மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**
**சுட்டி ஒருவா் பெயா்கொளப் பெறாஅர்”[39].**

எனச் சுட்டிக் காட்டுகிறாா். இது இலக்கியத்தின் பொதுத்தன்மையைச் சுட்டிக்காட்டுவதோடு இலக்கியங்களில் வேறுபாடு காட்டாத பொதுமை உணா்வாகிய பண்பாட்டு அருமையையும் காட்டுகிறது. இதற்கு மாறாகப் புறவொழுக்கங்கள் மனிதா்களின் வாழ்வை மேம்படுத்துவதாலும் அவா்களுக்குச் சமூகத்தில் உயா்வான மதிப்பீட்டைத் தருவதாலும், புற இலக்கிய மாந்தா்களின் இயற்பெயா்களை வெளிப்படச் சுட்டிக் கூறலாம் என்றும் கூறுகிறாா்.

**“புறத்திணை மருங்கின் பொருந்தி னல்லது**
**அகத்திணை மருங்கின் அளவு தலிலவே”[40].**

என்கிறாா். இக்காலத்தில் நடப்புச் செய்திகளையோ புனைவுகளையோ கதையாகக் கூறும்போது கற்பனைப் பெயா்களால் படைத்து மொழிவதும் அக்காலத்து அகமாந்தா் குறிப்பிட்டுப் பெயா் சுட்டப்படாததும் இலக்கியம் ஒருவா்க்கன்றி எல்லோருக்கும் பொதுவானது என்று உலகப் பொதுமைப் பண்பைத் தொல்காப்பியம் சுட்டுகிறது. உலக இலக்கியங்களில் இந்தப் பொதுமைப்பண்பு உத்தி, பாடுபொருள் இலக்கிய வகைமை அதன் அமைப்பு தோன்றிய காலம் ஆகியவற்றைக் கொண்டு வேறுபடுகிறது. சங்க இலக்கியங்களில் தலைவியின் பெயா், காலம் ஆகியவை சுட்டப்பெறவில்லை. எனவே, உலகின் எல்லா மனிதருக்கும் பொருந்தும் பொதுமைப் பண்பு கொண்டதாகத் திகழ்கின்றது.

**“ஆற்றுதல் என்பது ஒன்று அலா்ந்தவாக்கு உதவுதல்**
**போற்றுதல் என்பது புணா்ந்தாரைப் பிரியாமை**
**பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்”[41].**

ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறைவு, முறை, பொறை போன்றவை உலக மக்கள் அனைவரும் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய பொதுநெறி முறைகளாகும். இவை அனைத்திற்கும் விளக்கம் தருகின்றது கலித்தொகை.

**"கண்டவர் இல்லன உலகத்துள்ள உணராதார்**
**தங்காது தகைவு இன்றித் தாம் செய்யும் வினைகளுள்**
**நெஞ்சு அறிந்த கொடியவை மறையினும்"[42].**

இப்பாடல் உலக மக்களின் இயல்புகளை நன்கு சுட்டுகின்றது. காலம் கடந்து, இடம் கடந்து, சமுதாய எல்லைகளைக் கடந்து நிற்கும் உண்மையான உணர்வினை மிக நுட்பமாகக் கூறுவன அகப்பாடல்கள். இப்பாடல்களில் காணப்படும் காதல் சங்க காலத்திற்கு மட்டும் உரியதன்று சமகாலத்திற்கும் மனித குழுவிற்கும் உரியதாகும் என்பதைக் குறுந்தொகை சுட்டுகின்றது.

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் மாரளவின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே"[43].**

எனும் பாடல் மூலம் அறியலாம். அனைத்து இலக்கியப் படைப்புகளும் மனிதனின் வாழ்வியலை மையமாகக் கொண்டே உருவாக்கப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் காதலையும், வீரத்தையும் இரு கண்களாகக் கொண்டமைகின்றன. சங்கத்தமிழ் இலக்கியங்களின் தனித்தன்மைகளில் ஒன்று. தனிமனித வாழ்வியல் பிரச்சனைகளைக்கூட சமுதாயக் கண்ணோட்டத்தில் ஆராய்வதாகும். இதனால் இலக்கிய நிகழ்வுகளின் சாயல் தத்தமது வாழ்வில் பிரதிபலிப்பதாகக் கருதும் ஒவ்வொரு தமிழனும் அவ்விலக்கியப் படைப்புத் தன்னைச் சார்ந்ததாகவே எண்ணி மகிழ்கிறான். இதனால் ஒரு குறிப்பிட்ட சாரார் அல்லது பகுதியினர் என்ற பேச்சுக்கே இடமில்லாமல் அனைத்துத் தரப்பினரும் தங்களைச் சார்ந்த இலக்கியப் படைப்பாக அமைவதன் மூலம் அனைவரும் ஏற்கும் பொதுமைப் பண்பு உடைய படைப்புகளாக காட்சியளிக்கின்றன.

உலகில் வாழும் உயிரினங்கள் அனைவருக்கும் பொதுவானவையாகும். உலக மக்களுக்குப் பொதுவானது. அன்பு அன்பினை மையமாகக் கொண்ட மானிட உறவு மாந்தர் ஒழுக்கம், காதலும் வீரமும், களவும், கற்பும் போன்றவை அகப்பாடலுக்கு மட்டுமல்ல, அகவுணர்வு கொண்ட மக்களவைருக்கும் பொதுவானதாகும் என்பதை, **"அன்பின் ஐந்திணை களவெனப் படுவது"[44], "கற்பெனப் படுவது களவின் வழித்தே"[45]** என்னும் பாடலடிகளில் ஐந்திணையும் களவும், கற்பும் அனைவருக்கும் பொதுவான ஒன்றாகும் என்று சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

**தற்சார்பின்மை**

தற்சார்பின்மை என்பது கவிஞன் தான் பாடவந்த பொருள்மீது தற்சார்பின்றி நடுநிலையில் நின்று பாடுவது. கலித்தொகையில் வரும் அதிகமான பாடல்கள் தற்சார்பின்றியே காணப்படுகின்றன. சான்றாகத் தலைவனுக்கும் தலைவிக்குமிடையே நடைபெறும் உரையாடல் ஒன்றில் தலைவியின் பெற்றோர் தலைவனுடன் பேசக்கூடாது என்றும், தலைவனின் பெற்றோர் அவளை விடாது ஓம்புக என்றும் கூறியுள்ளதாக இருவரும் உரையாடுகின்றனர். இருவரும் இவ்வாறு சொல்லளவில் கூறியிருப்பினும் உள்ளத்தளவில் ஒருவரையொருவர் விரும்பினர் என்று புலவர் இலக்கியத்தில் தற்சார்பின்றிப் படைத்துள்ளார். தலைவனின் மனவுணர்வு தலைவியின் மனவுணர்வு இருவரது குடும்பச்சூழல்

**1.6 தாய்மைத்தன்மை**

தாய் என்பவள் மறு உற்பத்திச் சக்தியாக எப்படி விளங்குகிறாளோ அதே போல இலக்கியங்களும் தன்னிலிருந்து இன்னொற்றைத் தோற்றுவிக்கவும், தோன்றவும் காரணியாக இருக்கவேண்டும். அத்தகைய இலக்கியமே காலத்தால் அழியாது. இன்றளவும் மக்களால் பயிலப்பட்டு வருகின்றது. சங்க இலக்கியம் தாய்மைத்தன்மை உடையதாகத் திகழ்கின்றது. பழந்தமிழகத்தில் ஆணும், பெண்ணும் ஒரு பண்பாட்டு ஒழுக்கரீதியில் வளர்க்கப்பட்டனர். திருமணம் ஆகாத பெண்களுக்கு அவர்தம் பெற்றோர்களால் அணியப்பெற்ற சிலம்பு **கன்னிச்சிலம்பு** என அழைக்கப்படுகிறது. இக்கன்னிச் சிலம்பினைத் திருமணம் நிகழும் முன்னர் கழிப்பது பண்டைய மரபாகும். அதனைச் சிலம்புகழி என வழங்குவர். இதனை ஒரு விழாவாகவே பெற்றோர் கொண்டாடியுள்ளதைச் **சிலம்பு கழிஇய செல்வம்** என்று நற்றிணை குறிப்பிடுகின்றது. இச்சடங்கின் போது மணமகள் உண்ணா நோன்பு இருத்தல் மரபாகும். தலைவி தலைவனோடு உடன்போக்குச் சென்ற நிலையில் தலைவனின் தாய் தலைவிக்குச் சிலம்புகழி நோன்பு இயற்றினாள் என்பதை,

**" நும்மனைச் சிலம்பு கழிஇ அயரினும்**
**எம்மனை வதுவை நல்மணம்கழிக எனச்**
**சொல்லின் எவனோ"**[46]

இப்பாடல் தலைவியின் தாய் சிலம்புகழி நோன்பு நிகழ்ச்சியைக் கண்டு வந்தவர்களிடம் புலம்புகின்றாள் என்று சுட்டுகின்றது.

**"சிறப்பும் சீரும் இன்றிச் சிறூர்**
**ஏதில் வறுமனைச் சிலம்பு கழிஇய**
**மேயினள் கொல்லென நோவல் யானே"**[47].

என்ற பாடல் சிலம்புகழி நோன்பினைச் சிறப்பிக்கின்றது. தலைவிக்குத் தலைவனின் வீட்டில் சிலம்புகழி நோன்பு நிகழ்ச்சி நடந்தபோதிலும் தலைவியின் தாய் தன் வீட்டில் வதுவை நிகழ்த்த விரும்புவதன் மூலம் அத்தாயின் தாய்மைப் பண்பும், பண்பாடும் புலனாகின்றது. நிலைபேறுடைய எந்தவொரு இலக்கியமும் தன்னிலிருந்து பல இலக்கியங்கள் உருவாக இடமளிக்கக்கூடியதாகத் திகழும் அந்த வகையில் சிலப்பதிகாரக் கதைமாந்தர்களாகிய கண்ணகி, கோவலன், மாதவி ஆகிய மூவரில் கோவலனுக்கும், மாதவிக்கும் பிறந்தமகள் மணிமேகலை குறித்த காப்பியத்திற்குச் சிலப்பதிகாரம் அடிப்படையாக அமைகின்றது. கதைத்தொடர்பால் இவை இரண்டும் இரட்டைக் காப்பியங்கள் என்று அழைக்கப்பெறுவதால் இவை தாய்மைத்தன்மை உடையதாகத் திகழ்கின்றது எனலாம்.

தாய்மைத்தன்மை என்பது சங்க இலக்கியத்திற்கு உரிய முதன்மைப் பண்பாகும். இலக்கிய இலக்கணத் தொடர் பாரம்பரியம் மிக்கதாக எடுத்துரைக்கின்றது. தமிழில் முதல் நூலுக்கான விளக்கம் தொல்காப்பியம் தருகிறது.

**"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
**முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்"[48].**

இப்பாடலில் முன்னவன், படைப்பாளன் என இரு சொற்கள் இறைவனைச் சுட்டுவதாகக் கொள்ளப்பட்டால் இறையனார் ஆக்கிய அகப்பொருள் நூல் அசலாக நிற்கும். மேலும் பொருளிலக்கணம் பற்றிய வேறு நூல் எதுவும் கிடைக்காத நிலையில் இயற்றப்பெற்றமையால் இதன் தாய்மைத்தன்மை வெளிப்படுத்தப்படுவதாக ஆய்வினால் தெளிவுபெற முடிகின்றது.

**உயர் சிந்தனை-**

பொருள் உணர்வாகிறது --→ உயர்வு எண்ணமாகிறது-→ எண்ணம் சிந்தனையாகிறது -→ சிந்தனை செயலாகிறது -→செயல் விளைவுகளாகின்றன --→ விளைவுகளே வாழ்வியலாகிறது. இதில் எப்பொருள் எவ்விளைவாகிறது என்பதை வைத்துத் தான் வாழ்வியலின் பயன்பாட்டு மதிப்பீடு பயன்கொள்ளப்பெறுகிறது. இவற்றுள் உயர் வாழ்வியலைத் தரத்தக்கது உயர்சிந்தனையே ஆகும். உயர் சிந்தனையல்லாதன வாழ்வியலைத் தரலாம். அவை நல்வாழ்வியல், தீய வாழ்வியல் என்னும் இருதிறத்துள் அமையும் நல்வாழ்வியலைப் பெறத் திணறும். எனவே காலம் இடம் சூழல்களால் மாறுபடாத மிகுந்த நல்விளைவுகளை உடைய சிந்தனைகளையே உயர் சிந்தனை எனலாம்.

மனிதனை நல்வழிப்படுத்துகின்ற அனைத்துக் கருத்துக்களும் உயர் சிந்தனைகளாக வைத்துப் போற்றப்படுகின்றன. ஆழமான கல்வி ஞானம் பண்பாடு விரிந்து பரந்த மனப்பான்மை ஈகை, செங்கோல் ஆட்சிமுறை, இல்வாழ்க்கைமுறை, புலால் உண்ணாமை, விருந்தோம்பல், அன்புகாட்டல், பொறாமையை ஒழித்தல்,

நட்புக்கொள்ளுதல், உண்மை, மன உறுதி போன்ற அறக்கருத்துக்கள் நிரம்பிய உயர் சிந்தனைகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன. உலக உயிர்கள் அனைத்தையும் தழைத்தோங்கி வளர்க்கச்செய்வது அன்பாகும். அவ்வன்பினால் மட்டுமே நாம் எதனையும் வெற்றிகரமாகச் செய்து முடிக்க இயலும். அத்தகைய அன்பிற்கு முக்கியத்துவம் கொடுத்தவர் வள்ளுவப்பெருந்தகை. அன்புடைமை என்னும் ஓர் அதிகாரத்தை அமைத்துள்ளார். அன்புடையவர்கள் பொருளால் மட்டுமின்றி அவர்களுடைய உடம்பாலும் மற்றவர்களுக்குப் பயன் உடையவர்களாக இருப்பர். அன்பை அடிப்படையாகக் கொண்டதே உயிர்நிறைந்த தோலைப் போர்த்தியது போன்றதாகும் என்பதை,

**"அன்பின்வழியது உயிர்நிலை அ∴து இலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு"[49].**

என்று குறள்வழி வள்ளுவர் உயர்ந்த சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளார். உலக மானுடத்தின் உயர் சிந்தனை ஆவணங்களில் தலைமைத் தகைமை சான்றது சங்க இலக்கியம். உலக அறிஞர் பெருமக்களெல்லாம் ஒத்த கருத்தோடு சங்க இலக்கியம் சிறந்த இலக்கியம் என மதிப்பிடுவதற்குக் காரணம் இதனுள் மிகுந்திருக்கும் நிலைத்த உயர் சிந்தனையேயாகும். செம்மாந்த செம்மொழித்தமிழில் பல உயர்ந்த சிந்தனைகள், அறக்கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. அவை எல்லா உயிர்களிடத்தும் அன்புகாட்டி இரக்கம் கொள்ளுதல், பசிப்பிணி போக்குதல், தமக்கென வாழாமல் பிறருக்காக வாழுதல் வேண்டும் என்கிறது சங்க இலக்கியம்.

**"உண்டா லம்ம இவ்வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்**
**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"[50]**

**"யாதும் ஊரே; யாவரும் கேளிர்;**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா; [51]**

**"நீரின்று அமையா யாக்கைக் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"[52]**
**"நல்லது செய்தல் ஆற்றி ராயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்"[53]**

**"உண்பது நாழி உடுப்பவை இரண்டே**
**பிறவும் எல்லாம் ஓராக் கும்மே**
**அதனால் செல்வத்தின் பயனே ஈதல்"[54].**

இவ்வாறு மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத பல அரிய கருத்துக்களையும் உயர்ந்த சிந்தனைகளையும் சங்க இலக்கியங்கள் கொண்டுள்ளன. அந்த உயர்ந்த சிந்தனைகள் அனைத்தும் மனித வாழ்வில் பின்பற்றப்படுமேயானால் உலக வாழ்க்கை செழித்தோங்கி மலர்ந்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

## 1.7 அமைப்பு

சங்க இலக்கியங்களின் கால வரையறை கி.மு.300 முதல் கி.பி.250 ஆக வரலாற்று ஆசிரியர்களால் குறிப்பிடப்படுகிறது. சங்க கால அகப்பாடல்கள் ஒவ்வொன்றும் தனித்தன்மையான பொருளுணர்வுக் காட்சிகளுடன் அமைத்துப் பாடப்பெற்றுள்ளது. சங்க கால சமூகத்தைப் பாடும் போது 'சமுதாயத்தில் பல்குடியினர், பல்பிரிவினர், பல் தொழிலினர் வேறுபாடின்றி ஒருமையுற்றிருந்தனர். பசியும் பிணியும் பகையும் நீங்கி, மக்கள் வசியும் வளனும் சிறக்க வாழ்ந்தனர். சாதிப்பிரிவு இல்லை, ஆனால் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நானிலப் பகுப்பும், பரதவர், ஆயர் போன்ற குடிமுறையுமே நிலவின. பிற நாட்டினர் தமிழகத்தை நாடிவந்து வாணிகம் நடத்தும் அளவில் வளமிக்கதாய் தமிழகம் விளங்கியது.

சங்க இலக்கியத்தில் பாடல்கள் மூன்று அடிமுதல் எழுநூற்று எண்பத்தியிரண்டு அடிகள் கொண்டு அமைந்துள்ளன. சங்க இலக்கியத்தில் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 2387 ஆகும். அவற்றுள் அகப்பாடல்கள் 1877, புறப்பாடல்கள் 510, இவ்வியலக்கியத்தைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 473, ஆசிரியர் பெயர் இல்லாத பாடல்கள் 10 ஆகும். இவர்களுள் பெண்பால் புலவர்கள் 30 இந்த எண்ணிக்கை குறித்து வேறுபாடுகளும் உள்ளன. சங்க இலக்கியத்தில் அதிகமான பாடல்களைப் பாடியவர் கபிலர் ஆவார். சங்க இலக்கியப் பாடல்கள் பாடிய புலவர்கள் 25 பேர் ஆவார்கள்.

சங்கப்பாடல்களில் பெரும்பாலானவை அகவல் யாப்பால் ஆனவை. கலித்தொகை கலிப்பாவால் ஆனது. மதுரைக்காஞ்சியில் வஞ்சி அடிகள் இடையிடையே வருகின்றன. சங்கப் பாடல்களில் தனிச்சிறப்புச் சொற்களைச் செறிவுடன் கையாளும் நிலையைக் கூறலாம். பிற்காலச் சந்தநயமும், ஓசையும் சங்கப் பாடல்களில் இல்லையெனினும் பரிபாடல் இசையுடன் பாடப்பட்டுள்ளது. சங்கப் பாடல்களில் வரும் சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்கள் அதில் வடமொழிச் சொற்கள் அரிதாகக் காணப்பட்டன. சொல்லும் பொருளும் ஒன்றையொன்று தழுவிச்சென்று பொருள் முடியும் இடத்தோடு சொல்லும் முடிவது சங்க இலக்கியங்களின் தலையாய சிறப்பியல்புகளாகும்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்களில் பல்வேறு பாடல் தொகுதிகளையும், யாப்பு நலத்தையும் புலவர்களின் நிலையையும் அகம், புறம் பற்றிய விளக்கத்தையும், பல்வேறு வருணனைகளையும் உவமைகளையும் கூறும் காலக்கண்ணாடியாக உள்ளன என்பதை அறிய முடிகிறது. கடலாலும், கரையானாலும் தமிழ் நாகரிகத்தாலும், தமிழரின் பேணாப் பேதமையாலும் எண்ணற்ற தமிழ்நூல்கள் அழிந்துவிட்டன. எஞ்சிய பாடல்களைத் தேடித் தொகுத்துக் காக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தபோது தான் தொகை நூல்கள் உருவாயின். சிதறிக்கிடந்த சங்கத் தனிப்பாக்கள் எல்லாம் எட்டுத்தொகைகளாகத் தொகுக்கப்பட்டன. அவை

**"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குநுறுாறு**
**ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்**
**கற்றறிந்தோர் ஏத்தும் கலியோ அகம் புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை"[55].**

என்று பழம்பாடல் ஒன்று எடுத்துக்காட்டுகிறது. இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் போன்றவை எட்டுத்தொகை நூல்களாகும். இத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குநூறு, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்கள் அகப்பொருள் பற்றியன.

புறநானூறு, பதிற்றுப்பத்தும் புறப்பொருள் பற்றியன. பரிபாடல் அகமும் புறமும் சார்ந்த நூல்களாகும். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு பலவகையாலும் பெரிதும் ஒப்புமையுடையன. சங்க அக இலக்கியக் கட்டமைப்பின் மிகச் செறிவுடையதாக போற்றப்படும் தகுதியுடைய குறுந்தொகை உரிப்பொருளால் சிறந்தும் செவ்வியல் பண்பை உணர்வதுவனவாகும். பல்லோரால் மேற்கோள் காட்டப்பெற்ற சிறப்புடைய நூலாகும். 'தொகைகளுள் உரிப்பொருள் சிறந்த குறுந்தொகையை முதற்கண் பலர் கற்பாராயினர். பலர் கற்கும் நூலாகத் திகழ்ந்தமையின் உரையாசிரியர்களும் இத்தொகையிலிருந்தே பெரிதும் மேற்கோள் காட்டுவராயினர்'[56]**.**

அகநானூறு முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்றையும் வெளிப்படுத்துகின்றன. இதன் சிற்றெல்லை 13 அடி முதல் பேரெல்லை 31 அடி வரையில் பாடல்கள் அமையப்பெற்றுள்ளன. இதனை மூன்று பிரிவாக பிரித்துள்ளனர். முதல் 120 பாடல்கள் களிற்றியானைநிரை என்ற தலைப்பில் களிற்றின் வீரம் பாடலில் மிளர்ந்து காணப்படுகின்றன. மணியும் பவளமும் கலந்து ஒளிக்கும் விதமாக 180 பாடல்கள் மணிமிடைப்பவளம் என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ளன. முத்துக்கள் கோத்தாற் போன்ற அழகான நடையில் 100 பாடல்கள் நித்திலக்கோவை என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ளன. தலைவன் தலைவியிடையே அமைந்த காதலைக் கற்பு ஒழுக்கத்தின் கருவாக கொண்ட இலக்கியமாகும்.

நற்றிணை நானூறு எனப்பெயர்பெற்ற இத்தொகைநூல் எட்டுத்தொகை நூலுள் முதன்மையானது. ஊயரிய சிந்தனைத் தெளிவைத் தன்னுள் வரையறுத்த சிறப்புடையதாகும். இதன் சிற்றெல்லை 9 அடி முதல் பேரெல்லை 12 அடி வரையுள்ளன. தலைவன் தலைவியின் காதலையையும், கற்பையும் உயர்தகுதியாகக் கொண்டு ஒழுகினாலும் நட்பு, வாழ்வமையும் தனிமனிதச் சிந்தனையின் தனித்தகுதியாக அமையப்பெற்றுள்ளது. ஐங்குறுநூறு திணைக்கு நூறு பாடல்களாக 500 பாடல்களைக் கொண்டது. இதன் சிற்றெல்லை 3 அடி முதல் பேரெல்லை 6 அடி வரையுள்ளன. இந்நூலின் சிறப்பு பற்றி அ. தட்சிணாமூர்த்தி அவர்கள் ஒரு புலவரே ஒரு திணைப் பற்றி பலப் பலப்பாடல்களைப் பாடினாலும் ஒவ்வொரு பாடலும் தனித்தன்மையோடு காணப்படுகின்றன.

ஒரு பாடலில் வரும் கருப்பொருள் மற்றொன்றில் வருவதில்லை. அவ்வாறே வந்தாலும் தனித்ததோர் அழகு பெற்று நிற்கும் சிறப்புடைய நூலாகும்"[57] என்று கூறுவர். கலித்தொகையின் பா அமைப்பு சங்க காலத்தினின்று விலகிய பிற்பட்ட காலப்பகுதியைக் காட்டுவதாகக் அமைகின்றது. கலித்தொகை அகவல், கலிப்பா போன்ற பா வகை கொண்டு இயற்றப்பெற்றுள்ளது. பாலைக்கலி 35 பாடல்களையும், குறிஞ்சிக்கலி 29 பாடல்களையும், மருதக்கலி 35 பாடல்களையும், முல்லைக்கலி 17 பாடல்களையும், நெய்தற்கலி 33 பாடல்களையும் கொண்டு மொத்தம் 150 பாடல்களாகத் தொகுக்கப்பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடலும் உரையாடும் பாங்கினதால் ஓரங்க நாடக அமைப்பில் நூல் சிறப்பாக அமைந்துள்ளன.

**புற நூல்கள்:**

தொகை நூல்களுள் புறநானூறும், பதிற்றுப்பத்தும் புறம் சார்ந்த நூல்களாகும். சமுதாய ஒருங்கிணைப்பால் ஆற்றல் வாய்ந்த கூட்டமைப்பின் வரலாற்று தொகுதியே நாகரிகப் பண்பாட்டினை வளப்படுத்துவதாகும். புறநானூறு பண்டைத்தமிழரின் வரலாற்று நூலாகத் திகழ்கின்றன. இந்நூலுக்குப் புறம், புறப்பாட்டு என்ற பெயரும் உள்ளது. தனிமனித ஆட்சியின்கீழ் செயல்படும் வாழுலகத்தின் பயன்பாடு குறித்த செவ்வியல் தன்மையை இப்புறப்பாடல்களில் ஆராயக் காணலாம். இந்நூலிலுள்ள 400 பாடல்களில் 138 பாடல்களில் 43 வேந்தர்களைப் பற்றியும், 141 பாடல்களில் 48 குறுநில மன்னர்களைப் பற்றியும், 121 பாடல்கள் பொதுமைப் பாங்கோடும் அமையப் பெற்றுள்ளன. 138 பாடல்களில் சேர அரசர்களையும், 27 பாடல்களில் பாண்டிய அரசர்களையும், 37 பாடல்களில் சோழ அரசர்களையும் பாடியுள்ளனர்.

பதிற்றுப்பத்து என்ற நூலில் 10 சேர மன்னர்களைப் பற்றி பாடப்பட்டுள்ளன. அதில் முதல் பத்தும், இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை. இடையிலுள்ள 8 சேர மன்னர்களைப் பற்றி ஒருவருக்கு 10 பாடல்கள் வீதம் மொத்தம் 80 பாடல்கள் கிடைத்துள்ளன. இதில் நான்காம் பத்தில் இடம்பெற்ற பாடல்கள் அந்தாதி அமைப்பில் அமைந்துள்ளது மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஒவ்வொரு மன்னனையும் வாழ்த்திப் பாடிய புலவர்களுக்கு பரிசுகள் கொடுக்கப்பட்டன என்ற செய்தியும் இடம் பெற்றுள்ளன.

**"ஆன்றோர் புகழ்ந்த அறிவினினற் றெரிந்து**
**சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்"[58].**

என நச்சினார்க்கினியரின் உரைச் சிறப்பு பாயிரமாக அமைந்துள்ளன.

**"பத்துப்பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ**
**எத்துணையம் பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே"[59].**

என்னும் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் கூற்றும் பத்துப்பாட்டில் சிறப்புணர்த்தம் **பாட்டும் தொகையும்** எனும் போது பாட்டு என்பது பத்துப்பாட்டைக் குறிக்கும்.

**“முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சிப் பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து”[60].**

பத்துப்பாட்டில் மொத்தம் பத்து நூல்கள் உள்ளன. அவற்றில் ஐந்து ஆற்றுப்படை நூல்கள்(திருமுருகாற்றுப்படை 317அடி, பொருநராற்றுப்படை248அடி, பெரும்பாணாற்றுப்படை 500அடி, சிறுபாணாற்றுப்படை 269அடி, மலைபடுகடாம் 583அடி) உள்ளன. மதுரைக்காஞ்சி 782அடி என ஒரு புறநூலும், குறிஞ்சிப்பாட்டு 261அடி, முல்லைப்பாட்டு 103அடி, பட்டினப்பாலை 317அடி, நெடுநல்வாடை 188அடி என ஐந்து அகநூல்களும் உள்ளன. இந்நூல் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரையெழுதியுள்ளார். பத்துப்பாட்டில் வஞ்சியடி பயிலும் பட்டினப்பாலை தவிர ஒன்பது நூல்களும் ஆசிரியப்பாவால் ஆனது. ஆற்றுப்படை என்பது பரிசில் பெற்ற கலைஞன் ஒருவன், தன் முன்னர் எதிர்ப்பட்ட கலைஞர்களை பரிசில் பெறுமாறு ஆற்றுப்படுத்துவது ஆற்றுப்படையாகும். இதனை தொல்காப்பியம்,

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி**
**பெற்ற பெருவளம் பெறார்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயன் எதிர்சொன்ன பக்கமும்”[61]**

### 1.8 திணை அமைப்பும் விழுமியமும்

சங்ககாலம் என்பது உணவுத்தேடும் வாழ்க்கை முறைகளில் பண்பட்டிருந்த காலமாகும். அத்துடன் உணவு உற்பத்தி முறைகளில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்ட காலமுமாகும். இதனால் உருவான நிலம் குடில்கள், வாழ்வியல் நெறிகள் யாவும் சங்க காலத்திணைச் சமூக வாழ்வின் பின்னணியாக உருவானதென தொகை நூல்கள் உறுதிப்படுத்துகின்றன. இத்தகைய திணைச் சமூகங்களிலும் ஒவ்வொரு வகையான உற்பத்தி முறைகளும், உற்பத்தி உறவு முறைகளும் நிலவின. ஒரு குறிப்பிட்ட பொருளாதாரத்தை மையமாகக் கொண்டு ஒவ்வொரு திணைச் சமூகமும் செயல்பட்டுள்ளது. ஆயினும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகைத் திணைகளில் மருதத்தை மையமாகக் கொண்டு உருவான வேளாண் சமூக வாழ்க்கை முறைகள் நிலவிப் பின்பு நிலைபேறுடையா சமூகமாக மாறியதையும், சங்க கால அரசு உருவாக்கத்தில் மருதநிலம் முக்கியத்துவம் பெற்றுள்ளதென தெளிவாகின்றது.

பண்டைத் தமிழர்கள் சமூகம் அடிப்படையில் ஒரு குடிமுறை அமைப்பைப்பெற்று நிலப்பாகுபாடு தமிழகத்தில் உண்மையாகவே இருந்து வந்துள்ளது. வேடர், உழவர், மீனவர், கள்ளர் போன்றோரின் தோற்றம் உணவு, உடை, தொழில் பழக்கவழக்கங்கள் முதலியன இயல்பாகவே வேறுபட்டு காணப்பட்டன. அவர்கள் ஒருவரோடு ஒருவர் உறவாடி வந்த அளவிற்குச் சண்டையிட்டும் வந்தனர். ஆனால் அவர்கள் எல்லோரும்

தென்னிந்தியாவின் அடக்கமான குறுகிய ஒரு நிலப்பரப்பில் வாழ்ந்தனர். ஒன்றிய வாழ்க்கை இன்றியமையாததாயிற்று. அவர்கள் அனைவரையும் ஒன்றிணைத்தது தமிழ்மொழியே. அது அனைத்து பண்பாட்டிற்கும் அடிப்படையாக அமைந்தன. தமிழ்மொழி அதன் வேறுபாடுகள் அது வேறுபட்ட அளவிற்கு அதனைப் பயின்றோரது கலாச்சாரமும் வேறுபட்டதாகும். இவற்றின் வாயிலாகவே அம்மக்கள் தமது கருத்தாடல்களைப் பகிர்ந்துக்கொள்ள முடிந்தது.

ஒரு மனிதன் தான் வாழும் சூழ்நிலைக்கேற்ப அவனது நடைமுறை வாழ்க்கை அமையும் என்பதற்குச் சான்றாக நானில மக்களின் வாழ்க்கை முறைகள் உள்ளன. இம்மக்களது தொழில் அடிப்படையில் வாழ்க்கைமுறை அமைதலை வேட்டைத்தொழிலினடிப்படையில் குறிஞ்சி, கால்நடை வளர்ப்புத் தொழிலினடிப்படையில் முல்லை, உழவுத்தொழிலின் அடிப்படையில் மருதம், வணிகத் தொழிலினடிப்படையில் நெய்தல், பொருளீட்டல் அடிப்படையில் பாலை என பல பிரிவுகளாக நிலவிருந்தமைப் புலனாகின்றது.

**குறிஞ்சிநில விழுமியம்**

மலையும் மலை சார்ந்த நிலம் குறிஞ்சியாகும். குறவர், கானவர் இந்நிலத்தில் வாழ்வர். மலையின் பக்கத்தே உள்ள சிறிய ஊர்களில் வாழ்ந்து வந்தனர். இதனை பாக்கம், சிறுகுடி என்பர். குறவர், குச்சி வீடுகளில் வாழ்ந்தனர். இக்குடிசை நடுகாற் குரம்பை என்பர். தம் தேவைகளைப் பண்டமாற்று மூலம் நிறைவேற்றிக்கொள்வர். தேனெடுத்தல், திணை விதைத்தல், உழுது விதைத்தல், களையெடுத்தல், கொல்லையமைத்தல், வேட்டையாடுதல் முதலான தொழில் முறைகளைக் கொண்டிருந்தனர். **“அறையுறு தீந்தேன் குறவர் அனுப்ப”**[62] என்னும் பாடல் குறவர்கள் உச்சிப்பாறையில் உள்ள தேனை அறுத்தெடுக்க முயல்வதை பரணர் பாடல் சான்று பகர்கின்றது. குறவர்கள் கார்காலத்து மழை பெய்தவுடன் நிலத்தை உழுது திணை வித்துக்கட்கிடையே இடமுண்டாகத் தூவி விதைப்பர். திணை பயிருக்கு இடையே ஊடு பயிராகப் பருத்தியை விதைப்பர். சேம்பு, மஞ்சள் ஆகியவற்றையும் பயிரிடுவர். இதனை,

**“……….. பெருங்குரல் ஏனல்**
**கிளிபட விளைந்தமை யறிந்துஞ் செல்கென**
**நம்மவன் விடுநள் போலாள்”[63].**

**“உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே**
**ஒன்றே சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே**
**இரண்டே தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே**
**மூன்றே கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்கும்மே**
**நான்கே அணிநிற வோரி பாய்தலின் மீது அழிந்து**
**திணிநெடுங் குன்றம் தேன் சொரியும்மே”[64].**

என்னும் பாடல்கள் உழவரால் உழுது விதைக்கப்படாத, உணவுப் பொருட்களும் குறிஞ்சி நிலத்தில் விளைந்துள்ள இயற்கைப் பொருட்களைக் காணமுடிகிறது. திணைப்புனம் காத்தல் பெண்களுக்கு மட்டுமே உள்ள தொழிலாகும்.

**“கானவன் வில்லின் தந்த வெண்கோட் டேற்றைப்**
**புனையிருங் கதுப்பின் மனையோள் கொண்டிக்**
**குடிமுறைப் பகுக்கும்”[65].**

என்னும் கபிலர் பாடல் சான்று பகர்கின்றது. தம் பொருட்களை பண்டமாற்று முறையாகப் பயன்படுத்துவர். ஆமையின் இறைச்சியுடன் களிற்றியானையின் கோட்டையும் கொண்டு வந்து கொடுத்துவிட்டு அவற்றின் விலைக்கு ஈடாகப் பொன்னையும் கள்ளையும் பெறுவர். இதனை,

**“செங்கோட் டாமா னூனொடு காட்ட**
**மதனுடைய வேழத்து வெண்கோடு கொண்டு**
**பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்”[66].**

என்ற பாடல்களில் பண்டமாற்றுமுறையும், புன்செய் வேளாண்மையும், வேட்டைத்தொழிலும் அடிப்படையாய்க் கொண்டமையும் புலனாகின்றது. திணையும் ஐவன வெண்ணெல்லும், புல்லரிசியும், மூங்கிலரிசியும், அவரையும், கிழங்கும், தேனும், வேட்டைப்பொருட்களும் இச்சமூகத்தின் அடிப்படை உணவுகளாகும்.

**முல்லைநில விழுமியம்**

காடும் காடுசார்ந்த பகுதி முல்லையாகும். ஆ என்பது பசு, ஆயம் என்பது பசுந்திரன், ஆநிரை ஓம்பி வாழ்ந்தனர். ஆயர் எனப் பெயர் பெறுவர். ஆய் என்னும் குடிப்பெயர் பின்னாளில் ஆர் என்ற பலர் பால் விகுதியாகப் பெற்று ஆயர் என ஆயிற்று. இவர்களுள் உழவுத்தொழில் செய்வோரும் உள்ர். ஆயர் நடைமுறை வாழ்க்கை வைகறை, காலை, பகல், மாலை, இரவு என்ற காலங்களில் தம் வாழ்வு முறைகளை அமைத்துக்கொள்வர். ஆயர் வைகறையில் எழுந்து கட்டுத்தறியினைச் சுத்தம் செய்து ஆநிரையை வேறு இடத்திற்கட்டிப் பால் கறப்பர். ஆகையால் இந்நிகழ்வை புலவர்கள் யாரும் பாடலவில்லை. ஆயர்ச்சியர் வைகறையில் எழுந்து தயிர் கடைவதைப் பாடியுள்ளதன் சிறப்பைக் காணமுடிகிறது.

ஆனினங்களை அகன்ற முல்லை நிலத்தில் பரவிமேயவிட்டு அங்குள்ள பூக்களை மாலையாகக் கட்டி மகிழ்வர். பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியை அணிவர். இடையர் ஆடுகளின் தொகுதியை மேய்ச்சல் உள்ள இடம் நோக்கிச் செலுத்துவர். **“ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும் வன்கை இடையன்”[67]** என்னும் பாடல் சான்று பகர்கின்றது. இசையைக் கல்லாத ஆயர் சிறிய மூங்கிலில் செய்த இனிய குழலினை ஊதி மகிழ்வர். வறண்ட பாலையில் புகுந்த ஆயர் ஆனிரையை ஊது கொம்பினால்

இசைத்துக் கொன்ற மரநிழலில் தங்கச் செய்வர். ஆடு மேய்க்கும் ஆயர் காட்டில் புதிய வழிபோக்கர் ஒருங்கால் அவர்களுக்கும் புளிச்சோற்றித் தேக்கு இலையில் பகிர்ந்தளிப்பர். இதனை, **“தீம்புளி செவியிடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்”**[68] என்பதனை அகநானூறு வழி அறியமுடிகிறது. ஆயர்கள் ஆநிரைகள் நீரைபருகுவதற்காக நன்னிலத்தில் கற்களை உடைத்துக் கிணறு தோண்டுவர். அவ்வாறு அரிதின் முயன்று ஆநிரை நீர் பருகும் பொருட்டுக் கோல்களால் பள்ளம் தோண்டுதலை **“கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய வானீர்ப் பத்தல்”**[69], **“மெய்யுரித் தியற்றிய மிதிய தட்பள்ளித் தீத்துணை யாகச் சேந்தனிர்”**[70] கொடிய விலங்கினங்கள் ஆநிரையைத் தாக்காத வண்ணம் பெரிய மரங்களுக்குத் தீவைத்து இரவு முழுவதும் எரியச் செய்வர். முல்லைநில வாழ்வு கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது. பால், மோர், தயிர், திணை, வரகு, கொல், அவரை என்பன இந்நில உணவுப்பொருட்களாகும். உணவு உற்பத்திக்குரிய ஆதாரமாய் முல்லைநிலப் பின்னணி விளக்கி அமைகின்றது.

**மருதநில விழுமியம்**

வயலும் வயல் சார்ந்த பகுதி மருதநிலமாகும். வேளாண்மை முக்கியத் தொழிலாகும். இந்நிலத்தில் வாழ்பவர்கள் தண்டலை உழவர். வலைஞர், பூவிலைஞர், பூவினலைஞர் முதலானோர் ஆவர். உழுதல், விதைத்தல், நடுதல், களையெடுத்தல், காவல் காத்தல், அறுவடை செய்தல், நெல் அளத்தல், களங்களில் கள் விற்றல் முதலானவற்றை தங்களுடைய தொழிலாகக் கொள்வர். இதனை,

**“ ...................... தண்டபுலர் விடியல்**
**கருங்கண் வராஅற் பெருந்தடி மிளிர்வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு**
**கவர்படு கையை கழும மாந்தி**
**நீருறு செறுவின் நாறுமுடி அழுத்த நின்**
**நடுந ரோடு சேறி”**[71].

என்னும் பாடல் நடவு செய்தலை இயற்கை அமைப்போடு பாடியுள்ளதைத் தெளிவுறக் காணமுடிகிறது. உழவர் நெல்லினைக் கொடுத்துவிட்டு மான் தசையையும் கள்ளையும் அதற்கு ஈடாகப் பெற்றனர். **“தீங்கரும் போடு அவல் வகுத்தோர் மான்குறையொட மதுமறுகவும்”**[72] என்னும் பாடல் பாடியுள்ளனர். **“தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை மல்லற் பேரூர்”**[73] என்பதில் செந்நெல், வெண்ணெல் உணவு இம்மக்களின் அடிப்படை உணவாக அமைந்துள்ளது. வாளைமீன், வரால், நண்டு, வெண்சோறு எனும் உணவுகள் உழவர் சமுதாய உணவுகளாய்க் காட்டப்பட்டுள்ளன. மருதநிலம் வேறுபட்டுப் பொருளாதார மேம்பாடு உடையதாகும். உணவு உற்பத்திக்கான அடிப்படை ஆதாரமாய் மருதநில பின்னணியாக ஆய்வினால் அறிய முடிகின்றது.

## நெய்தல்நில விழுமியம்

கடலும் கடல் சார்ந்த பகுதி நெய்தலாகும். இங்கு வாழும் மக்கள் பரதவர் எனப்படுவர். பரதவர் குடியிருப்புகள் பாக்கம் என்று அழைப்பர். **“புலாலஞ்சேரிப் புல்வேய் குரம்பை”**[74], **“புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து இனமீன் வேட்டுவர்”**[75] என்ற சான்றின் மூலம் பரதவர் வேழக்கோலை நிரைத்து மரக்கொம்புகளை இடையிடையே கலந்து தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல்வேயப்பட்ட குறுகிய தாழ்வாரமுடைய குடிலில் வாழ்வை மேற்கொள்வர். மீனவர் மீன்பிடிக்கச் செல்வர். அவற்றைக்கொண்டு வந்து புலர்த்தல், விலை கூறி விற்பர், உப்பு விளைவிப்பர், முத்தெடுப்பர் முதலிய நடைமுறை வாழ்க்கை மேற்கொள்வர். **“உவர்வினை உப்பின் உழாஅ உழவர்”**[76], **பதில் உப்பை ஏர் பூட்டி உழுவர் நெடுங்கால் மாடத் தொள்ளெரி நோக்கி”**[77] என்னும் பாடல்களில் வளைந்த கட்டுமரத்திலேறிக் கடலில் சென்ற பரதவர் நீண்ட தூண்களையுடைய மாடத்தில் எரியும் தீச்சுவாலையை நோக்கி வருவர். மேலும் வடபுலப் பொருட்களும் கொண்ட நாவாய்களையும் தொழில்செய்வோரால் காக்கப்படும். பண்டக சாலைகளும், உயர்ந்த மாடங்கள், தெருக்கள், நெல் விளைவதற்குக் காரணமான எருதுகளுடன் ஆடுகளும் உள்ள சோற்று வளம் மிக்க நல்ல இல்லங்களையும் உடையதாய் நெய்தல் நிலம் பாடப்பெற்றுள்ளது. நெல்லோடு தோப்புக் குடில்களின் உணவாக இளநீர், பலா, வாழை, நுங்கு, சேப்பங்கிழங்கு ஆகியன இந்நிலத்தின் விளைபொருளாக இருந்தன என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றன. வேறுபட்ட திணைச் சமுதாய வளர்ச்சிப் போக்கு போன்றவற்றின் அடிப்படையில் வாழ்வுப் பின்னணியாக கொண்டு வாழ்வு நடத்துவர் நெய்தல் மக்கள். உற்பத்திச் சக்திகளின் மீது மனிதன் ஆதிக்கம் செலுத்துவது தான் மனிதகுல முன்னேற்றத்தின் ஊற்றுக் கண்களாகும். இயற்கை நிலைகள், வரலாற்றுக் கட்டடங்கள் இவற்றின் வேறுபாடுகள் பல்வேறான வளர்ச்சிப் பின்னணியாகக் கொண்ட வர்க்கங்கள், சமூகநிறுவனங்கள், பண்பாட்டுத் துறைகள் ஆகியவற்றின் வளர்ச்சி வேகத்திலும் வேறுபாடுகளை ஏற்படுத்தியுள்ளன. அரசு உருவாக்கத்திற்கு அடிப்படையாக அமைந்து, மலையில் தொடங்கி கடற்கரை வரை பண்டையச் சமுதாயம் பரந்துள்ளதை சங்க இலக்கியம் புலப்படுத்துகிறது.

## பாலைநில விழுமியம்

பாலைக்கென தனிநிலம் இல்லை. முல்லையும் குறிஞ்சியும் தத்தம் இயல்பு குன்றும் பொழுது பாலை எனப்பட்டது. இந்நிலத்தில் வாழும் எயினர் ஈந்து வேயப்பட்ட குடிசையில் வாழ்வர். இவர்கள் வாழும் ஊர் சீறூர் எனப்பட்டது. இதனை தலைக் கூம்பிய குடிசைகளைக் கொண்டிருக்கும். ஊன் உலர்த்தல், பூவிற்றல், வேட்டையாடுதல், ஆறலைத்தல், சூறையாடுதல், சூதாடுதல், ஆநிரை கவர்தல் முதலான தொழிலாகக் கொண்டிருந்தனர். பாலையிலுள்ள சீறூரில் வாழும் மகளிர் பகலில் மான்கள் தினை

முதலியவற்றை உண்ணும் பொழுது அவற்றைத் துரத்திவிட்டு எஞ்சிய உணவுகளைத் திரட்டுவர். இதனை,

**"கொடுநுண் ஏதி மகளிர் ஓங்கிய**
**தொடுமான் உலக்கைத் துண்டுரற் பாணி**
**நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டும்"[78].**

என்னும் பாடலின் வழியே அறியமுடிகிறது. தினை முதலியவற்றை உலக்கையால் குத்தும்போது உரலினின்று எழும் ஒலி மலையிலுள்ள ஆந்தை ஒலியோடு மாறி மாறி ஒலிக்கும் என்பதனை கல்லாடனார் இயற்கை வர்ணனையோடு தம் கவித்திறத்தால் சான்றதாரமாக காணமுடிகிறது. இவர்கள் வில்லினை இடப்பக்கத்தே தழுவிக்கொண்டு வழிவருவோரைப் பார்த்திருந்து கள்ளத் தொழிலில் ஈடுப்பட்டனர். பாலை நிலத்தின் வழியே தூது செல்லும் பார்ப்பான் ஓலைச் சுருளுடன் வர அவன் கையில் உள்ளது, பொன் எனக் கருதி அப்பொழுதே கொன்று வீழ்த்துவர். மேலும் அவனிடத்தில் ஒன்றும் இல்லையெனில் கையை நொடித்துக் காட்டுவர் பாலைநில எயினர்கள். மழவர் பகலில் ஊன் சோற்றுடன் துவரை துவையலை உணவாகக் கொண்டிருந்தனர். இன்னபிற பண்பாட்டு தரவு நிகழ்வுகளோடு தமிழ் சமூகம் திணை பாகுபாட்டினூடே தமிழர்தம் வாழ்வு பேணிய தோற்றப் பின்னணிகளாக ஆய்வினால் அறியமுடிகிறது.

## முடிவுரை:

- ❖ தமிழ்மொழி பழமையானது, அப்பழையான மொழி பேசிய மக்களின் வாழ்க்கை மரபுகள், உணர்வுகள் போன்றவற்றை இலக்கியமாகப் பதிவு செய்வதற்கு ஓர் இலக்கண வரைமுறைகளை வகுத்துக் கொடுப்பது சங்க இலக்கியமாகும். இது பழமையான நூல் மட்டுமல்லாமல் பழங்காலத் தமிழக மக்களின் வாழ்வியலைக் குறிப்பிட்டுக் காட்டும் காலக்கண்ணாடி என்பதனை அறியமுடிகிறது.

- ❖ தமிழர்கள் இயற்கையோடியைந்த இன்பவாழ்வு வாழ்ந்தனர். அத்தகைய வாழ்க்கைக்குத் தமிழகம் துணைநின்றது. இயற்கைச் சூழலில் வாழ்வு நடத்திய பழந்தமிழரின் கற்பனைக் கனவுகளும் இயற்கையோடு இயைந்தனவாகவே விளங்கின. அத்தகைய கனவுகள் பழந்தமிழரின் கலைச்செல்வமான சங்க பதிவாகியிருப்பது ஆராயப்பட்டுள்ளது.

- ❖ சங்க காலத்திற்கு முன்பே மனித இனத்தின் கருத்தோட்டங்களை பதிவு செய்யும் களமாக சங்க நூல்கள் அமைகின்றன.

- ❖ தமிழரின் தலைமை இலக்கியமாகவும், உலகில் ஒப்புயர்வுடைய உயர்தனிச் செம்மொழி காவியமாக தமிழரின் பண்பாட்டை பேணும் வாழ்வு இலக்கியமாக சங்க இலக்கியம் திகழ்கிறது.

- ❖ தமிழ்மொழினூடே சங்கம் வைத்து தமிழ் ஆராய்ந்த தன்மை தமிழ் மொழியினுள் மிளிர்கின்றது. புணர்சுட்டுண்ட புகழ்சால் சிறப்பின் வழியே தமிழ்நிலை பெற்ற மதுரை மாநகரைத் தமிழரின் அடையாள இடமாக சங்கத்தினால் உறுதிபடுகின்றது.

- ❖ தமிழர் வரலாறும், மொழி வரலாறும் பெற்று எண்ணிறந்த ஆண்டுகளை கடந்தும் பாதுகாப்பு அரணில் சங்க இலக்கியம் தரணியெங்கும் மிளிர்கின்றது.

- ❖ அகப்புற வாழ்விற்கு வித்திட்ட மூத்த இலக்கியமாகவும், அதனதன் இலக்கிய வளத்தை தத்துவார்த்த கூறுகளில் வகைப்படுத்தி இலக்கியப் போக்கைப் மெய்ம்மை பெற செய்கிறது.

- ❖ கல்லும் மண்ணும் தோன்றுவதற்கு முன்பாகவே தோன்றியது தமிழ்மொழி. ஆனாலும் பாவாணிரின் ஆய்வினூடே தாய் தமிழகமே நாகரிகத்தின் பிறப்பிடத் தொன்மையென்று உறுதியாகின்றது.

- இலக்கியம் பாடுவதற்குரிய பொதுமைப் பண்பு, உத்தி அதன் மையப்பொருள்(பாடுபொருள்), இலக்கிய வகைமை காலம், இடம், சூழல் யாவும் ஒரு மொழி ஆக்கம் பெறுவதற்கு பொதுமைப் பண்புகளாக நிலவுகின்றது.

- மனிதர்களை நல்வழிப்படுத்துகின்ற அனைத்துக் கருத்துக்களும், உயர்சிந்தனைகளாக அமைகின்றன. கல்வி, ஞானம், பண்பாடு, ஈகை, ஆட்சிமுறை, வாழ்க்கைமுறை, விருந்தோம்பல், நட்பு பாராட்டல் என்ற உயரிய சிந்தனைகளைக் கொண்டது சங்க இலக்கியமாகும்.

- சங்க இலக்கியம் தொகை நூல்களுள் 5 ஆக நூல்களாகவும், 2 புறநூல்களாகவும், 1 அகபுறம் சார்ந்தவையும், பத்துப்பாட்டுள் 5 ஆற்றுப்படை நூலாகவும், 4 நூல்கள் அகம் சார்ந்தவையாகவும், 1 நூல் அகத்திற்கும் புறத்திற்கும் இடம்தர வண்ணமாக அமைவதை சங்க இலக்கிய நூல் அமைப்பின் வாயிலாக அறியமுடிகிறது.

- இன்று பேச்சு வழக்கில் மட்டுமல்லாது இலக்கிய செல்வாக்கில் மிகப் பழமையானது என்பது ஆய்வினால் கண்ட முடிவாகும்.

- சங்க இலக்கியம் நவீன காலத்திற்கேற்பவும், திறனாய்வு போக்கிற்கு ஒப்பவும் இலக்கிய களத்தின் வழியே சமூக மாண்புகளை அதனதன் மரபைப் பாதுகாப்பாக நிரல்படுத்திக் காட்டுகிறது.

- மனித இனத்திற்கு ஏற்ற அறம், பொருள், இன்பம் என்னும் தன்மைகளை உள்ளடக்கி, அவற்றை வாழ்வியல் நெறிகளான தனிமனிதநிலை, சமூகநிலை என்ற பகுப்பில் களவு, கற்பு, கல்வி, வீரம், ஒழுக்கம், புகழ், அறிவு, கொடை, அறிவு, ஆளுமை, அறம், வாய்மை, துணிவு, நட்பு, ஆட்சிமுறை, பழக்கவழக்கம் போன்ற சிறப்பு நலன்களை சங்க இலக்கியத்தால் அறியமுடிகிறது.

- தமிழர் சூழ்நழலைக்கேற்றவாறு வாழ்ந்து வந்துள்ளனர். மலையும் மலைசார்ந்த இடம் குறிஞ்சியாகும். குறவர் தேனெடுப்பர், தினைவிதைத்து மலைநாடுகளில் வாழ்வை மேற்கொண்டிருந்தனர்.

- வயலும் வயல் சார்ந்த பகுதி மருதநிலமாகும். நிலத்தை உழுதுதல், விதைத்தல், களையெடுத்தல், காவல் காத்தல், அறுவடை செய்தல், நெல் அளத்தல் போன்ற தொழிலில் ஈடுபட்டு மிகுந்த நாகரிக வாழ்வில் ஈடுபட்ட தமிழக வரலாற்றில் சிறப்பிடம் பெற்றனர்.

- கடலும் கடல்சார்ந்த பகுதி நெய்தல் நிலமாகும். பரதவர், மீனவர் போன்றோர் மீன்பிடித்தொழிலில் ஈடுபட்டிருந்தனர். உப்பு விளைவித்தல், உப்பிற்கு மாற்றாக பண்டமாற்று முறையில் நெல்லை விலையாக பெற்றனர் என்பது ஆய்வினால் தெளிவுற முடிகின்றது.

- பாலைக்கென்று தனிநிலம் இல்லை, ஆயினும் மணலும் மணல் சார்ந்த இடத்தைப் பெறுவர். இந்நில மக்கள் எயினர், எயிற்றியர் என்பர். இவர்களது தொழிலாக களவு முறை வாழ்வாக அறியமுடிகிறது.

# இயல் - ஒன்று

## சங்க இலக்கியத்தின் தோற்றப் பின்னணி

**அடிக்குறிப்பு:**

1. பாரதியார் கவிதைகள்
2. டாக்டர் இரா. தண்டாயுதம் - சங்க இலக்கியம் பக் - 9
3. தொல்.சொல். எச்சவியல் - நூற் - 935
4. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்- தமிழிலக்கிய வரலாறு பக் - 8
5. தொல்.பொருள். எச்சவியல் - நூற் - 62
6. புறம் . பா. 102, 2வது வரி
7. அகம் . பா. 59, 12வது வரி
8. தொல். பாயிரம் - 7வது வரி
9. புறம் . பா. 72, 13 – 16, ப - 183
10. கலித். 68, 1- 4 வரி
11. மேலது 35, 17 – 20 வரி
12. மதுரைக்காஞ்சி 761 – 763
13. சிறுபாண். 66 – 67
14. எம்மார். அடைக்கலசாமி பக் - 13
15. மேலது பக் - 13
16. மேலது பக் - 13
17. மேலது பக் - 13
18. மேலது பக் - 13
19. மேலது பக் - 13
20. மேலது பக் - 13
21. டாக்டர் மூ. கோவிந்தசாமி. தொல்காப்பியம் பக் - 1
22. தொல். பொருள். அகம். நூற். 949
23. தொல். பாயிரம் - 3-6 வரி
24. தொல். பொருள். அகம். நூற். 999
25. டாக்டர் ச.அகத்தியலிங்கம் சங்க இலக்கியங்கள்,செவ்வியல் இலக்கியங்கள் பக் - 19
26. பெரும் . 78வது வரி

27. மேலது – 115 வது வரி

28. மேலது – 50 – 52 வது வரி
29. தொல். கற்பியல். நூற். 1098 ப - 374
30. தொல். களவியல். நூற். 1042 ப - 340

31. புறப்பொருள் வெண்பாமாலை பக்- 4 1-2 வரி
32. தொல். 552 வேற்றுமையியல்

33. மேலது. 552
34. தொல்.பொருள். செய். 1411 ப - 485
35. மேலது. 1494. மரபு ப - 547
36. தொல். 552
37. பாரதிதாசன் கவிதைகள் பா. 21, ப – 8 – 10
38. நற். 216: 6 – 9 ப - 292
39. தொல். பொருள். கற்பு.1000 ப - 375
40. தொல் பொருள். கற்பு.1001 ப - 375.
41. கலித். நெய்தல். 133, 16 – 13
42. மேலது. 125, 1 – 3
43. குறுந். 3
44. இறையனார் களவியல் ப – 1
45. மேலது. 125, 1 – 3
46. ஐங்குறு – 399, 1 – 3
47. அகம். 369, 22 – 24
48. தொல். பொருள். மரபியல். 1594
49. குறள். 150, (அறத்துப்பால் - பிறனில் விழையாமை) ப - 220
50. புறம். 182: 1 - 3
51. மேலது. 192, 1 – 2
52. மேலது. 18, 18 – 19
53. மேலது. 195, 5- 6
54. மேலது. 189, 5 – 7
55. எம்மார் அடைக்கலசாமி, ப – 34
56. வ.சுப. மாணிக்கம். தமிழ்க்காதல். ப – 35
57. ந. கடிகாசலம்(ப.ஆ) சங்க புலவரின் பல்துறைஅறிவு, ப – 25
58. தமிழ் இலக்கிய வரலாறு, கா.கோ. வேங்கடராமன். ப – 66
59. மேலது ப. 66

60. மேலது ப. 68

61. மேலது ப. 69
62. அகம். 322, – 12 வரி

63. அகம்.302, 10 – 12 வரி
64. புறம். 109: 3 – 8, ப - 220
65. நற். 366, 3 – 6 வரி
66. பதிற்று . 30, 10 – 12 வரி
67. நற். 169, 6 – 7 வரி
68. ஐங்கு . 304, 1 - 2

69. மலைபடு. 419 – 420

70. நற். 60: 4 - 5

71. பொருந். 216 – 217

72. பெரும்பாண். 253 – 254

73. அகம். 200. 2 வரி

74. மேலது. 270, 2 – 3 வரி

75. நற். 331, 1

76. பட்டினப். 111

77. அகம்.9, 11 – 13

# இயல் - 2

## சங்க இலக்கியத்தில் விழுமியங்கள்

### முன்னுரை

மனிதன் தோன்றி வாழ்ந்த காலத்தில் ஆடையின்றி விலங்குகள் போன்று திரிந்தான். அவனை விலங்குகளிடம் இருந்த வேறுபடுத்திக் காட்டுவது அவனிடம் இருந்த பகுத்தறிவே ஆகும். அந்தப் பகுத்தறிவைக் கொண்டு நாள்தோறும் அவனது வாழ்வில் இடம் பெறும் பறவைகள், விலங்குகள், ஏனைய உயிர்கள், இயற்கையான ஐம்பூதங்கள் வழியும் அவன் உருவாக்கிப் பயன்படுத்தியச் செயற்கைப் பொருள்கள் வழியாகவும் பல நெறிகளைக் கண்டறிந்து பயன்படுத்திக் கொண்டான். குறிப்பாகக் காக்கை, புறா, குருவிகள் வாயிலாகக் கூட்டுறவுத் தத்துவத்தையும் கற்றுக் கொண்டான். விலங்குகளான நாய், சிங்கம், புலி, யானை, மாடு முதலியனவற்றிடம் இருந்து நன்றி உணர்வையும், உழைக்கும் திறனையும், கூடி வாழும் பண்பையும், வலிமையையும், வேட்டையாடும் தன்மையையும் கற்றுக் கொண்டான். இதே போன்று ஏனைய உயிர்களிடம் இருந்து நிலம், நீர், தீ, காற்று, வான் வழியாகவும் அவன் உருவாக்கிப் பயன்படுத்திய ஓவியம், சிற்பம், வண்டிகள், இயந்திரங்கள் முதலான கைவினைப் பொருட்கள் வழியாகவும் நெறிகளை வகுத்துக் கொண்டான். இந்த நல்ல நெறிகள் மனிதர்களால் மீறப்படும் பொழுது சுட்டிக்காட்டியும் உவமைகள் மூலமாக ஒப்புமைப்படுத்தியும் நினைவூட்டிக் கொண்டான். இத்தகைய அ∴றிணை வழி நெறிகளைக் கூறும் பழந்தமிழ் இலக்கியங்கள் பல சங்க இலக்கியப் புலவர்கள் தம் நுண்மாண் நுழைப்புலமிக்க அறிவுசால் ஆற்றலால் கவித்திறமிக்க புலப்பாட்டு நெறிகளைக் கொண்டு பாடியுள்ளமையை இவ்வியல் மெய்ப்பிக்கின்றது.

### விழுமியம்

மனிதனுடைய நம்பிக்கைகள், எண்ணங்கள், கருத்துக்கள் என்பவற்றின் உருவாக்கத்தின் அடிப்படையில் அமைந்துள்ளதே விழுமியம்(Value) எனப்படுகின்றது. விழுமியங்களை நேர்மையுடன் பயன்படுத்துவதே அவற்றின் தொடர்ச்சியை உறுதிப்படுத்துகின்றது. இந்தத் தொடர்ச்சியே விழுமியத்தைத் தொடர்புடைய ஏனைய கருத்துக்களான நம்பிக்கை, கருத்து, எண்ணம் என்பவற்றிலிருந்த வேறுபடுத்துகின்றது. இத்தகைய சூழில் சங்க கால மக்களின் விழுமியம் என்பது அக்கால மனிதர்கள் எதை அடிப்படையாகக் கொண்டு செயல்படுகிறார்களோ அதைக் குறிக்கின்றது எனலாம்.

விழுமியங்களை இருவகையாகப் பகுக்கலாம். அவை, தாம் தனிமனித விழுமியம், பண்பாட்டுச் சமூக விழுமியங்கள் என்பனவாம். துனிமனித விழுமியங்கள் தனிமனிதருடைய வாழ்வை ஒருங்கமைப்பதை நோக்கமாகக் கொண்டவை. அவை ஒட்டு மொத்தமாகச் சமுதாயத்தின் ஒருங்கமைவுக்கு அத்தியவசியமாக இருக்க வேண்டியதில்லை. முாறாக சமூகத்தில் பொதுவாக உள்ள விழுமியங்களை பண்பாட்டுச் சமூக விழுமியங்கள் எனப்படுகின்றன. மனிதர்கள் சேர்ந்து வாழ்வதற்கு எந்தெந்த விழுமியங்கள் சிறப்பாகத் தேவைப்படுகின்றனவோ அவையே சமூக பண்பாட்டு விழுமியங்களாகும். சங்க இலக்கியத்தில் விழுமியங்களாக மரபாண்மைக்கு இட்டுச்சென்று குடிவழக்கம், பழக்கவழக்கங்கள், உயிர்கள் ஒரு மனிதனின் உயர்ந்த குணங்கள, பண்புநலன்கள் அவர்கள் மேற்கொள்ளும் அறங்கள் முதலானவற்றின் ஒட்டுமொத்த தொகுப்பே விழுமியம் ஆகும்.

விழு என்பதே – விழுமியம் என்ற சொல்லின் வேர்ச்சொல்லாக அமைந்துள்ளது. தொல்காப்பியத்தில் விழு எனும் சொல் சிறப்பான, உயர்வான, மேன்மையான, பெரிய முதலான ஒத்த பொருள்களைத் தரும் பெயரடையாகத்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, **“விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்”**[1] என்பர் தொல்காப்பியர். **“விழுமியோர் காண்டோறும் செய்வர் சிறப்பு”**[2] என்பார் சேனாவரையர். **“வேற்றுமை இல்லா விழுத்திணை பிறந்து”**[3] **எனவும், “நின்னுறு விழுமம் களைந்தோன்”**[4]. விழுமம் என்பது முறையான சீர்மையும் சிறப்பும் இடும்பையுமாகிய குறிப்பை உணர்த்துவதைக் காணமுடிகிறது.

## 2.1 சங்க இலக்கியத்தில் விழுமியம் எனும் சொல்லாட்சி

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் விழு என்ற வேர்ச்சொல்லை அடிப்படையாகக் கொண்ட விழு, விழும், விழுமம், விழுமிதின், விழுமிது, விழுமிய, விழுமியோர், விழுமியோன், விழுமியம் ஆகிய ஒன்பது சொற்கள் இடம்பெற்றுள்ளன. விழு எனும் சொல் சங்க இலக்கியப் பாடல்களில் மிகுந்த அளவில் இடம் பெற்றுள்ளது. இச்சொல் ஒரு சொல்லின் முன்னொட்டாக நின்று ஒரு சொல் நீர்மைத்தாக அச்சொல்லின் மேன்மையைக் குறிக்கும் வகையில் சிறப்பான, உயர்வான, மேன்மையான, சீர்மையான, சீரிய, பெரிய, விழுமிய முதலான ஒத்த பொருள்களைப் சார்ந்தே நின்று உயர்தகவுச் சொல்லாக அமைகிறது. **‘விழுமம்’** என்ற சொல் இடும்பை, துன்பம், துயரம், வருத்தம் முதலான பொருள்களில் இடம்பெற்றுள்ளன. தொல்காப்பியர் கூறிய சீர்மை, சிறப்பு எனும் பொருள்களில் எங்கும் இடம்பெறவில்லை. மேலும், இச்சொல்லின் அடிப்படையில் விழுமியோர், விழுமியோன், விழுமியம் என வரும் சொற்கள் படர்க்கையிலும் தன்மையிலும் பெயர்ச்சொற்களாகப் பயின்று வந்துள்ளன.

விழுமியம் என்ற சொல்லுக்கான பொருளாக மதிப்பு என்பது இக்காலத்தில் வழுங்கப்படுகிறது. மதிப்பு அல்லது விழுமியம் என்பதற்கான நேரடியான ஆங்கிலச் சொல்லாக (Value) என்பது அமைகிறது.

**தனிமனித விழுமியம்**

மனைவாழ்க்கையில் ஒத்த அன்பு, கணவன் மனைவியர் இருவருக்கும் உரிய பண்பாகும். இந்த ஒத்த பண்பையே காதலில் தனிமனித விழுமியமாக கருதப்படுகிறத. இதனை,

**“---------------------------------- யாக்கைக்கு**
**உயிர் இயைந்தன்ன நட்பின், உயிர்**
**வாழ்தல் அன்ன காதல்**
**சாதல் அன்ன பிரிவு அரியோளே”.**[5]

என்ற பாடலில் தனிமனித விழுமியம் பேணப்பட்டுள்ளது. காதல் வாழ்வில் இருவரும் பிரியாத கூடி வாழ்தலையே பெரும் பேராகக் கருதினர். வறுமை வாழ்க்கை வாழந்தாலும் பிரியா வாழ்க்கையே பெருமை தரும் வாழ்க்கை என்று அறிவுறுத்தப்படுகின்றது. இளமையும் காமமும் இயையப் பெற்றனர். இளமைப்பருவம் நிலையற்றது என உணர்ந்திருந்தனர். இதனை,

**“இளமையும் காமமும் ஓராங்கிப் பெற்றார்**
**வளமை விழைதக்கது உண்டோ? உள்நாள்**
**ஓரோஒ கைதம்முள் தழீஇ ஓரோஒ கை**
**ஒன்றன்கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்,**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை; அரிது அரோ**
**சென்ற இளமை தரற்கு”.**[6]

என்னும் பாடலின் வழியே அறியமுடிகிறது. இர'வு கழியும் மட்டும் நூலிடை கூட விலகினால், தங்கள் மயக்கத்திற்க வருந்தி, கழிபெரும் காம நுகர்ச்சியே சிறந்தது என்று இன்ப நுகர்ச்சியைப் போற்றினர். **“மெய்புகுவன்ன கைகவர் மயக்கம்”**[7]

**“அணிவளை முன்கை, ஆய்இதழ் மடந்தை**
**வார்முலை முற்றத்து நூல்இடை விலங்கினும்**
**கலவுப் புலத்து உறையும் கழிபெருங் காமத்து**
**இன்புறு நுகர்ச்சியின் சிறந்தது ஒன்றுஇல்”**[8]

என்ற பாடலில் இன்பம் துய்ப்போர் ஒருவருக்கொருவர் இன்றியமையாதவராய் ஒருவர் மற்றொரு வருக்குள்ள விருப்பத்தை தனிமனித காதல் விழுமியத்தை அறிய முடிகிறது.

**“தொடலை தைஇய மடவரல் மகளே**
**கண்ணினும் கதவ, நின் முலையே**
**முலையினும் கதவ, நின் தடமென் தோளே”**[9]

**“இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியர் எம் கணவனை**
**யான் ஆகியர் நின்நெஞ்சு நேர்பவளே”**[10]

என்னும் பாடல்களில் காதலின் அன்ப மிகதியால் தமது அன்பு பிறவிதோறும் தொடர வேண்டும் என்னும் விருப்பத்தையும், காதலின் எல்லையை அளவிட்டு உரைத்தல் இயலாது. ஆயினும் பருகததலை ஒத்த தன்மை வாய்ந்தது. ஈருடல் என்னும் உடல் பேதமேயன்றி ஓர் உயிர்த்தன்மைப்பட்ட உயிர் வாழ்வை உடையதெனக் காணமுடிகிறது.

ஒருவரது குணத்தைக் கூறும் பொழுது அவரது குடிப்பிறப்பை வைத்து கணக்கிடுவர். அதாவது, **“தந்தையர் ஒப்பர் மக்கள்”**[11]. ஒழுக்கம், வாய்மை, புகழ் முதலியனவெல்லாம் அவரவர் தம் குடிப்பிறப்பிற்கு ஏற்ற வகையில் அமைவது இயல்பாகும். நாடும் ஊரும் இல்லும் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி தொல்காப்பியர் களவியலில் கூறுவது நோக்கத்தக்கது.

**“நின்னொடு தொன்று மூத்த உயிரினும் உயிரொடு**
**நின்று மூத்த யாக்கை அன்ன, நின்**
**ஆடிகுடி மூத்த விழுத்திணை”**[12]

என்ற பாடலின் வழியே குடிப்பிறப்பில் பழமையான மூத்த குடிப்பிறப்பைச் சிறப்பித்து பாடப்பட்டுள்ளது. **“குடி நன்குடையன்”**[13] என்று சங்க இலக்கியத்தில் பேசப்படுகின்றன.

வாழ்வின் இன்பத்திற்க அடிப்படையாக உள்ளது அன்பு. அன்பு சுரக்கின்ற காலத்தில் அது இயல்பாகவே எழுந்து ஒருவரோடு மற்றவரைப் பிணித்துவிடும். முன்பின் அறியாத இருவர்(ஆணும் பெண்ணும் அன்பின் பிணைப்பில் பழகுவதை,

**“யாயும் ஞாயும் யார் ஆகியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல் நீர்ப் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே”**[14].

என்ற பாடல் இல்லற மாண்பின் தனிமனித விழுமியத்தை வெளிப்படுத்துகிறது**. இதனை, ‘ஈரமுடைமையின் நீரோரனைய”**[15] என்ற அன்பின் மிகுதியை வெளிப்படுத்துகின்றன.

**தமிழர் வாழ்வு பேணும் முறைமை:-**

மனித வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டுவது இலக்கியம். அவ்வகையில் சங்க இலக்கியம் முதன்மையாகக் கொள்ளப் பெறுகிறது. தமிழர் தம் வரலாற்றைப்

பதிவுசெய்து காப்பறண் பெற்ற காலக்கண்ணாடியாகவும், கலங்கரை விளக்காகவும் மின்னிச் சுடர்விட்டு தெளிவுறபெற்ற மானிடரின் வாழ்வைப் புலப்படுகிறது. தமிழரின் மரபுபேணும் வாழ்வுமுறை அவரவர் நிலப்புலத்தின் மூலம் சங்க இலக்கியம் பதிவிடுகிறது. கோப்பெருஞ்சோழனது நாட்டில் வாழும் உழவர்கள் தம் தொழில் வளச்செழிப்பைக் காட்டும் விதமாக அமைவதை,

**"யாமைப் புழுக்கின் காமம் வீடஆரா**
**ஆரல் கொழுச் சூடு அம்கவுள் அடாஅ**
**வைகு தொழில் மடியும் மடியா விழவின்**
**கோழியோனே கோப்பெருஞ்சோழன்"[16].**

என்னும் பாடல்வழியே சங்ககால தமிழர் உழவுத்தொழில் மேற்கொள்ளும் போது ஆமை இறைச்சி, இரால்கொப்பு, மதுவுடன் மயங்கி வாழ்வுபேணும் முறைமையைக் கற்றுக் கொண்டனர். புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான் நட்பால் கிழமைத் தருவதாக பழகி தமிழர் வாழ்ந்தனர். பறம்பு மலையை ஆட்சி செய்தவன் பாரி என்னும் வள்ளல், வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் படையினையுடைய மூவேந்தரும் ஒன்று கூடிப் போர் செய்திராயினும் பறம்பு கொள்வதற்கு அரிது. குளிர்ச்சிப் பொருந்திய நன்னாடாகிய பறம்பு நாடு முந்நூறு ஊர்களை உடையது.

**"கடந்து அடுதானை மூவிரும் கூடி**
**உடன்றினர் ஆயினும், பறம்பு கொளற்கு அரிதே**
**முன்நூறு ஊர்த்தே தண்பறம்பு நல்நாடு**
**முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்"[17].**

இத்தகைய வள்ளமைத்தன்மை கொண்ட பாரி முல்லைக் கொடிக்குத் தேர் கொடுத்ததன் காரணமாக வள்ளல் தன்மையில் சிறந்த வாழ்வுபேணும் முறையைக் காணமுடிகிறது. பண்புடையவர் பிறர்க்கென வாழும் தன்மை உடையவர் ஆவர். அவர்தாம் அஞ்ச வேண்டியதற்கு அஞ்சி, அடக்கத்தோடு வாழும் இயல்புடையவர் ஆவர். தனது கடும் உழைப்பையும் பிறருக்கு அர்ப்பணித்து வாழ்பவர். இத்தகைய உள்ளம் படைத்தவர்கள் தமிழர்கள் என்பதை,

**"உண்டா லம்ம இவ்வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவது ஆயினம் இனிதெனத்**
**தமியர் உண்டலும் இலர், பிறர் அஞ்சாது அஞ்சி**
**புகழெனின் உயிரும் கொடுக்குவர்"[18].**

என்னும் பாடல் புலப்படுத்துகிறது. மேலும் மனிதநேய வாழ்வு முறைகளைப் பின்பற்றி வாழ்வதை,

**"ஆற்றுதல் என்பது அலந்தவர்க்கு உதவுதல்**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**
**பண்பு எனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்**
**அன்பு எனப்படுவது தன்கிளை செறாமை**
**அறிவு எனப்படுவது பேதையர் சொல் நோன்றல்**
**செறிவு எனப்படுவது கூறியது மறாஅமை**
**நிறை எனப்படுவது கண்ணோடாது உயிர் வவ்வல்**
**பொறை எனப்படுவத போற்றாரைப் பொறுத்தல்"[19].**

எனும் கலித்தொகை வரிகள் தனிமனிதரின் வாழ்வையும், சமுதாய பின்புலத்தையும் உயர்த்தும் உயரிய பண்புகளின் வாழ்வு முறைகளை சங்க இலக்கியத்தின் வழி சுட்டியுரைத்துள்ளன. முத்து, மாணிக்கம், பொன் பொருந்திய அணிகலன்கள் கெட்டனவாயினும் அவற்றைச் சீர்செய்துக் கொள்ள இயலும். அதுபோல தம் குலத்துக்கு ஏற்ற குணங்களின் அமைதியும் மேம்பாடும் ஒழுக்கமும் தம்முடைய பழைய இயல்பினின்றும் கெட்டதாயின் அதனால் பிறந்த அழுக்கை நீக்கி கழுவி, விளங்கும் புகழை முன்பு போல நிற்கும்படி நிலைநிறுத்தி, குற்றமற்ற அறவினை, தெய்வத்தன்மைப்பெற்ற வாழ்க்கை முறைகளைக் கொண்டு சங்ககால தமிழர்கள் வாழ்ந்தனர் என்பது தெளிவுற முடிகின்றது.

### 2.2 வாழ்வில் தலைமைப் பண்பு:-

சங்ககால தமிழர் கூடிவாழ கற்றுக்கொண்டபோது, அக்குழுவிற்குரிய வாழ்விற்கு ஒரு தலைமைப் பண்பு தேவைப்பட்டது. அப்பண்பிற்குரியவற்கு ஆளுமை, அதிகாரம், குணநலம் அனைத்தும் தேவைப்பட்டது. தலைமை என்பது ஆளுமையின் ஒரு குணநலனாகவும் அதே சமயம் ஒற்றுமைத் தன்மை, மனப்போக்கை அறிதல், துடிப்பு நெகிழ்வும் பெற்றிருந்தனர். **"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்''[20], "சொல்லால் முறைசெய்தான்"[21]** தலைமை பொறுப்பில் இருப்பவர்களின் கடமைகளில் தமிழர் வாழ்வு பேணும் முறைமையைக் காணமுடிகிறது. அறியாமை என்னும் இருளைப் போக்கிக் கொள்ள தமிழர்கள் தம் அன்றாட வாழ்வில் கல்வியைக் கற்றுக்கொள்ள முன்வந்துள்ளனர். இதனை,

**"மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்**
**கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டி**
**பெருஞ்சினத்தாற் புறக்கொடா அது**
**இருஞ்செருவின் இகல் மொய்ம்பினோர்"[22].**

சங்க காலத்தில் பகைமையற்ற வாழ்வு நலனில் ஒன்றாக கூடி வாழ்ந்த பெருமையையும், அவர்களிடம் கோபம் ஏற்படுமே தவிர உண்மையான கோபம் இன்றி அவர்களின் வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருந்தது. விளையாட்டாகச் செய்யும் போர்களில் கூட அச்சம் இன்றியும் புறம்கொடாமலும் அவர்கள் வீரப்படைகளுடன் வாழ்ந்தனர் என்பது ஆய்வினால் தெளிவாகிறது.

**உலகத் தோற்றம் பற்றிய விழுமியம்**

ஐம்பூதங்களால் உருவானது இவ்வுலகமெனின், அது எவ்விதம்? என்ற கேள்வி அறிவியலுக்குச் சவாலாக அமைந்தது ஒரு காலத்தில். ஆனால் பரிபாடல்,

**"கருவளர் வானத் திசையிற் தோன்றி**
**உருவறி வாரா ஒன்றன் ஊழியும்**
**உந்துவளி கிளர்ந்த உளமுழ் ஊழியும்**
**சென்தீச் சுடரிய ஊழியும் பணியொடு**
**தன்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்**
**நுண்முறை வெள்ள முழ்கியார் தருபு**
**உள்ளிபிகிய இருநிலத் தாழியும்"**[23]

என்று கூறப்பட்டுள்ளது. இதில் வானிலிருந்து காற்றும் காற்றிலிருந்து தீயும் தீயிலிருந்து நீரும் நீரிலிருந்து நிலமும் தோன்றிய நிலைகளைக் அப்பாடலசிரியர் கூறியுள்ளார். இவை மட்டும் இன்றிக் கதிரவனில் இருந்து பிரிந்த பூமி நீண்ட காலத்திற்கு நெருப்புக் கோளமாக இருந்தது என்றும் அது காலப்போக்கில் சிறிது சிறிதாகக் குளிர்ந்து பனிப்படலமாக மாறி, பின் நெடுநாட்களுக்குப் பிறகு நிலம் தோன்றியது என்றும், உலகத்தின் தோற்றம் குறித்த பல அறிவியல் உண்மைகளை விளக்குகிறது. அறிவியல் தொழில் நுட்பம் இல்லாத காலத்தில் தமிழரின் அண்டம் குறித்த அறிவு நம்மைப் பெருமிதம் கொள்ளச் செய்கிறது.

**இயற்கைப் போற்றல்**

ஒளவையார் 'அணுவைப் பிளந்து ஏழ்கடலைப் புகட்டி குறுகத் தெறித்த குறள்'. அணு என்பது கண்களுக்குப் புலப்படாத மிகச் சிறிய மூலக்கூறு என்பது அறிவியலின் கண்டுபிடிப்பு. **"அணங்கொடு நின்றது மலை"**[24], **"காடே கடவுள் மேன புறவே ஒள்ளிழை மகளிரோடு மள்ளர்மேன ஆறே அவ்வனைத்து"**[25], **திருநல உருவின் மாயா இயற்கைப் பாவை"**[26]. இயற்கையின் நுட்பமான அறிவியல் உண்மைகளை அன்றைய தமிழர்கள் தங்கள் இலக்கியங்களில் இயல்பாகக் கூறியிருப்பது நம்மை மேலும் வியப்பிலாழ்த்துகின்றது.

**நீரியல் அறிவு**

மேகம் கடல் நீரைப் பெற்று மழையாகப் பொழிகிறது என்பது அறிவியல் கண்டுபிடிப்பு. இது ஒரு நாள் ஆய்வின் முடிவல்ல. பல்லாண்டுகளின் பலன். ஆனால் இதனை விளக்கும் முகமாக,

**“நிறைகடல் முகந்துராய் நிறைந்து நீர்தளும்பும் தன்**
**பொறை தவிர்பு அசைவிட”[27]**

என்று பரிபாடலில் முகில்கள் கடலின்கண் நீரைமுகந்துக்கொண்டு வந்து, ஊழி முடிவின்கண் முழுகுவிக்க முயன்றது போல் மழை பெய்தது. இவை தமிழரின் நீரியல் வெளிப்பாடுகள் என்பதை,

**“நிலம் தீ நீர் வளி விசும்பொடு**
**ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்”[28]**

**“மண் திணிந்த நிலனும்**
**நிலன் ஏந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளியும்**
**வளித்தலைஇய தீயும்**
**தீ முரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை போல”[29]**

இவ்வாறு இயற்கை அண்டமாய், அனைத்துமாய், அவணியாய், அனைத்துயிராய், அவதரித்துள்ள நிலையைத் தமிழர் நன்குணர்ந்து இருந்தனர். நீரைத் **தெய்வம்** என்றனர். நீரைக் **கங்கை அம்மன்** என்றனர். மாரியை **மாரி அம்மன்** என்று அமைத்து அதற்கு நீர்க்கரம் எடுத்து வேண்டினர்.

**“நீரின்றி அமையா யாக்கைக்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**
**உணவெனப்படுவது நிலத்தொடு நீரே**
**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**
**உடம்பும் உயிரும் படைத்திசி னோரே”[30]**

இவ்வாறெல்லாம் நீரைத்தொழுது கொண்டாடினா. தமிழ் மக்களின் நீரியல் அறிவு சங்க இலக்கியங்களின் வாயிலாகப் புலனாகிறது.

**நிலம், நீர்**

தொல்காப்பியம் ஐவகை நிலங்கள் எனப்பகுத்து அவற்றுக்கான கரு, உரிப்பொருட்களை வகைப்படுத்துகின்றது. பாலை என்பது முல்லையும் குறிஞ்சியும் மருவிய நிலம் என்பதால் அது மேற்காட்டிய வகைப்பாட்டில் இல்லை. நீர்வளம், நிலவளத்துக்கேற்ப குறிஞ்சியும் முல்லையும் நீர்வளம் குறைந்த ‘வன்புலம்’ கரடு முரடான நிலம் என்றும், மருதமும் நெய்தலும் நீர் வளம், மண்வளம் மிக்க ‘மென்புலம்’ என்றும்,

நீர்ப்பாசன வசதி அற்ற நிலம் ‘புன்புலம்’ என்றும், ஆடுமாடு மேய்ச்சலுக்கான மண்கண்டம் குறைந்த பகுதி ‘விடுபுலம்’ என்றும், ஒன்றும் பயனில்லாத நிலம் ‘களர்நிலம்’ என்றும் இலக்கியங்கள் வகைப்படுத்தின. அடிப்படையில் இவை நீரை ஆதாரமாகக் கொண்டே வகுக்குப்பட்டுள்ளன. ‘மலைத்தலைஇய கடற்காவிரி’ என்பார்கள்.

**“முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே”**[31]

நீர்வளம் உற்பத்தி ஆகுமிடம் குறிஞ்சி ஆகும். நீராதாரம் சேகரம் ஆகுமிடம் முல்லை ஆகும். அது இழிந்து விளையுள் தருமிடம் மருதம் ஆகும். நீர் கடலில் கலக்கும் கழிமுகப்பகுதி நெய்தல் ஆகும். நீராதாரம் இல்லாது அழிக்கப்பட்ட இடம் பாலை ஆகும். களர்நிலம் பாலையே. ஆதில் நீர் கட்டி, உரமேற்ற பகுதி விளைநிலமாகும் என்பது பழந்தமிழ் முறையாகும்.

நிறத்தின் அடிப்படையில் செம்மண் நிலம் எனவும், தன்மையின் அடிப்படையில் களர் நிலம் எனவும், சுவையின் அடிப்படையில் உவர்நிலம் எனவும் நிலத்தைத் தமிழர் வகைப்படுத்தினர். தமிழர், செம்மண் நிலத்தை அதன் பயன் கருதிப் போற்றினர். இதனைச் ‘செம்புலப் பெயல் நீர்போல்’ என்னும் குறுந்தொகை வரி உணர்த்தும். உவர்நிலம், மிகுந்த நீரைப் பெற்றிருந்தும் பயன்தருவதில்லை. இதனை **அகல்வயல் பொழிந்தும் உறுமிடத் துதவா உவர்நிலம்** என்னும் புறநானூற்று வரிகள் புலப்படுத்துகின்றன. எதற்கும் பயன்படாத நிலம் களர்நிலம். இதனைப் **பயவாக் களரனையர் கல்லாதவர்** என்பார் திருவள்ளுவர்.

### 2.3 நிலப்பாகுபாடு பற்றிய விழுமியம்

சங்க இலக்கியத்தை அணுகும் மானிடவியல் பார்வைகொண்டோர், வேட்டையாடும் இனக்குழு வாழ்க்கையும் ஆடுமாடு மேய்க்கும் இனக்குழு வாழ்க்கையும் அழிந்தநிலையில் தனிச்சொத்துடை மையும் அரசு தோன்றிய வரலாற்றுக்காலம் என்று சங்ககாலத்தை வரையறுக்கின்றனர். இனக்குழச் சமூகத்தின் எச்சங்களாக, பண்படுத்தப்படாத புன்செய் நிலப்பகுதியில் வாழ்ந்த மக்களின் இயல்பையும் அந்நிலத்தையும் உரைப்பதாக,

**“கருங்கால் வரகே, இருங்கதிர்த் தினையே**
**சிறுகொடிக் கொள்ளே, பொறிகிளர் அவரையொடு**
**இந்நான்கு அல்லது உணாவும் இல்லை**
**துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று**
**இந்நான்கு அல்லது குடியும் இல்லை”**[32].

எனப் புன்புலப் பூக்கள், உணவு முதலியனவும், நடுகல் வழிபாடுடன் நெல் பரப்பி வழிபடுவா். குறிஞ்சி நில வாழ்க்கையைப் பற்றிக் கூறும் போது, கபிலா், இயற்கை வளம் கைகொடுத்ததைக் குறிப்பிடுகிறாா்.

**“உழவா் உழாதன நான்கு பயன் உடைத்தே**
**ஓன்றே சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே**
**இரண்டே தீஞ்சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே**
**மூன்றே கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே**
**நான்கே அணிநில ஓரி பாய்தலின் மீது அழிந்து**
**திணிநெடுங் குன்றம் தேன் சொரியும்மே”[33].**

அகப்பாடல்களில் தலைவன் உணவு திரட்டுபவனாகவும், தலைவி உணவு உற்பத்தியில் ஈடுபட்டவளாகவும் இருப்பது கவனத்துக்குரியது. குறிஞ்சி, முல்லை ஆகிய இருநிலங்களுக்கும் தொடா்பில்லாத வகையில் மருதநிலம் அமைந்திருப்பதக் காணலாம். பொருளாதார மேம்பாட்டிற்கும் உபரி உற்பத்தி மிகுதிப்படுவதற்கும், நாகரிக வளா்ச்சிக்கும் களமாக அமைந்திருக்கும் நிலம் மருதமாகும். மருதநிலத் தலைவனின் செல்வம் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் தரும் தன்மை கொண்டது.

**“பூம்போது சிதைய வீழ்ந்தென, கூத்தா்**
**ஆடுகளம் கடுக்கும் அகநாட்டையே”[34].**

என மருத நிலத்தின் பெருமை பாடப்பட்டுள்ளது. சங்ககால வாழ்க்கையானது நிலவியல்புக் கேற்ப அமைந்து, முதுகுடி மக்கள், குறுநில மன்னா், வேந்தா் எனச் சமூகத் தலைவா்களைப் பகுத்துக்கொள்ள சங்க இலக்கியங்கள் இடம் தந்துள்ளன. பாண்டியன் நெடுஞ்செழியன் கூறுவதுபோல, வேற்றுமை தெரிந்த நாற்பால் என்பது நானிலத்தைக் குறிப்பிடுவதாக அறிய முடிகிறது.

**மழை:-**

இன்றைய அறிவியல் மழைக்கருவிகள் தோற்றுவாய், பொழிநிலை, பொழிமுறை ஆகியன குறித்து வகுத்துள்ளனா். பழந்தமிழ் இலக்கியங்கள் வாயிலாக இந்த நவீன கருத்துக்களின் அடிப்படை முன்பே தமிழருக்கு அறியப் பெற்றுள்ளனா். மழை மூன்று நிலைகளாக ஏற்படுகிறது. நீா் ஆவியாதல், அடா்வாதல், கீழிறங்கல் எனப்படும். கடல்நீா் முகந்த பருவக்காற்று மலைகளில் மோத ஏற்படும் பருவமழை, குறை தாழ்வழுத்தத்தால் ஏற்படும் சூறாவளிப்புயல் உண்டாகும். ஓரே இடத்தில் கடும் வெப்பத்தால் வெப்பக்காற்று மேலே சென்று குளிா்ந்து ஏற்படும் வெப்பச்சலன மழை.

நீா்+ ஆவி + விண் தூசு = மழைத்தூசுகள். மழைத்தூசுகள் - சூழ்மநிலை – மின் இறக்கம் பெற்று, குளிா்ந்து, ஒன்று சோ்ந்து, கருமேகமாய் நீா்கொண்டு, நீா்த்துளி பெரிதாகி புவி ஈா்ப்பால் மழையாய் வருகிறது. இதே மேகங்கள் பருவக்காற்றுகள் மூலமாக தண் தடத்திலும், புவி சூழற்சியால் தண் தடம் மாறியும், புவியின் தடையால்

மலைகளில் மோதி மேலோங்கி குளிர்ந்து மழை தரும். இவை குறித்த நுணுக்கங்கள் இலக்கியங்களில் மழைக்கு கடலே காரணம் என்பதை தமிழர் உணர்ந்திருந்தனர்.

இதனை,

''நிறை கடல் முகந்து
பொழிந்தன்று வானம்''[35]

**''வான் முகந்த நீர்**
**மலை பொழியவும்**
**மழை பொழிந்த நீர்**
**கடல் பரப்பவும்**
**மாரி பெய்யும் பருவம் போல''[36]**

**''திரை இரும் பனிப்பௌவம்**
**செவ்விதா அற முகந்து''[37]**

எல்லா மேகங்களும் மழை தருவன அல்ல. ''சூழ்ம நிலைப்புத்தன்மை அற்ற மேகங்களே தக்க கதிரியக்கங்களில், மின்னூட்டங்கள் கொண்டு மழை தரவல்லன''38. ''வளிமண்டல உப்புக்களும், தூசுகளுமே நீர்த்தூசி உருவாகக் காரணம்''39 அந்நீர்த்தூசிகள் காற்றின் உதவி கொண்டே பிரிந்து இணைகின்றன. எனவே வளியும் தூசுமின்றி மழை இல்லை. விண்தூசுகளும் உப்புகளுமே மழைத்தூசிகள் உருவாகி மழை வரக் காரணம்.'**69.** வானின் அத்துணைக் கருவி கரணங்களும் சேர்ந்தே மழை என்ற ஒன்றைப் பிறப்பிக்க இயலும். நீர் - மேகம் - மழை என்ற மழைக்கூறு மட்டும் சாத்தியமே அன்று. கோள்நிலை, காற்று நிலை, கடல் நிலை, ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய அனைத்துக் கோள்களுமே மழைக் காரணிகளை உருவாக்குகின்றன. வற்கடம் வருவது மேற்கண்ட காரணிகளின் மாறுபட்ட இயக்கங்களால் தான். வான் என்ற விசும்பு தன்னளவில் ஒருங்கிணைந்து செயல்பட்டே மழைக்கருவை உருவாக்க இயலும் என்பது காண இயலுகிறது.

**மருத்துவக் கலைஞர்**

பழுதுபட்ட ஒரு உறுப்பை எடுத்துவிட்டு வேறொரு உறுப்பைப் பொருத்துதல் என்பது இன்றைய மருத்துவ உலகின் சாதனை, கீரந்தையின் இல்லக் கதவைத் தட்டியதற்குத் தண்டனையாக, தன் கையைத் தானே துண்டித்துக் கொள்கிறான் பாண்டியன். அதன்பின் பொன்னாலாகிய கையைச் செய்து வைத்துக் கொண்டான். அன்றிலிருந்து பொற்கைப் பாண்டியன் என அழைக்கப்பட்டான். உறுப்பினை இழந்த ஒருவன் செயற்கை உறுப்பினைப் பொருத்திக் கொண்டு அறிவியல் உலகின் அரிய சாதனையான அறுவைச் சிகிச்சையினைப் பதிற்றுப்பத்தில்,

**“மீன்றேர்கொட்பிற் பனிக்கய மூழ்கிச்**
**சிரல் பெயர்ந் தன்ன நெடுவெள் ளுசி**
**நெடுவசி பரந்த உடுவாழ் மார்பின்**
**அம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது**
**தும்பை சூடாது மலைந்த மாட்சி”**[40]

என்ற ஐந்தாம் பத்தின் இரண்டாம் பாடலடி கூறுகிறது. போரில் வெட்டுண்ட உடலை வெள்ளுசி கொண்டு தைத்த மருத்துவன் செயலை விளக்குகின்றன. மேலும், இத்தகைய நிகழ்வு ஒன்று புறப்பாடலிலும் காணப்படுகிறது. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனாரின் பாடல் வரிகள் மேல் பஞ்சினை வைத்துச் சிகிச்சை அளித்தமையை உணர்த்துகின்றன. இவை அனைத்தையும் பார்க்கும் போது இன்றைய மருத்துவ முறையின் நவீனமான சிகிச்சைகள் அனைத்தும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழரால் கையாளப்பட்ட வந்துள்ளன என்பது புலனாகிறது.

**இயற்பியல் அறிவு**

தமிழரின் மருத்துவம் குறித்த அறிவு மட்டுமின்றி அவர்களின் இயற்பியல் அறிவும் நம்மை வியக்க வைக்கிறது. இயற்பியல் அறிஞர் நியூட்டன் மூன்று இயக்க விதிகளைக் கண்டறிந்தார். அதில் இரண்டாவது விதியானது உந்த மாறுபாடாகும். ஒரு பொருளின் மீது செயல்படும் விசையைப் பொருத்தது என்றும்,இது அந்த விசை செயல்படும் திசையிலேயே ஏற்படும் என்று கூறினார். இதையே புறநானூற்றில்,

**“பேர் யாற்று**
**நீர் வழிப்படுஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படுஉம்”**[41]

என்ற பாடல் வரியில் ஆற்றின் வழியே செல்லும் தெப்பம் நீரின் விசையை மட்டும் பெற்று அது செல்லும் திசையிலே செல்லும். அது போல் வாழ்க்கை சீராக செல்ல வேண்டும் என்று புலவர் வலியுறுத்துகிறார். அமுதாம்பிகை ஆடும் ஊசலின் கயிறு நீளமாக இருந்ததால் மெதுவாக ஆடுகிறது என்றும், ஆனால் அவள் காதில் அணிந்திருக்கும் குண்டலம் குறைவான நீளத்தில் தொங்குவதால் விரைவாக ஆடுகிறது என்றும் கூறியுள்ளார்.

இதனையே கலிலியோ ஊசலின் நீளம் குறித்த தம் ஆய்வில் ஊசலின் நீளம் குறைவாக இருந்தால் விரைவாக ஆடும். ஊசலின் நீளம் அதிகமாக இருந்தால் மெதுவாக ஆடும்'' என்று கூறியுள்ளார். இவ்வாறான ஆய்வுகளின் மூலமாக அறியப்பட்ட பல அறிவியல் உண்மைகள் வெறும் அனுபவத்தின் மூலமாகவும், பண்டைய தமிழர்களின் அறிவுத் தேடலின் விளைவுகளாகவும் பெறப்பட்டதை உணரமுடிகிறது. அன்றைய மனிதன் கண்ட கனவை இன்றைய அறிவியல் முன்னேற்றம் நிஜமாக்கியது. தேடல் இருக்கும்

இடத்தில் தான் வெற்றி கிடைக்கிறது. பறவையைக் கண்ட மனிதன் தானும் பறக்க நினைத்தான். இறக்கைகள் இல்லாதபோதும் தன் முயற்சியைக் கைவிடவில்லை. விளைவு விமானத்தின் துணையோடு விண்ணில் பறந்தான். இவ்விமானங்கள் பற்றிய பல குறிப்புகள் சங்கப் பாடல்களிலேயே பயின்று வந்துள்ளமையைக் காணமுடிகிறது. **“வலவன் ஏவ வானவூர்தி”**[42] என்னும் பாடல் அடியில் வானவூர்தி என்ற அற்புதமான சொல் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காண முடிகிறது.

## 2.4 உயிர்கள் பற்றிய விழுமிய அறிவு:-

தொல்காப்பியத்தில் அமைந்துள்ள மரபியல் உயிர்ப்பாகுபாட்டை எடுத்துக் கூறுகின்றதை,

**“ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே**
**இரண்டு அறிவதுவே அதனொடு நாவே**
**மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே**
**நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே**
**ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே**
**ஆறுஅறிவதுவே அவற்றொடு மனனே**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே”**[43]

உடம்பால் மட்டும் அறிவன ஓரறிவு உயிராகும். உடம்பாலும் நாவாலும் அறிவன ஈரறிவு உயிராகும். உடம்பு நா, மூக்கு, கண் இவை நான்காலும் அறிவன நான்கறிவு உயிர்களாகும். உடம்பு, நா, மூக்கு, கண், காது இவை ஐந்தாலும் அறிவன ஐந்தறிவு உயிர்களாகும். இவற்றோடு மனத்தாலும் அறிவன ஆறறிவு உயிர்களாகும். இவற்றைத் தெளிவாக அறிந்தோர் நெறிமுறையாக உணர்த்தியுள்ளனர். இவற்றில் அ.்.றிணை ஆகிய ஓர் அறிவு உயிர் முதல் ஐந்தறிவு உயிர் வரை உள்ள உயிர்களின் வழி வெளிப்படுத்தும் நெறிகளைச் சங்க இலக்கியப் பாடல்கள் ஆராய்ந்து காணலாம்.

### ஓரறிவு உயிர்

தொடு உணர்வை மட்டும் கொண்டதாக இருப்பவை ஓரறிவு உயிர்களாகும். அவை மரம், செடி, கொடி, புல், பூக்கள் முதலியவையாகும். இதனைக் கூறும் தொல்காப்பிய மரபியல் நூற்பா,

**“புல்லும் மரனும் ஓர் அறிவினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே”**[44]

புல், மரம், செடி, கொடிகள், தாவர இனங்கள் அனைத்தும் ஓர் அறிவு உடையனவாகும்.

**மரம்:-**

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள நற்றிணை நூலில் மரத்தினை உயர்திணைக்கும் ஒப்பிட்ட நெறியினை வெளிப்படுத்துவதையும் மரத்தினை மனித குழந்தையாகக் கருதி வளர்த்ததையும் புன்னை மரத்தின் வாயிலாக அறிய முடிகிறது. அதாவது சிறுவயதில் சில விதைகளைக் கொண்டு மணல் குவியலில் புதைத்து விளையாடிய பொழுது புதைந்து வளர்ந்த மரத்தினைக் காட்டி ஒரு தாய் தன் பிள்ளைக்குச் சோறு ஊட்டி வளர்த்தாளாம். இதே குழந்தை பெரியதாகி தலைவன் காதல் கொள்ளும் போது தலைவனோடு இது மரமன்று, இது என் அக்காள், இதன் கீழ்நின்று காதல் கொள்ளுவது நெறியன்று என்று கூறித் தலைவி விளக்குவது இதன்வழித் தமிழ்ப் பண்பாடான தாய், தந்தை, சகோதர, சகோதரி முன்பு தலைவனோடு காதல் கொள்வது மதிப்பிற்குரியதில்லை என்ற உண்மை வெளிப்படுத்துவதை அறிய முடிகிறது. மேலும் அப்பாடலில் மரத்தினை நீர் ஊற்றி வளர்க்காமல் பால், நெய், ஊட்டி வளர்த்ததாகக் கூறப்படுவதன் மூலம், அம்மரத்தினை மனிதனாகவே கருதி இருப்பதை நாம் உணர முடிகிறது. இவ்வாறு மரத்தினையும் ஓர் உயிராக மட்டும் கருதாமல் மனித வாழ்வின் உறவாகக் கருதும் உயர்ந்த பண்பு சங்க இலக்கிய விழுமியமாக பார்க்க முடிகிறது.

சங்க காலத் தமிழர்களின் அகவாழ்க்கையில் தோழியின் பங்கு குறிப்பிடத்தக்கது. களவு வாழ்க்கையில் பகற்குறி, இரவுக்குறியில் ஏற்படும் இடர்கள், அலரினால் ஏற்படும் மனத்துயரங்கள் களவை நீட்டிக்க விரும்பும் தலைவனிடத்தில் திருமணத்தை வலியுறுத்தல், அறத்தொடு நிற்றல், கற்புக் காலத்தில் பிரிவிடை வருந்தும் தலைவியை ஆற்றுவித்தல் எனப் பல நிலைகளில் தோழியின் கூற்று அமையினும் அக்கூற்றுகளில் அ.்.றிணை உயிர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. தலைவன் திருமணத்தைத் தள்ளிப் போட்டக் களவிலேயே இன்பம் காணவிழைகிறான். ஆனால் தோழி விரைவில் திருமணம் செய்து கொள்ளுமாறு ஓர் அறிவு மரத்தினை எடுத்துக்காட்டி தலைவியின் மனநிலையும் ஊராரின் இடையே நிலவும் பேச்சுகளையும் வரைவின் இன்றியமையாமையும் எடுத்துக்கூறி விளக்குவதை,

**“சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு இவள்**
**உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே”**[45]

என்ற பாடலில் பலாவானது வேரில் பழுத்தால் அதன் பழங்களைத் தரை தாங்கும். கொம்பில் பழுத்தால் எவ்வகைப் பற்றுக்கோடும் இன்றி விழும் நிலையில் பழத்திற்கு உரியவர் பறித்து நுகர்தலைப் போலத் தலைவியின் நிலையறிந்து அவளை மணம் செய்துக் கொள்ளுதல் வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

**ஈரறிவு உயிர்**

ஈரறிவு உயிர்கள் என்பது நத்தை, சிப்பி, முரள் முதலியவையாகும். தொல்காப்பியர் ஈரறிவு உயிர்கள் பற்றிக் கூறுகின்றார்.

**"நந்தும் முரளும் ஈரறினவே**
**பிறவு உளவே அக்கிளைப் பிறப்பே"[46]**

இந்த ஈரறிவு உயிர்களைக் கொண்டு சங்க இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கும் செய்திகளின் மூலம் பல்வேறு ஒழுக்க நெறிகளை அறிய முடிகிறது. பிரிந்த தலைவன் சிறுகேற்றுக்குழியில் நிரம்பியுள்ள நீரினைப் பெறும் கேணி என்று கருதி யானைகள் தொட்டுப் பார்த்து அஞ்சி செல்லும் நாட்டினையுடைய தலைவன் சென்றுள்ளான் என்று தோழி தலைவியை ஆறுதல்படுத்தித் தேற்றி வைக்கும் ஒழுக்க நெறியினை அறிய முடிகிறது.

மற்றொரு பாடலில், தலைவனே பொருளீட்டுதல் காரணமாகத் தலைவியை பிரிந்து செல்லுவது வருத்தமளிப்பதாகத் தன் நெஞ்சிற்கு உரைக்கும் பாடலாக இடம் பெற்றுள்ளது. அதில் தளிரால் பொதியப் பெற்றிருக்கும் குவிந்த இருப்பைப்பூக் கொத்துக்கள் கோத்த நூலினின்றும் கழன்று விழும் துளையுடைய முத்துக்களைப் போலச் சிறந்த நிலப்பரப்பிலே உதிர்ந்து கிடக்கும். மழை துளியிடுதலையோ மறந்துவிட்ட அவ்விடங்களிலேயுள்ள அழகிய குடிகளையுடைய சிறிய ஊரினிடத்தே செல்வதை விட, தலைவியோடு இருப்பதே நலமாக இருக்கும்.

தலைவன் பரத்தையோடு மகிழ்ந்த நீராடி விளையாடி பின்பு ஈரம் காய்வதற்கு முன் தலைவியைக் காண வந்தபோது, தலைவி தலைவனைப் பழித்துக் கூறுவதாகவும் அதில் தலைவனின் இழி குணங்களைத் தலைவியே சுட்டிக் காட்டிப்பழிப்பர். மனம் கமழும் மலர்களோடே இரந்து விட்டுப் புலால் நாற்றம் வீசும் இடத்தே சென்று வருதல் முறையாகுமோ என்று மீன்களோடு சிப்பிகளையும் கொண்டு சேர்த்துக் கூறுவது போல் புலால் நாற்றத்தையும் மலர் நாற்றத்தையும், ஒன்றாகக் கருதுவது முறையாகுமோ என்று தலைவி, தலைவனை மென்மையாகப் பழித்துக் கூறும் இந்த நெறியினை,

**"பன்மீன் கொள்பவர் முகந்த இப்பி**
**நாரரி நறவின் மகிழ் நொடைக்கு ஊட்டும்**
**பேரினுக் கொற்கைப் பொருந் வென்வேல்"[47]**

என்னும் பாடல் உணர்த்துகிறது. ஒருவர் தான் விரும்பிச் செய்வதையே இன்பமாகக் கருதாமல் பிறர் உணர்வுகளையும் புரிந்து நடப்பதும் பிறர் உணர்வுக்கு மதிப்பளிப்பதும் உயர் பண்பினை உணர்ந்து கொள்ளாத தலைவனின் உணராத் தன்மையை வருந்தி தலைவி முத்தின் வழியே வெளிப்படுத்தும் உணர்வுகளின் மூலம் சமுதாயத்தில் கட்டாயமாகப் பின்பற்ற வேண்டியுள்ளது. கைவினைத் திறனிலே வல்லானாகிய பொற்கொல்லன் கவின்மிகுமாறு கழுவித் தூய்மை செய்யத பசுமுத்தைப் போலக் குவிந்த பூங்கொத்துகளையுடைய புன்னை அரும்பியிருக்கின்ற தன்மைக் கொண்ட புலவுநாற்றத்தையே கடற்கரை நாட்டுச் சேர்ப்பனாகிய நம் தலைவன் தான் என்ற தன்மையினை நினைந்தவாளாய இப்படி வருந்திக் கூறுகின்றனள் தலைவி. இதனைக் கேட்கும் தலைவன் விரைந்து சென்று மணம் பெறுதற்கு முயல்வான். புன்னையது பூவரும்புகள் கழுவாத பசுமுத்தைப் போலத் தோன்றும். புன்னை முகை விரிந்து மணம் பரப்பத் தொடங்கின, கடற்கரையின் புலவு நாற்றமும் மறையும். அது போலத் தலைவன்

தன்னை வரைந்து மணம் புணரின் களவும் அதனால் பெறும் அலரால் வரும் துயரமும் அகன்றுபோம் என்று கூறுவதனால் தெளிவுறக் காணமுடிகிறது.

**மூன்றறிவு உயிர்கள்**

மூன்றறிவு உயிர்கள் என்பன கரையான், எறும்பு, சிலந்தி முதலிய உயிர்களாகும்.

**"சிதலும் எறும்பும் மூவறிவினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"[48]**

என்று தொல்காப்பியம் கூறுகிறது. 'ஒருவன் வாழ்க்கை வாழ்வதற்குப் பொருள் இன்றியமையாததாக அமைகிறது. இருந்தாலும் பொருள் மட்டுமே வாழ்க்கையன்று. வாழ்க்கைக்குரிய அன்பும், அறனும் வேண்டியுள்ளது. எனவே வாழ்க்கையில் காதலும் வேண்டும். ஏதை விடுவது என்ற மனநிலையில் ஒவ்வொருவரும் இன்றும் கூட இருப்பதை நாம் காண முடிகிறது. இதனையே சங்க இலக்கியப் பாடலில் மூன்றறிவு உயிரான எறும்பினை ஒப்புமைப்படுத்தும். அதில் தலைவனின் குழப்ப நிலையும் அதிலிருந்து விடுப்பட முடியாமல் தவிக்கின்ற நிலையையும் இருதலை கொள்ளி எறும்பு போலவும் இறுதியில் தலைவனின் அன்பே வெற்றி பெறுகிறது. அன்பே எல்லா நெறிகளிலும் உயர்நெறியாக விளங்குகின்றது'82. இருதலைக்கொள்ளி இடைநின்றது வருந்த ஒரு இதிலிருந்து தலைவனின் உள்ளத்து நிலைக்கு இருதலைக்கொள்ளியை நின்று வருந்தி, ஒரு தலைப்பட்டு உறவின் நிலைமை மிகவும் சிறந்த உவமையாதலைக் கருதி இன்புற முடிகிறது.

**"கோடை நீடலின் வாருபுலத்து உக்கு**
**சிறுபுல் உணவு நெறிபட மறுகிறுண்பல்**
**எறும்பு கொண்டளைச் செறித்த"[49]**

இங்ஙனம் காதலியருடன் கூடியிருத்தல் இன்பம். இதே கருத்தினை **"உடம்பொடு உயிரிடை என்ன மற்றன்ன மடந்தையொடு எம்மிடை நட்பு"[50]** என்ற குறள் வலியுறுத்திக் கூறுவதை அறிந்து இன்புறலாம். பொருள்கள் உள்ள பொழுது அவற்றைப் பெருவாரியாகச் செலவழித்துப் பின்பு துயரத்தில் விழுந்து விடுகிறோம். ஆனால் எறும்போ தம் வருங்காலத்தையும் எதிர்நோக்கி வாழ்ந்துவரும் பண்பியையும் சேமிக்கும் உயரிய நெறியை மூன்று அறிவு உயிரான எறும்பின் மூலமே கற்றுத் தெளியலாம். கரையானின் சில பண்புகளும் இந்த பாடலில் கூறப்பட்டுள்ளன.

**"கோடை நீடலின் வாருபுலத்து உக்கு**
**சிறுபுல் உணவு நெறிபட மறுகிறுண்பல்**
**எறும்பு கொண்டளைச் செறித்த"[51]**

**நான்கறிவு உயிர்**

**"வண்டும் தும்பியும் நான்கு அறிவினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"[52]**

வண்டும் தும்பியும் நான்கு அறிவுடையது. வாயில் மறுக்கும் தலைவி, தோழியிடம் தலைவனின் செய்கையைக் குறிப்பிடும்போது ஆறு கால்களையுடைய வண்டுகள் தாமரையிடத்தே இட்டு வைத்த முட்டைகளை அழிக்கும். வேகத்தடை நீர்த்துறையினையுடைய ஊரின்கண் வாழும் தலைவன் என்று கூறுகின்றாள். மனதில் அன்பற்ற பரத்தையர் என் மன இன்பத்தை அழிக்கின்றனர். தலைவன் பொருட்டு வாயிலாக வந்த பாணன் உள்ளிட்டோரிடம் அவன் திருந்தாதத் தன்மையினைக் கூறும்பொழுது நண்டு, முதலை, ஆண்யானை முதலிய விலங்குகளின் இயல்புத் தன்மையை வைத்துக் கூறுகின்றாள். தலைவன் மீது இருக்கும் சினத்தினைத் தெளிவாக நான்கறிவு உயிர்வழி எடுத்துக் கூறுவதையும், தன் வீட்டு துன்பநிலையையும் தலைவனின் இழிகுணத்தையும், மனம் புண்படாமல் எடுத்துரைக்கும் நெறியினை அறியமுடிகிறது.

தலைவனின் தகாத குணங்களை எண்ணி வருந்தும் தலைவியை ஆற்றுவிக்கும் இடத்திலும், அஃறிணை உயிர்கள் குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. நண்டானது ஆம்பல் மலரின் தண்டினை அறுத்துத் தனக்குரிய அடைகரையில் உறைவது போன்று தலைவனும் இனிப் பரத்தையர் தொடர்பை விடுத்த இல்லத்திலேயே எப்போதும் உன்னைப் பிரியாது தங்குவான் என ஆற்றுவிப்பதாக உள்ளது. இதுபோன்று களவு வாழ்க்கையில் இன்பமுடன் இருந்த தலைவன் தலைவியை மணந்து வாழும் கற்பு வாழ்வினை விரும்பாது நிற்கிறான். அவனது புறத்தொடர்பு அறிந்த தலைவி அதனை ஏற்க இயலாது தோழியிடம் உரைக்கும் இடத்தில் சங்கப்புலவர் அஃறிணை உயிர்கள் குறித்து எடுத்துரைக்கின்றார். மகளிர் தம் வளையகத்தே வாழும் நண்டினையும் பலவகையான மலர்களையும் பறித்த வருவதைப் போன்று தலைவனும் தலைவியை மறந்து பல பரத்தையரையும் நாடி வருகின்றான். தலைவியின் வேறுபாட்டை அறிந்த நற்றாய் வெறியாட்டு நிகழ்த்த எண்ணும் பொழுது தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பாள். நண்டானது குளிர்ந்த சேற்று நிலத்திலே நகத்தினால் கோல் செய்யும் தன்மையை உடைய ஊரைச் சேர்ந்தவன் நம் தலைவன், ஆகவே அவன் நம் தலைவியை நன்முறையில் காப்பான் என அறத்தொடு கூறுகின்றாள் தோழி. அந்நிலத்தில் வாழும் அஃறிணை உயிரான நண்டே உயர்ந்த நெறியைக் கடைப்பிடிக்கும் பொழுது அந்நிலத்தின்கண் வாழும் தலைவன் உயர்ந்த நெறியைக் கொண்டவனாக இருப்பான் என்ற கருத்து வெளிப்படுத்துகின்றது.

வண்டின் மூலமாகவும் தலைவனின் இழிக்குணத்தை எடுத்துரைத்து நெறியற்ற செயலை விடுமாறு எடுத்துரைக்கிறது. வண்டொன்று பலப்பல மலர்களை நாடிச் சென்று தேனுண்டு பின் அப்பூக்களை நாடாது வாடும்படி விட்டுச் சென்றுவிடும் என்ற செய்தியை உணர்த்துகிறது. இது பற்பல பரத்தையரை நாடிச் சென்று இன்புற்று அவரைக் கைவிடும் இயல்புடைய தலைவனுக்கு உவமையாயிற்று. பரத்தையிடம் சென்று வந்த தலைவனை நண்டோடு ஒப்பிட்டுக் கூறுவதைக் காணலாம்.

**“நண்டு முள்ளிநீடிய முதுநீர் அடைகரைப்**
**புள்ளிக் களவன் ஆம்பல் அறுக்கும்**
**தன் துறை ஊரன்”**[53]

இவ்வரிகளில் நீரினுள் வளர்ந்துள்ள ஆம்பல் தண்டினை அறுத்தெறிந்து விளையாடி மகிழும் நண்டு பற்றிய செய்தி உணர்த்தப்படுகிறது. இது தலைவன் இல்லறத்தைச் சிதைத்துவிட்டுப் பரத்தையுடன் சென்று மகிழ்வது போல் உள்ளது என்கிறார் ஓரம்போகியார். சேற்றில் அளைந்தாடிய நண்டு சேறு தன் உடலில் பட்டதை நினையாமல் தன் வளைக்குள் செல்கிறது. இச்செய்தி பரத்தையோடு இன்புற்றதன் அடையாளத்தோடே தன் வீட்டினுள் தலைவன் புகுந்தான் என்ற செயலோடு ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

**“அள்ளல் ஆடிய புள்ளிக் களவன்**
**முள்ளி வேரளை செல்லும் ஊரன”**[54]

**ஐந்தறிவுடைய உயிர்கள்:**

விலங்குகள், மக்களுக்குரிய உயர்ந்த பண்புகள் இல்லாததாகும், பறவைகள், சில கடல்வாழ் உயிர்கள் முதலானவை ஐந்தறிவு உயிர்களாகும். இவை தொடு உணர்வு, நுகர்தல் உணர்வு, பார்த்தல், கேட்டல் முதலான ஐந்து உணர்வுகளைக் கொண்டிருப்பவையாகும். இதனைத் தொல்காப்பியர்,

**“மாவும் மாக்களும் ஐ அறிவினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே”**[55]

என்று கூறுகின்றார்.

**மயில்**

ஒவ்வொரு நாளும் தலைவன் பரத்தையோடே கூடி வாழும் இயல்புடையவன். அவனது இந்த தன்மையை ஊடல் கொண்ட தலைவி இல்லத்திற்குத் திரும்பி வரும் போது இந்த நிகழ்வினை மென்மையாகச் சுட்டிக்காட்டுவது மட்டுமல்லாமல், தலைவனின் இழிகுணத்தை மயிலின் மூலம், தன் எடுத்துக் கூறுமிடத்தில் தலைவனின் மனம் புண்படாத வண்ணம் மென்மையாகக் கூறும் நெறியினை ஐங்குறுநூறு நூலில் இடம் பெற்றுள்ளதை,

**“புன்றலைப் பேடைவரிநிழ லகவு**
**மிவ்வூர் மங்கையர்த் தொழுத்தினி**
**யெவ்வூர் நின்றன்று மகிழ்ந நின்றரே”** [56]

இவ்வரிகளால் அறியலாம். மயில் பற்றிய செய்திகள் ஐங்குறுநூறில் 291, 298, 293, 258, 294, 295, 296, 297 எனும் பாடல்களில் காண முடிகிறது. அ.்.றிணை வாழ்க்கையோடு

ஒப்பிட்டு உயர்திணை நெறிப்படுத்தும் நோக்கில் கோழியின் மூலமும் சில நெறிகளைச் சங்க இலக்கியப் பாடல்கள் கூறுவதைக் காணமுடிகின்றது. அதில் பெண் கோழி தன் குஞ்சுகளோடு கூட்டுக்குள் இருந்து, ஆண் கோழியினை உள்ளே வராதவாறு தடுக்கின்றது. காரணம் ஆண்கோழி வேறுயொரு பெண் கோழியோடு பரத்தமை கொண்டதால் இந்தப் பெண் கோழி தன் குஞ்சுகளைக் கூட்டுக்குள் அடைத்து வாயில் நின்று மறைக்கும். கணவன் தவறான வழியில் செல்வதை மனைவி கண்டிக்கின்றாள். அதுவும் குழந்தைகளை வீட்டுக்குள் அனுப்பிவிட்டு அவைகள் காணாத வண்ணம் கண்டிக்கின்றாள். இந்த நிகழ்வினைக் கோழிகள் தன் குஞ்சுகளைக் கூட்டுக்குள் அனுப்பிய பிறகு கண்டிப்பதை உணர முடிகிறது. தலைவி கருவுற்ற காலத்தில் தலைவன் அருகில் இருக்கும் விருப்பதைத்தையும் இன்றளவும் கூட பெண்கள் விரும்பி வருவதைக் காண்கின்றோம். இந்த விருப்பத்தைத் தலைவனுக்குத் தெரிவிக்க நீர்க்கோழியின் மூலம் உவமைப்படுத்தித் தலைவனுக்கு விளங்க வைக்கும் பண்பு அழகுற ஐங்குநூற்றிலுள்ள பாடல் மெய்ப்பிப்பதை,

**“நீருளை கோழி நீலச் சேவல்**
**கூருகிக் பேடை வயாஅம் உளர”**[57]

இவ்வரிகள் நீர்கோழியானது தன் துணைவியான நீல நிறச் சேவலை வேட்கை மிகுதியில் நிலைத்திருக்கும். அன்னப்பறவை நாரை ஆகியவற்றின் மூலமாகவும் குற்றங்களை எடுத்துக்கூறி அல்லது குற்றங்களைச் சுட்டிக் காட்டி நெறிப்படுத்தம் வழியினையும் சங்க இலக்கியங்களில் அறிய முடிகிறது.

எ.கா. தலைவனின் பரத்தை ஒழுக்கத்தினைப் பழித்துரைக்கும் வண்ணம் நாரை பற்றிய செய்தி வருகிறது. இந்த நாரை தலைவியின் நலம் நுகர்ந்து விட்டுதன் வீட்டில் பழிச்செய்தியுடன் அமைதியாக இருக்கும் தலைவனுக்கும் உவமையாகிறது. கிளியின் மூலம் பெறப்படும் செய்திகள் ஐங்குறுநூறு (281, 282, 283, 285, 288, 289) எனும் பாடல்களிலும் காக்கையின் மூலம் அறியப்பெறும் செய்திகள் (புறம் - 342) கூகையின் மூலம் பெறப்படும் செய்திகள் (புறம் – 240) கோட்டான் மூலம் பெறப்படும் செய்திகள் (புறம் – 280) ஆகியன நிறைந்துள்ளன.

### 2.5 விலங்குகள்

விலங்கின் வாயிலாகச் சங்க இலக்கியங்களில் நுட்பமான நெறிகளை வெளிக்கொணர முடிகிறது. யானை, பன்றி, மாடு, ஆடு, மான், நாய், பூனை, குரங்கு இவற்றின் மூலம் அகச் செய்திகளின் பண்பினையும் புறச்செய்திகளின் சிறப்புகளையும் நன்கு வெளிப்படுத்தியுள்ளதைச் சங்க இலக்கியப் பாடல்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

சங்க இலக்கியத்தில் யானை பற்றிய சிறப்புகளும் அதன்வழிப் பெரும் உவமைகளின் கருத்துக்களும் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. நற் - 390, மலைபடு – 347, 372, 378, நற் - 4, 39, 294, பதிப் - 3 – 4 நெடுநல் - 115, 116 பொருந – 126, 127, பெரும் - 351, 352, குறு – 232, நற் - 376, அகம் - 176, குறிஞ்சிப்பாட்டு- 162, 165, சிறு – 200, அகம் - 14, 197 இவற்றில் குறிப்பாகக் கருவுற்று இருக்கும் தலைவி தலைவனைப் பிரிந்து வாடுகின்றாள். அவளைத் தேற்றும் நோக்கத்தோடு தோழி தலைவி, காட்டுவழிச் செல்லும் நம் தலைவன் அவ்வழிகளில் யானைகள் தன் கன்றோடு துள்ளி விளையாடும் விளையாட்டைக் கண்டு யானை குடும்பத்தின் இன்பத்தைக் கண்டும் நிச்சயம் நல்லுற்று இருக்கும் உன்னையும் நினைத்து வந்து சேருவான் என ஆற்றுவிக்கும் பண்பினையும் அதே நேரத்தில் ஒற்றுமையோடு வாழும் குடும்பத்தை முன்னிலைப்படுத்தி உரைக்கும் நெறியினையும் சங்க பாடல்கள் மூலம் உணர முடிகிறது.

**“படவோன் தழீஇய விறலோன் மார்பில்**
**புன்தலைப் புதல்வன் ஊர்பு இழிதர”**[58]

ஒரு யானை நெல் களஞ்சியத்தில் சென்று உணவைக் கொள்ளுமானால் அது உண்ணும் உணவைவிட அதனால் மதிப்பிட்டுச் சீரழியும் உணவு மிகுதியாக இருக்கும். இதே போன்று அரசனும் பொதுமக்களுக்கு விதிக்கப்படும் வரி மிகுதியாக இருப்பின் மக்களும் வறுமையுற்றுப் பல அவதிகளால் சிக்குண்டு யானையின் காலில் நெல் சிதைந்து வீணாவது போல், மக்களும் அழிந்துப் போவர். அரசனின் செங்கோலுக்கும் இழுக்கு நேரிடும். யானைக்குத் தனியாக உணவைக் கொண்டு கொடுத்தால் அது பல நாளைக்கு உணவாக பயன்படும் என்று பாண்டிய அறிவுடைநம்பி எடுத்துரைக்கின்றார்.

பாலைநிலத்தில் கடும் வெயிலில் ஆண் மானும், பெண் மானும் தாகத்தோடு தண்ணீர் தேடிச் செல்கின்றன. வழியில் ஒரு குட்டையில் ஒரு சிறிதளவே தண்ணீரே உள்ளது. ஆண் மான் பெண் மானிடம் நீ குடித்து உயிரைக் காப்பாற்றிக்கொள் என்கிறது. பெண் மானோ ஆண் மானைப் பார்த்துப் நீ இருந்தால் குடும்பத்தைக் காப்பாற்றுவாய் ஆக நீ குடித்தவிடு என்கிறது. இந்த விவாதங்களுக்குப் பிறகு ஒன்றாக நீரை நாம் குடிப்போம் என்ற முடிவுக்கு வந்தன. குட்டையில் நீரை ஆண் மான் குடிப்பது போன்று பாவனை செய்கிறது. பெண் மானும் நீரை குடிப்பது போன்று பாவனை செய்கிறது. இவ்வாறு விட்டுக் கொடுத்து வாழும் உயரிய நெறி மான்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

இதே போன்று ஆண் பன்றி தன் பெண் பன்றியையும் தன் குழந்தைகளையும் பாதுகாக்க எதிரியை எதிர்க்க முன் நிற்கும் வீரச் செயலை பாடல்கள் எடுத்தியம்புகின்றன. குறிப்பாகக் குரங்கு (ஐங்குறு – 271, 272, 273, 274, 277, மான் (ஐங்குறு – 203, 217, புறம் - 2, 132, 152, பன்றி – 152, செம்மறியாடு – 33, நாய் - புறம் - 33, 74 முதலானவை இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது.

### 2.6.1 மெய்ப்பாட்டு விழுமியம்

தமிழருக்குக் காதலும் வீரமும் இரு கண்களாக விளங்கின. சங்ககாலத் தமிழர் களவும் கற்றுமற என்பதற்கிணங்க 'களவு' வாழ்க்கையும், 'கற்பு' வாழ்க்கையும் கொண்டு மெய்ப்பாடுடைய உள்ளத்தோடு வாழ்ந்தனர். இது சங்கத் தமிழரின் பண்பாடான மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகின்றன.

**"யாயும் ஞாயும் யாராகி யரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி யறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே."[59]**

என் தாயும் தந்தையும் நின் தாயும் தந்தையும் எவ்வகையில் உறவினர்? நானும் நீயும் முன்பு அறிந்தோமா? செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் செம்மண்ணுடன் கலந்து செந்நீராவது போல நம் இருவரின் உள்ளங்களும் ஒன்றுபட்ட உள்ளறிவை மெய்ப்பித்து இனி பிறிவென்பதே இல்லையென உணர்த்துகின்றன இப்பாடல்,

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"[60]**

மலைப்பக்கத்திலே கரிய காம்புகளைக் கொண்டுள்ள குறிஞ்சி மலர்களைக் கொண்டு பெரிய அளவாகத் தேனைச் சேர்த்தற்கு இடமான நாட்டையுடைய தலைவனால் விளைந்த நட்பு, நிலவகத்தைக் காட்டிலும் பெரிதும் விரிந்தது, வானை விடவும் அதிகம் உயர்ந்தது, கடலைக்காட்டிலும் அளத்தற்கு அரிய ஆழமுடையது. எனவே தலைவன் தலைவியோடு கொண்டுள்ள நட்பு மிகவும் சிறந்ததாகும். தலைவன் தலைவியை விரைந்து மணங்கொள்வான் என்பதை புலவர் தன் நுண்ணறிவால் பாடலின் வாயிலாக எடுத்தியம்பினார். சந்தனம் மலையில் பிறந்தாலும், மலைக்கு அது பயன்படாது, முத்து கடலிலே பிறந்தாலும், கடலுக்கு அது பயன்படாது. யாழிலே இசை பிறந்தாலும், யாழுக்கு அது பயன்படாது. இவையனைத்தும் பயன்படுத்துவர்க்கே அது பயனுள்ளதாக அமையும். அது போல நும் மகள் நுமக்கு பயன்படாமல் தலைவனுக்கே பயன்படுவாள் என்று அறிவுரைக் கூறி வழியனுப்பும் நுட்பறிவுநிலையைக் காணமுடிகிறது. பிறப்பில் பிரியாமை, இறப்பில் பிரியாமை எனும் கருத்து சங்க இலக்கியப் பாடல்களில்,

**"சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்**
**பிறப்புப் பிறிது ஆகுவ தாயின்**
**மறக்குவேன் கொல்என் காதலன் எனவே."[61]**

என்ற பாடலில் தோழி! நான் சாவுக்கு அஞ்சவில்லை நான் இறந்துவிட்டால் மறுபிறப்பில் என் தலைவனை மறந்து விடுவேனா என்றே அஞ்சுகிறேன். மேலும்,

**"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்**
**வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய**
**வாரேன் வாழிய நெஞ்சே."** [62]

என்னும் பாடல்கள் பொருள்தேடும் நோக்கத்தோடு தலைவியைப் பிரிய முற்பட்டான் தலைவன். பிறகு தன் பிரிவால் தலைவி துயருற்று வருந்துவாளே என்ற கவலை தோன்றியதால் அவன் தன் நெஞ்சிற்குக் கூறியதாக அமைந்தது. அரசாட்சியாக இருந்தாலும் உயிராக இருந்தாலும் தடையின்றித்தர இசையும் நலங்கிள்ளியின் உள்ள மெய்ப்பாடு வாயிலாக பண்டைத் தமிழரின் மெய்ப்பாடுகள் கொண்ட அறிவைப் புலப்படுத்துதலைக் காண முடிகிறது.

### 2.6.2 **கல்வி பற்றிய விழுமியம்**

ஒருவனின் உயர்வுக்கு முதல் காரணம் ஒழுக்கம், பின்பு கல்வியாகும். உலகில் ஒரு மனிதனுக்கு அழகு சேர்ப்பது பணிவும், இன்சொல்லும் சார்ந்த கல்வியறிவேயாகும். இதனை நாலடியார் **கல்வியழகே அழகு** என்கிறது. தொழில் சார்ந்த அனைத்து துறைகளும் செவ்வனே வெற்றி பெற மூலதனமாக திகழ்வது கல்வி. அத்தகைய கல்வியைப் பெற வேண்டும் என புலவர்கள் வலியுறுத்துகிறார்கள். கல்வி கற்றவர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பதை,

**"ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அ.்.துடையார்**
**நாற்றிசையும் செல்லாத நாடில்லை – அந்நாடு**
**வேற்றுநாடாக தவமேயாம் ஆயினால்**
**ஆற்றுணா வேண்டுவதில்"**[63]

**"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழு முயிர்க்கு"**[64]

என்பது வள்ளுவர் வாக்கு. நம் முன்னோரின் மொழிமரபிற்கேற்ப கல்வியின் சிறப்பினை **"எண்ணும் எழுத்தும் கண்ணெத் தகும்".** தலையின் கண்ணே அமையப் பெற்ற பொறிகளுள் கண்ணே சிறப்புடையது. இக்கண்ணைக் காத்து, கண்ணுக்கு இணையாக வைத்துக் கல்வி பேசப்படுமானால் அதன் சிறப்பின் மேம்பாடு உயரும். மக்களுக்கும் விலங்குகளுக்கும் வேற்றுமை உண்டாவதனை விளக்குவது கல்வி. இதனை,

**“விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோ டேனை யவர்”**[65]

என வள்ளுவர் விளக்குவார். இந்நிலையில் தனி மனித வாழ்வு, ஒரு நாட்டு மக்களின் வாழ்வையும் உயர்த்துவது கல்வியே. தொல்காப்பியர் காலத்திலேயே(கி.மு.4 – கி.பி.12) உயர்குடிப் பிறந்தவர்களுக்கே கல்வி என்ற நிலை இருந்தது. பின்பு சங்க மருவிய காலத்தில் தோன்றிய திருக்குறள், நாலடியார் போன்ற நூல்களில் கல்விக்கு சிறந்த இடம் இருந்ததை உறுதிசெய்யப்பட்டுள்ளது. சங்க காலத்தில் ஐந்நூறு புலவர்களுக்கும் மேல் வாழ்ந்துள்ளனர். அரசர் பலர், பெண்பாற் புலவர், குறவர் குடிப்பிறந்த குறுயெழினி, இளவெழினி, வெண்ணிக்குயத்தி ஆகியோர் சிறந்த புலவராய் இருந்தனர். வானம் அளந்தனைத்தும் அளந்திடும் வன்மொழி என்ற பாரதி கூற்றும், உலகில் முதல்மொழி பேசிய தமிழர், இவன் பேசிய மொழி தமிழாம். அமிழ்தினும் இனிய செந்தமிழ் முதிர்ந்த இலக்கிய வளத்தைப் பெற்று கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தக்குடி நம் தமிழ்குடி. ஆதியில் தமிழ்நூல் அகத்தியருக்கு உணர்த்திய மாதொரு பாகனை வாழ்த்தும், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றம் எரிந்த முருகவேளும் தமிழ் மொழியை சங்கம் வைத்து ஆராய்ந்திருந்தனர் என்பது ஆய்வினால் புலனாகிறது.

அறிவுடையோனின் அரசு செல்லும் என அறிவாளிகளின் மேன்மையை ஓர் அரசனே அறிவிக்கிறான். இனம், குலம் ஆகிய வேற்றுமைக்கு அப்பாற்பட்டதாகக் கல்வி போற்றப்பட்டது. **“கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினும் கற்கை நன்றே”**[66] எனச் செல்வத்தினும் கல்வியே பெருமை சேர்ப்பது என அக்காலத்தார் கருதி வந்தனர். வெள்ளத்தாலும் அழியாது வெந்தழலாலும் வேகாது எவராலும் கொள்ளையடிக்க முடியாது, கொடுத்தாலும் நிறைவின்றி குறையாது என்ற வரலாற்றின் பின்புலத்தை அகத்தியர் உட்பட பன்னிரு மாணக்கரும், சேர, சோழ, பாண்டியர், கனிஷ்கர், குப்தர், பல்லவர், நாயக்கர், குடவோலைமுறை, திண்ணைப்பள்ளி, கல்வெட்டுக் கல்வி, மடப்பள்ளி போன்ற நிலையில் கல்வியறிவை அக்காலத்தமிழர் பெற்றனர்.

உலகம் போற்றும் கல்வியை பெற்ற இளைய மகனையே தாயும் விரும்புவாள். கல்வி கற்ற புலவர்களையே அரசர்களும் விரும்பி போற்றுவர். ‘கேடில் விழுச்செல்வமான கல்வியைக் குறித்து ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்,

**“உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே**
**கீழ்ப்பாலொருவன் கற்பின்**
**மேற்பா லொருவன் அவன்கண் படுமே”**[67]

பல தலைமுறைகளைக் கடந்து தந்தை மகற்காற்றும் நன்றியை நினைத்து செயலாக கல்வியறிவு அமைகிறது. ஒவ்வொரு நூற்றாண்டையும் கடந்த கல்வி ஒருவருக்கு எழுமையும் ஏமாப்புடைத்துப் பெற்றதாவும் ஒவ்வொருவர் நாவிலும் கல்வி நிற்கிறது. இதனால் தான் கல்வி எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகுந்ததுமின்றி வானியல்,

மருத்தும், இசை, ஓவியம், சிற்பம், நாட்டியம் முதலிய கல்வியின் பால் பெற்ற அறிவைச் சிறக்க செய்கிறது எனலாம்.

**அறிவுரைப் பகர்தல்:-**

சங்ககாலப் புலவர்கள் பாடல்களை பாடி பொருள் பெறுவது மட்டுமல்லாமல் தேவையான பொழுது அரசர்களுக்கும், மக்களுக்கும் அறிவுரைக் கூறி நல்வழிப்படுத்தினர். ஆசிரியர் மாணவனுக்கு நன்னெறி புகட்டுவது போல் அறிவுப்புலம் பெற்ற புலவர்கள் மன்னனை நல்லாட்சி புரியும்படி நல்வழிப்படுத்தினர். கற்றவருக்கு சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பதற்கிணங்க கற்றறிருந்த புலவர்கள் ஒவ்வொரு நாட்டிற்கும் சென்று தன் சொல்லாற்றால் திறனால் நல்வழிப்படுத்தினர். ஒரு நாட்டு மன்னன் மக்களிடம் எவ்வாறு நடந்துக்கொள்ள வேண்டும் என்றும், வரிவாங்கும் முறையையும் எடுத்துரைத்தார். இதனை பிசிராந்தையார் புறநானூற்றுப் பாடலில்,

**“யானை புக்க போலத்**
**தானு முன்னா னுலகமுங் கெடுமே”**[68]

**“நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்”**[69]

மன்னன் மக்களுக்கு உயிர் போன்றவன். இதை உணர்ந்து தன் நாட்டு மக்களுக்கு எத்துன்பமும் நேராமல் அவர்களைப் பாதுகாத்து திறம்பட ஆட்சிச் செய்வதே மன்னனின் கடமையென மோசிகீரனார் பாடலின் மூலம் விளக்குகிறார். சமுதாயத்தில் ஒவ்வொருவரின் தலையாய கடமைகள் இன்னின்ன என்பதைப் பொன்முடியார் என்னும் பெண்பால் புலவர்,

**“நெல்லும் உயிரென்றே நீரும் உயிரென்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்”**[70]

**“ஈன்றுபுறந் தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே”**[71]

மாங்குடி மருதனார் என்ற சங்கப்புலவர் மனித வாழ்வில் இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை அறத்தை அறிவுறுத்தும் பொருட்டாக பாண்டிய நெடுஞ்செழியனிடம், உன் முன்னோர்கள் பகைவரை வென்று குவித்த பொருட்கள் பல. உலகத்தைச் சிறப்புற ஆண்டு மறைந்த மன்னர்கள், கடல் அலைகள் கொண்டு வந்து குவிகின்ற மணலினும் பலராவார்.

**“கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்**
**நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மற**
**நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட**
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்”**[72]

**முடி சூடிய மன்னரும் முடிவில் ஒரு பிடி சாம்பலாவர்** என்றார். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்கு மருதனிளநாகனார் அறநெறியே அரசின் வெற்றிக்கு அடிப்படையென்பதை அழகுற எடுத்துக் கூறினார். நால்வகைப் படையும் உடையார் எனினும் அறமே இறுதியில் வெற்றிக்கு அடிப்படையாகும் என்று வலியுறுத்துகின்றது.

**நட்பு**

நட்பென்பது உள்ளத்தால் இரண்டறக் கலத்தலேயாகும். சங்க காலத்தில் அரசர் புலவர்களிடையே நட்புக் கொள்வதும், மாந்தர்கள் தம் உறவினரிடையே நட்புக் கொள்வதும், தலைவன் தலைவியிடம் நட்புக் கொள்வதும், தோழி தலைவியிடம் நட்புக்கொள்வதும் இயற்கையான ஒன்றாகும். அதியமான் ஔவையிடம் கொண்ட நட்பின் பரிசாக நெல்லிக்கனியை தந்தார். தலைவி தலைவனின் நட்பானது திடீரென்று ஒரு நாளில் ஏற்படுவதன்று. பல பிறவிகளிலும் தொடர்ந்து வருவதும், ஊழின் வலிமையால் மீண்டும் கூடுகின்றனர். **“காதல் நிலத்தினும் பெரிது வானினும் உயர்ந்தது நீரினும் ஆரளவின்றேசாரல்”**[73] என்றும், ஒரு காதல் மனைவி தன் கணவனிடம் கூறியதை,

**“இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயா கியரென் கணவனை**
**யானாகியர் நின் நெஞ்சுநேர் பவளே”**[74]

கணவன் மனைவியைக் காப்பாற்றும் முறையினை அ∴றிணை உயிர்களின் அன்பு வாழ்க்கை வழியே உணர்த்தியதை,

**“சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென்று எண்ணிப்**
**பிணைமான் இனிதுண்ண வேண்டிக் - கலைமான்**
**கள்ளத்தின் ஊச்சும் சுரமென்பர் காதலர்**
**உள்ளம் படர்ந்த நெறி”**[75]

**“துடியடிக் கயந்தலை கலங்கிய சின்னீரைப்**
**பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறெனவும் உணர்ந்தனரே**
**இன்னிழ லின்மையின் விருந்திய மடப்பிணைக்குந்**
**தன்னிழைக் கொடுந்தளிக்கும் கலையெனவும் உரைந்தனரே”**[76]

ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தி நெருங்கிப் பழகி உறவினர் அல்லாதவருடன் பற்றும் பாசமும் கொண்டு வாழ்வது நட்பு. இவ்வுலகத்து உயிரினங்கள் அனைத்தும் தனிமையை நாடுவதில்லை. தனித்து வாழ்வதைவிட ஒருவரோடொருவர் நட்புக்கொண்டு கூட்டாக வாழ்வதையே விரும்புவர். நட்பு என்பதற்கு சிநேகம், உறவு. சுற்றம், நண்பன், யாழின், காதல், அரசாங்கம், கையூட்டு, மாற்றரசரோடு நட்புசெய்தல் எனப்பொருள் தருகிறது மெய்ப்பன் அகராதி. நட்பு என்னும் சொல்லுக்கு **“ஒத்த கருத்து நலன்”**[77]**.** வாழ்க்கையின் உயிர்நாடி அன்புதான் அத்தகைய அன்பினால் விளையும் அறமாகிய நட்பு இல்லையேல் உலகம் இருள்மயமானதாகிவிடும். இவ்வுலக வாழ்வில் வெற்றி அடையவேண்டுமானால் நல்லதொரு நட்பு அமைவது அவசயமாகும. **‘இடையூறுகள்தான் நட்பின் தகுதியை எடுத்துக்காட்டும் அக்கினிப் பரீட்சையாகும் என்கிறார் காந்தியடிகள்’**[78]**.** அத்தகைய நல்ல நட்பானது, உடை நெகிழ்ந்தவனுக்கு அப்பொழுதே கை சென்று உதவி செய்வது போல, நண்பனுக்குத் துன்பம் நேர்ந்தால் அப்பொழுதே சென்று அத்துன்பத்தை நீக்க வேண்டும் என்பதை,

**“உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு”**[79]

என்கிறது. நம் வாழ்வில் இளமை, முதுமை, ஏற்றத்தாழ்வு, மகிழ்ச்சி, துக்கம் என்று பல்வேறு படிநிலைகளைக் கடந்தபோதும் கடைசிவரை நம்முடன் தொடர்ந்து வருவது உண்மையான நட்பு. இதனை உணர்த்துவது கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாயர் நட்பு. சோழநாட்டின் உறையூரை ஆண்ட கோப்பெருஞ்சோழனின் செம்மையும், புலமையும் கேள்வியுற்று அவன்பால் பேரன்பும் நட்பும் கொண்டவர் பிசிராந்தையார். பார்க்ககாமலே ஒருவர் மீது ஒருவர் குறையாத சிறந்த நட்புகொண்டதை,

**“காதல் கிழமையும் உடையன் அதன்தலை**
**இன்னதோர் காலை நில்லலன்**
**இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே”**[80]**.**

என்ற பாடல் பிசிராந்தையாரைப் பார்க்காமலே நட்புகொண்டு வாழ்ந்துவரும் கோப்பெருஞ்சோழன் தான் வடக்கிருந்து உயிர்துறக்கும் நிலையில், அங்கே அவரைச் சூழந்திருந்த சான்றோர்களிடம் என் பிசிராந்தையார் நட்பிலும், அன்பிலும் உண்மையுள்ளவன். அவன் கண்டிப்பாக வருவான். அவனுக்கு என் அருகே ஒரு இடம் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டாராம்.

நட்பு என்பது உள்ளத்தைத் திறந்து காட்டுவதாக இருக்க வேண்டும். இதனை ‘உலகிலேயே மிகவும் உன்னதமானது நட்பு. ஒருவன் தன்னுடைய உள்ளத்தைத் தன்னுடைய நண்பனுக்குத் திறந்து காட்டினால் இருவேறுபட்ட நன்மைகள் ஏற்படுகின்றன. அது மகிழ்ச்சியை இரட்டிப்பாக்குகின்றது’[81] என்கிறார் பிரான்சிஸ் பேகன். இராமன் மேல் கொண்ட நட்பின் திறத்தால் தன் இதயத்தைத் திறந்துகாட்டினான் அனுமன். இதனை,

**“எந்தை! வாழி அதனுங்க! என்**
**நெஞ்சம் திறப்போர் நிற்கான குவரே”**[82]

என்கிறார் ஆத்திரையனார் என்னும் புலவர், ஆதனுங்கன் என்னும் வள்ளலிடம் தான் கொண்ட நட்பின் மிகுதியை வெளிப்படுத்துகிறார். மேலும் பாரியின் இறப்புக்கு பின் அதை ஏற்கமுடியாது தவிக்கும் கபிலர் உம்மோடு எக்காலமும் சேர்ந்திருக்கும் தகுதி தன் நட்பிற்கு இல்லையோ என்று புலம்புகிறார். இதனை,

**“மேயினன் அண்மையானே ஆயினும்**
**இம்மை போலக் காட்டி உம்மை**
**இடையில் காட்சி நின்னோடு**
**உடன்உறைவு ஆக்குக உயர்ந்த பாலே”**[83].

என்ற பாடல் இம்மைக் காலத்தைப் போலவே மறுமைக்காலத்திலும் நட்பானது தொடர என் நல்வினையானது எனக்குத்துணை செய்யுமாறு என்று இரப்போர் போல புலம்பும் கபிலரின் நட்பு ஆழம் அளவிட முடியாததாக இருந்ததை உணர்த்தகிறது. ஒருவரிடம் நட்பு கொள்ளும்போது ஆராய்ந்து நட்புக்கொள்ள வேண்டும். உயர்ந்தவர்கள் சேய்மையில் இருந்தால் அவர்கள் நட்பைப்பெற முற்பட வேண்டும். சிறியவர்களிடம் கொண்ட நட்பு காலைநேரத்து நிழல்போல வரவரக்குறையும் பெரியோரிடம் கொண்ட நட்பு குறையாமல் மாலைநேரத்து நிழல்போல வளர்ந்துவரும். இதனை நாலடியார்,

**“கருத்துணர்ந்த கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்றும்**
**கருத்திற் குரம்புதின் றற்றே குரத்திற்கு**
**எதிர் செலத்தின் றன்ன தனகத்தரோ என்றும்**
**மதுர மிலாள் தொடர்பு”**[84].

என்கிறது. கீழ்மகன் நட்பானது அடியிலிருந்து கரும்பினை நுனியை நோக்கி உண்பது போன்றதாகும். உயர்ந்தோர் நட்பு என்பது கரும்பின் நுனியில் இருந்து அடிவரை உண்பது போன்றதாகும். மேலும் நட்பிற்கு இலக்கணம் வகுத்த பழந்தமிழர். நட்பில் உறுதியானக் கொள்கை வேண்டும். நல்லதோர் நட்பினை நாடவேண்டும். நட்பை விட உயிர் பெரிதல்ல என்பதை உணர்த்தியும் உள்ளனர். நட்பின் உண்மைத் தன்மைகள் சங்க இலக்கிய விழுமியச் சிறப்புகளாக கருதப்பட்டுள்ளது.

## 2.3 கொடைமடம்(ஈகை)

கொடை கொடுத்தவன் குடையின்கீழ் வாழ்வான் என்பது வாக்கு. கொடைக்கு அக்குரன் என்பவனை சான்றாக காட்டுவர். ஈகையே தலைசிறந்த பாதுகாப்பு அறமாகும். **“அக்குரன் அனைய கை வண்மையே”**[85]. நல்லியக்கோடன் என்பான் **“எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம், “விரிகடல் வேலி வியலகம் விளங்க”**[86] நல்லியக்கோடனுக்கு முன் வாழ்ந்த கொடையில் சிறந்த எழுவர் மேற்கொண்டிருந்த கொடையாகிய பாரதத்தைத் தான் ஒருவனே தாங்கி வாழ்ந்தான் எனப் பாராட்டப் பெறுகிறது. இவனைப் போன்ற குமணனும், வள்ளல் எழுவரும் தன்னிடம் இரந்து வரும் பிறர் துன்பத்தைப் போக்கினான் என்பதை,

**“எழுவர் மாய்ந்த பின்றை அழிவரைப்**
**பாடி வருநரும் பிறரும் கூடி**
**இரந்தோர் அற்றம் தீர்க்கு என விரைந்து**
**இவண் உள்ள வந்தெனன் யானே”**[87]

என்று பெருஞ்சித்திரனார் கூறுவர். பேகன் கொடைமடம் கொடுப்பதில் தன்னை மறந்து ஆழ்ந்துவிடுவதால் அவனைக் கொடைமடம்படுவோன் என்கிறார் பரணர்.

**“கொடை மடம் படுதல் அல்லது**
**படைமடம் படான்; பிறர் படைமயக்குறினே”**[88]

என்னும் பாடல் வரிகள் சான்றாக அமைகிறது. ‘‘பாரி, ஓரி, காரி, பேகன், ஆய் அண்டிரன், நள்ளி, அதியமான் ஆகிய எழுவரும் கடையேழு வள்ளல்கள் ஆவர். குமண வள்ளல் தன் தம்பியால் நாடு கொள்ளப்பட்டு, காடே உறைவிடமாய் வாழ்ந்த காலத்தும் தன்னிடம் வந்த பெருந்தலைச் சாத்தனாருக்குத் தன் தலையையே கொய்துச் சென்று அதற்கு நிர்ணயித்த தன் தம்பி அறிவித்த பொன்னைப் பெறுமாறு புலவர் கையில் கொடுத்ததைத் தமிழர் தம் வாழ்வில் பெற்ற கொடை மடத்தைப் புலப்படுத்துகிறது.

**“கேடுஇல் நல்இசை வயமான் தோன்றலைப்**
**பாடி நின்றனனாக, கொன்னே**
**பாடு பெறு பரிசிலன் வாடினன் பெயர்தல் என**
**வாள் தந்தனனே, தலை எனக்கு ஈய**
**தண்ணில் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின்**
**ஆடுமலி உலகையொடு வருவல்**
**ஓடாப் பூட்கை நின்கிழமையோற் கண்டே”**[89]

என வரும் பெருந்தலைச் சாத்தனாரின் வாக்கினால் அறியலாம். **“இசைபட வாழ்பவர் செல்வம் போலக் காண்தோறும் பொலியும்”**[90] **“உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை”**[91]**. “நெடியோன் அன்ன நல்லிசை”**[92]**, “நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை” என்போர்க்கு இனன் ஆகியோர்”**[93]**, “நட்டவர்குடி உயர்க்கவை செற்றவர் அரசு பெயர்க்குவை பேர் உலகத்து மேஎந் தோன்றி”**[94] மேற்காணும் சான்றுகள் வழியாக தமிழர்களின் இலட்சியங்களை பாதுகாத்து, அரசு உற்ற சமயத்தில் உதவி செய்து ஊன்றுகோலாக தமிழர்தம் வாழ்வில் கொடை உணர்வைப் பார்க்க முடிகிறது.

‘வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை’ என்பார் வள்ளுவப் பெருந்தகை அதியமானிடம் செல்வார் எத்தனைமுறை, எத்தனை பேருடன் செல்லினும் எப்போதும் நல்லவாறே உபசரிப்பவன் ஆவான். அவன் பரிசில் தருவது, யானையாவது தன் கோட்டிடை வைத்த கவளம்போல் உறுதியாகப் பயன்தருவதாகும். ஔவையார் இவ்வுண்மையை உணர்ந்து பாடுகின்றார்.

**“ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்**
**பலநாள் பயின்று பலரோடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விரும்பினன் மாதோ”**[95]**.**

அவியன் என்பான் உண்டியும் உடையும் கொடுத்து ஓம்பும் பாங்கு கண்டு, சுக்கிரன் என்னும் கோள் திசைமாறி நாட்டில் வறட்சி ஏற்படினும் இரவலர் யாரும் இவனிருத்தலின் அஞ்சவேண்டியதில்லை என்கிறார் மாறோகத்த நப்பசலையார்.

**“கான்கெழு நாடன் கடுந்தேர் அவியன்என**
**ஒருவனை உடையேன் மன்னெ**
**அறான் எவன் பரிகோ வெள்ளியது நிலையே”**[96]**.**

**“வேந்துவிடு முனைஞர் வேற்றுபுலக் களவின்**
**ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்”**[97]**.**

என்கிறார் மாறோகத்து நப்பசலையார். அதியமான் தன்னிடத்து மிகுதியான அளவில் பொருளிருப்பின் யாவருக்கும் வழங்கி எஞ்சியதை நுகர்வான். குறைவாக இருப்பின் பிறருக்கு அளித்துவிடுவான். படைவீரர்களுக்குச் செய்யப்படுவது இன்னும் கூடுதலாக இருக்குமாறு இவன்தன் செயல்பாடுகள் அமையும் என்கிறார்.

**நம்பிக்கை**

ஒவ்வொரு மதத்தினரும் தங்களின் தெய்வம் தங்களை நல்ல முறையில் நடத்தி வருகிறது. தமக்கு நேரிடும் நன்மை, தீமை இரண்டிலும் இறைவனின் செயல் அடங்கியிருக்கிறது. இறைவனைக் கண்ணால் காண முடியாது. காணாமல் இறைவனை நம்ப வேண்டும் என்று கருதினர். கோயிலுக்குச் செல்லும் போது குளித்தவிட்டுச் செல்ல வேண்டுமென்றும் காளி, மாரியம்மன் முதலிய தெய்வங்களுக்குப் பலி செலுத்தி வழிபட வேண்டும். அப்போது தான் தெய்வம் நம் வழிபாட்டை ஏற்றுக்கொள்ளும் என நம்பினர். பயணம் போகும்போது பாம்பும், பூனையும் குறுக்கே போனால் கெட்டது என்றும் மான், புலி, எருமை, நரி, பசு, கிளி, மயில், கோழி எதிர்படுவது நல்லது என்று நம்பினர். ஆந்தை அலறுதல் நன்மை என்றும் நம்பினர். காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கையை ‘விருந்து வர கரைந்த காக்கை’ என்னும் குறுந்தொகை 210 ஆம் பாடல் உறுதிப்படுத்துகிறது.

திருமணம் செய்யும் ஆணுக்கும் பெண்ணுக்கும் சாதகப் பொருத்தம் பார்ப்பதுண்டு. திருத்தக்கதேவர் காலத்திலேயே குழந்தை பிறந்தவுடன் சாதகம் எழுதுவதும் சாதகம் சோதிடத்தில் வைத்திருந்த நம்பிக்கைப் புலப்படுகிறது. உத்திராடத்தில் பிள்ளை பிறந்தால் நல்லது என்றும் பரணியில் பிறந்தவன் தரணி ஆள்வான் என்று நம்பினர். ரோகிணியில் ஆண் குழந்தை பிறந்தால் தாய்மாமனுக்கு நல்லதன்று என்பது ஒரு நம்பிக்கை. சில நட்சத்திரங்கள் தீங்கிழைக்கும் என நாட்டுப்புற மக்களிடம் இருந்த நம்பிக்யை காண முடிகிறது. வெள்ளி என்றழைக்கப்படும் சுக்கிரன் தென்திசை ஏகின் மழை பொய்த்து நாட்டில் வறட்சி ஏற்படும் என்பதனை,

**“வெள்ளி தென்புலத் துறைய விளைவயற**
**பள்ளம் வாடிய பயனில் காலை”**[98]

தூமம் என்பது வானத்தில் மறைந்திருந்து தோன்றும் கோள், தூமகேது தோன்றினால் அரசர் இறப்பர். பஞ்சம் தலைவிரித்தாடும் புயல் முதலிய பெருங்கேடுகள் தோன்றும் என்பதனை,

**“மைம்மீன் புகையினும் தூமந் தோன்றினும்**
**தென்திசை மருங்கின் வெள்ளி யோடினும்”**[99]

என்னும் புறப்பாடல் புலப்படுத்துகிறது. தூமகேவைத் தற்காலத்தில் வாலநட்சத்திரம் எனக் கூறுவர். ஆடவரின் வலக்கண் துடிப்பதும் வலத்தோள் துடிப்பதும் தீயது. மகளிரின் இடக்கண் துடித்தலும் இடத்தோள் துடித்தலும் நன்மை நேர்வதற்கு அறிகுறி என்று நம்பினர். குழந்தை கண்ணாடியைப் பார்த்தால் ஊமையாகிவிடும் என்று நம்பினர். குழந்தைகளுக்குப் பல் விழுந்தால் சாணி உருண்டையில் புதைத்து எறிந்தனர். அப்படி எறிந்தால் தான் மீண்டும் முளைக்கும் என்றும் நம்பினர்.

கால் அரிப்பது பயணம் ஒன்று ஏற்படும் என்பதற்கான முன்னறிவிப்பு என்று நம்பினர். கையில் ஆறு விரல் இருந்தால் யோகம் என்று நம்பினர். மாறுகண் இருப்பது அதிஷ்டம் என்று நம்பினர். அமாவாசையில் நோய்மிகும் என்றும், பௌர்ணமியில் நோய் குறையும் என்றும் நம்பினர். கர்ப்பிணிகள் எட்டாம் மாதம் தாய்வீடு செல்லக்கூடாது. ஆடியும் மார்கழியம் திருமணத்திற்கு ஏற்ற மாதங்கள் கிடையாது. ஆனி மாதம் பங்குனி மாதம் புதுமனை புகுதல் ஆகாது என்று நம்பிக்கை வைத்துள்ளனர். **சித்திரை மாதப்புழுதி பத்தரை மாற்றுத் தங்கம், ஆடிப் பட்டம் தேடி விதை, ஆடிவிதை தேடிப்போட, ஆடிப்பருத்தி தேடி விதை** என்னும் பழமொழிகள் தமிழர் மாதங்களின் மேல் வைத்துள்ள நம்பிக்கையை எடுத்துக்காட்டுகிறது. நாள் செய்வதை நல்லவர் செய்யார் என்பது பழமொழி. மேலும், நாள் குறித்த நம்பிக்கையை புறநானூறு 124 ஆவது பாடல் நமக்கு உறுதிப்படுத்துகிறது. இதனை,

**“நாளொன்று போகிப் புள்ளிடைத் தட்பப்**
**புதனன்று புக்குத் திறனன்று மொழியினும்**
**வறிது பெயர்குநர் அல்லர்”**[100]

ஞாயிற்றுக்கிழமை பயணம் செய்தால் நாய் போல் அலைச்சல் என நம்பினர். ஞாயிற்றுக்கிழமை பிறந்தவர் நாய்படாத பாடுபடுவர். ஞாயிற்றுக்கிழமை நாய்கூட எள்ளுக்காட்டில் போகாது என்பர். திங்கள் வெள்ளி கிழமைகளில் நெல் அவிக்கக்கூடாது. செவ்வாய்க் கிழமையைத்தமிழர்கள் மங்கலநாள் என்று கருதமாட்டார்கள். செவ்வாய் முடிவெட்டினால் வறுமை தரும் என்றும், செவ்வாய் மற்றும் வெள்ளிக்கிழமைகளில் துணி தைத்தல் கூடாது. இதே நாளில் பெண்கள் பிறந்த வீட்டிலிருந்து புகுந்த வீட்டிற்கோ, புகுந்த வீட்டிலிருந்து பிறந்த வீட்டிற்கு செல்லவும் கூடாது. புத்தாடைகளைச் செவ்வாயன்று வாங்கவும், உடுக்கவும் கூடாது என நம்பினர். பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது என்று நம்பினார்கள். புத்தாடைகளை அணியப் புதன் நல்ல நாள் அன்று. வியாழன் நாற்று நடுவதும் வெள்ளி அறுப்பதும் நல்லது. சனிக்கிழமை கிழக்கே போகக்கூடாது. புத்தாடைகளைச் சனியன்று உடுப்பது நல்லது. மேற்கூறிய நம்பிக்கைகள் தமிழர் வாழ்வில் இன்றும் இடம்பெற்றிருப்பதைக் காண முடிகிறது

வாழ்வில் நடக்கும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் நிமித்தம் பார்த்தும் விரிச்சி கேட்டும் செய்யத் தொடங்கினர். நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் மூலம் முன்னுணர்த்துவதாகும். இதனைச் சகுனம் என்று இன்று குறிப்பிடுகின்றனர். பழங்காலத்தமிழர் புள், நிமித்தம் ஆகிய இரு சொற்களால் சுட்டுகின்றனர்.

**“வேதின வெரிநி னோதி முதுபோர்த்**
**தாறு செல் மாக்கள் புட்கொளப் பொருந்துஞ்**
**சுரனே சென்றனர் காதலர்”**[101]

என்கிறது குறுந்தொகை. நிமித்தங்கள் மனிதமனம் முடிவெடுக்க முடியாத சூழ்நிலையில் தோன்றின. அவை நல்நிமித்தம், தீ நிமித்தம் என இருவகைப்படும். நிமித்தம் என்பதற்குக் காரணம், சகுனம், அடையாளம் என்று பொருள் தருகிறது. தமிழ் பேரகராதி நிமித்தம் பார்ப்பதற்கு மரம், பறவை, ஊர்வன, விலங்குகள், மாந்தர் கனவுகள் இயற்கை மாற்றம் ஆகியவை காரணமாக அமைகின்றன. சகுனம் என்ற சொல்லை நிமித்தம் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. பாலைக்கலியில் தலைவனைப் பிரிந்த தலைவி விரைவில் தலைவன் என்னைக் காண வருவான் என்று ஆற்றியிருக்கிற வேளையில்,

**“மனைவியன்**
**பல்லியும் பாங்கு ஒத்து இசைந்தன**
**நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே”**[102]

எனப் பல்லி இசைக்கிறது. இடக்கண்ணும் துடிக்கிறது. நல்நிமித்தம் இது எனத் தலைவி தோழிக்குக் கூறினாள். முல்லைக்கலியில் ஏறுதழுவுதலைக் காணும் தலைவி தலைவன் மேல் கொண்ட காதலால் தலைவனை நினைத்து வருந்துகிறாள். தலைவியைத்தோழி ஆயர்களின் குழலோசையினைச் சுட்டிக்காட்டி ஆயர் மணிமாலை அணிந்து குழலினை ஊதுகின்றனர். நல்ல நிமித்தம் இது. உன் காதலனைக் கட்டாயம் கொண்டு வரும் என்கிறாள். இதனை,

**“அணிமாலைக் கேள்வன் தருஉமார் ஆயர்**
**மணிமாலை ஊதும் குழல்”**[103]

என்கிறது கலித்தொகை. ஒரு சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தின் அறிவுத்திறனை அளவிடமுடியும். சிந்தனைத்திறன் அதிகமாக உள்ள சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாகவும் சிந்தனைத்திறன் குறைந்த சமுதாயத்தில் மூடநம்பிக்கைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதனை யானையினைக் குறிபார்த்துக் தாக்கி வீரம் விளைந்த தமிழன் இன்று,

**“பூனைக்குறுக்கானால் போச்சுதடா உயிர் என்று**
**ஞானமொழி பேசுகிறான் தமிழ் வீரன்”**[104]

என்று மூடநம்பிக்கையையும். கருத்தையும் கிண்டலாகச் சாடுகிறார் கலைஞர். கனவுகள் மக்களுக்குப் பின் நிகழப்போவதை முன்னர் உணர்த்துகின்றன என்று நம்பினர். கண்ணகி மதுரைக்குப் போவதற்கு முன் கனவு காண்கிறாள். பாண்டிமாதேவி மதுரையும் அரசம், அரசனும் அழிவதை முன்கூட்டியே காண்கிறாள். இதனால் இளங்கோவடிகள் கனாத்திறம உரைத்தகாதையை அமைத்துள்ளார். கனவில் கண்டது நனவில் நடக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்து வருகிறது. நெய்தல் நிலத்து தலைவி கனவில் தலைவன் வருகிறான் தலைவனைப் பிரிந்து இருக்கின்ற தலைவி கனவில் வந்தவன் நனவிலும் வருவான் என்று நம்பிக்கை கொண்டு இருக்கிறாள் என்பதை,

**“கனவில் வந்த கானல் அம் சேர்ப்பன்**
**நனவில் வருதலும் உண்டு”**[105]

என்று கலித்தொகையில் தோழியடம் தலைவி கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

**2.3.1 அரசியல் நுட்பறிவு:-**

பண்டைத் தமிழகத்தில் செங்கோலாட்சிச் சிறப்புற நடைபெற்று வந்துள்ளது. தமிழ் மன்னர்கள் செங்கோல் பிறழாது தமக்கெனச் சில விதிமுறைகளை வகுத்துக்கொண்டு குடிகளை ஓம்புதலையே கருதினர். தாய் தன் சேயினைக் காப்பதுபோல் மன்னன் தன் நாட்டினை, அதன் குடிகளைக் காத்து வந்ததைப் புறநானூற்றுப் புலவர்கள் விளக்கியுள்ளனர். இதனை,

**“புலிபுறங் காக்குங் குருளை போல**
**மெலிவில் செங்கோன் புறங்காப்ப”**[106]

என்று அக்கால அரசியல் இருந்ததை இடைக்காடனார் பாடின் மூலம் ஆய்வில் மெய்ப்பிக்கின்றது. மூவேந்தர்கள் ஆளப்பட்டு வந்த நிலைமாறி மக்கள் அவர்களுக்கென தனித்தனியே அரசியல் முறைப்படி பெயர் சூட்டப்பெற்றுள்ளது. சேரர்களை வானவர், வில்லவர், குடவர், குட்டுவர், பொறையர், மலையர் என்றும், சோழர்களை சென்னி, செம்பியன், வளவன், கிள்ளி என்றும், பாண்டியர்களை மீனவர், கவரியர், பஞ்சமர், தென்னர், செழியர், மாறர், வழுதி என்றும் அழைத்தனர். ஒரு அரசனுக்குரிய குணநலன்களாக கூறுவன நற்குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, தன்னலமின்மை, அறத்தை செங்கோலாக எண்ணி அரசியலில் ஈடுபடல், அறிவில் சிறந்த அமைச்சர் இருத்தல், ஈகை பண்பு மிகப்பெரிய கடமையெனல், மக்களுக்கு வேண்டிய நலனில் ஈடுபடுதல், பல கலைகளை போற்றி வளர்த்தல், படைக்கலம், கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர், மாலை, முடி, ஆகிய அரசியல் சின்னங்கள் இருத்தன. தந்தைக்குப்பின் மூத்த மகன் பட்டம் பெற்று அரசியலுக்கு வருவதும் அன்றைய மரபாகும். ‘தகடூர் எரிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

அரசாளுவதற்குரிய தகுதிகள் கொண்ட மகனைப் பெற்றதை அரிசில்கிழார் பாராட்டுகின்றார்.' **"வளனறு பைதிரம்"**[107]**(**பித்ரு – தந்தை), தாய்வழி பாட்டன் போன்றவரிடமிருந்து வந்த பட்டத்து அரசியலை சங்க இலக்கியம் மெய்ப்பிக்கின்றது. யானையின் பிடரியிலும் முரசுவைத்து முழக்கப்படும். காவல் தொழிலுக்குரியது முரசு சின்னமாகும். **"ஏம முரசு"**[108] அது புலியைக் கொன்ற யானையின் தோலால் செய்யப்படுவதாகும். பாசறையிலும் முரசு முழங்கியது. அதன் முழக்கத்திற்கு இடியோசை உவமையாகக் கூறப்பட்டது. படைசெல்லும் திசையில் நல்ல வேளையில் வாளோடு முரசும் எடுத்துச் செல்லப்படும்.

**'கைவரின் காவல் மரத்தை வெட்டிக் கொணர்ந்து முரசு செய்து முழங்கினர்'**[109]**.** இம்முரசு வீரமுரசு, தியாக முரசு, நியாய முரசு என்று வகைப்படுத்தப்பட்டுள்ளது. மன்னனின் வாள் வீரத்தின் சின்னமாகும். மன்னனை **'வாளேர் உழவன்'**[110] எனப் பாராட்டினர். நல்ல நாளில் வாளினை எடுத்துச்செல்வது வாள்நாட்கோள் என்றும், போர்க் காலத்தில் கொடி உயரப்பறந்திருக்கும் (வெல்கொடி), பெரிய யானையின் மீது கொடி எடுத்துச் செல்வர். ஏற்றுமதி இறக்குமதி பொருள்களின் மீது கொடி சின்னங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். மன்னர்கள் அதிகாரிகளுக்கும் பாடகர்களுக்கும் பட்டமளித்தனர். அது மாராயம் எனப்படும்.

தொல்காப்பியம் **"மாராயம் பெற்ற நெடுமொழி"**[111] என்ற 'காவிதி பட்டம் வேளாளர்க்கு வழங்கப்பட்டது. ஏனாதிபாடி என்னும் குடியிருப்பு இருந்துள்ளது. அமைச்சர், புரோகிதர், சேனாதிபதி, தூதர், ஒற்றர்) படைத்தலைவர்(காலாட்படைத் தலைவர்), இவுளிமறவர் (குதிரைப்படைத் தலைவர்) என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. நாழிகளைக் கணக்கிட வட்டில் கணக்கர் இருந்தனர். இதற்குப் பயன்பட்ட கருவி **"நாழிகை வட்டிலாகும்"**[112] என்பன தமிழர்களின் அரசியல் வரலாறுகள் ஆய்வினால் காணமுடிகிறது.

சங்ககாலத் தமிழரின் நிலம் மூன்று பேரரசர்களாலும், பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டு வந்தது. அவர்களுக்குள் ஓயாமல் போர் நிகழ்ந்தது. அதற்கு பல காரணங்கள் உள்ளன. அவை வழிவழியாக வந்த பகைமை, குடிபெருமையை நிலைநாட்ட விரும்புவதால் ஏற்படும் பகைமை, நாடுகளுக்குள் எல்லை வரையறை, பெரிய நாட்டை ஆளவேண்டுமென்ற ஆசை, திறை செலுத்தாமை இதர பிற காரணங்கள் உள்ளனவென்று ஆராயப்பட்டுள்ளது. போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி என்று ஒருவனை ஒருவன் அடுத்தலும் தொலைதலும் உலகத்து இயற்கை என்று கருதினர். **"பிறர் மண் உண்ணும் செம்மல்"**[113]**.** மறவுணர்வு மிகுதியால் மன்னன் பகைவரை அழிப்பர். தமிழகத்தில் மறவர். எயினர், மழவர்மல்லா என்னும் மறக்குடியினர் வாழந்துள்ளனர். இவர்கள் தொன்மையான குடியினராவர். இவர்களுள் பெண்டிரும் வீரமிக்கராவர். இவர்களின் வாளும் வேலும் 'எ.ஃ.கம்' எனப்பட்டன. இவற்றை உறைக்குள் வைத்துக் காத்தனர். **"உறைகழிப் பறியா வேலோனூரே"**[114] வீரர்கள் தமது வாளையும் வேலையும் அம்பையும் தாமே தீட்டுவர். **"பகழி மாய்த்தல்"**[115] என்று குறுந்தொகை கூறுகின்றது. அம்பு எய்வதனை மழை பெய்வது போன்றது என உவமைப்படுத்துகின்றனர். கூப்பிடும்

தூரம் அம்பு எய்பவன் பெரிய வில்லாளியாவான். வெற்றியின் அறிகுறியாக வீரர்கள் வேலை மேலே உயர்த்துவர் என்பது தெளிவாகின்றது.

போரிடும்போது நாடுகளை அழித்தல், ஊரைத் தீயிட்டு கொளுத்துதல், குதிரைக்கொண்டு நீர்நிலைகளை அழிப்பர். போரிட இயலாத போது அதன் அறிகுறியாகக் குடையைத் தாழ்த்துவர். மன்னர் பாசறையில் தங்கியிருப்பர். (கூதிற் பாசறை, வேனிற் பாசறை) இது பெரிய ஊர்ப்போல காணப்படும் பாசறை காவல் மிகுந்த இடமாகும். பாசறையில் மதில் சுட்ட செங்கற்களால் ஆனது. **“சுடுமண்ணோங்கிய நெடுநகர் வரைப்பு”[116].** இது அகலமான தனியான கூடாரம் அரசனுக்காக அமைக்கப்பட்டதாகும். பல்வகை அரண்கள் நாட்டுக்குக் காவலாக இருந்தன. நகரைச் சூழக் காட்டரண் இருந்தது. இது மிளை எனப்பட்டது. ஆழமான அகழிகள் உண்டு. அவற்றினில் முதலைகள் நீந்தியிருந்தன. அகழினுள் படகுகளை வைத்துக் கடப்பர். இந்த மதிலிகள் இஞ்சி, புரிசை, அகப்பாடம் எனப்பட்டது. மதிலின் உள்ளே இருந்து வீரர் போரிடும் இடம் ஞாயில் எனப்படும். கோட்டையைக் கைப்பற்றியப் பின் பொருள்களைக் கவர்ந்து தமக்குள் பங்கிட்டுக் கொள்வர்.

பகைநாட்டுக் கொடியை நீக்கிவிட்டு வெற்றிக்கொண்ட தம் நாட்டுக் கொடியை நாட்டுவர். மன்னர்களும் மகளிரும் சிறை செய்யப்பட்டனர். சிறை செய்யப்பட்டோர் பல துன்பங்கட்கு ஆளாயினா. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் யவனர்களைப் பின் கட்டாகக் கட்டியதோடு தலையில் எண்ணெய் வார்த்தான். சேரன் பொறையன் என்பவன் மூவன் என்பவனின் பல்லைப் பிடுங்கிக் கோட்டை வாயிலில் பதித்தான். காலங்காலமாக போர் என்பது தமிழர்தம் வாழ்வில் தவிர்க்க இயலாத ஒன்றாக இருந்துள்ளது. இத்தகுப்போரிலும் தமிழர் நாகரிகத்தை வெளிப்படுத்தினர் என்றும், நால்வகைப் படைகள் இருந்தன என்றும், நாட்டுப் பாதுகாப்புக்குச் சிறந்த ஏற்பாடுகள் சங்ககாலம் முதலே இலக்கியங்களின் வழியே அறிய முடிகின்றது.

**நாட்டுப்பற்று**

பண்டைத்தமிழ் மக்கள் தங்கள் நாட்டிற்காகவே வாழ்ந்தனர். தன்னுயிர் காப்பதுபோல் மன்னுயிரையும் காத்தனர். தன் நாட்டின் மீது பகைவன் போர் தொடுக்க எண்ணிய அளவிலேயே புலியெனச் சீறிக் காப்பாற்றிய மனப்பாங்கு வியக்கத்தக்கதாகும். இதனை,

**“என்முறை வருக வென்னான் கம்மென**
**எழுதகு பெரும்படை விலக்கி**
**ஆண்டு நிற்கும் மாண்டகை யன்னே”**[117]

என்னும் பாடல் வழி சிறப்பிக்கப்பட்டுள்ளது. சமகாலத்தில் இளைஞர்கள் பலர் நாட்டிற்காக உயிரை விடவும் துணிகின்றனர். இன்றும் தாய்மண்ணை நேசிக்கும் பண்பு அழியாது உள்ளத்தைக் கவிஞர் மீரா ஐகூக் கவிதைச் சான்றாக,

**"விழும் போதெல்லாம்**
**மீசையில் ஓட்ட வேண்டும்**
**இந்த செம்மண்**
**ஏனெனில் எம்மண"**[118]

என்னும் கவிதை நாட்டின் மீதுள்ள பற்றை வெளிப்படுத்துகின்றது.

**தொழில்நுட்பம்**

பண்டைத் தமிழர்கள் உழவுத்தொழிலை முதன்மையான தொழிலாகப் போற்றி வந்தனர். வேளாண்மை பற்றியும், நீர் , நிலப்பயன்பாட்டனைப் பற்றியும் விளக்கியுள்ளனர். **"காடு கொன்று நாடு ஆக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கி"**[119] என்ற பாடலடிகள் வேளாண்மைத் திட்டத்தை விளக்குகின்றன. காடுகளை அழித்த நன்செய் நிலங்கள் உருவாக்கப் பெற்றதையும், நீர்வளத்திற்காகக் குளங்கள் அகழப்பெற்றதையும் அறிய முடிகிறது. இன்றைய தரிசுநில மேம்பாட்டுத் திட்டம் இதனை ஒத்ததேயாகும். திருமாவளவனின் கழிபேராற்றலைப் பாடும் உருத்திரங்கண்ணனார்,

**"மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே**
**வான் வீழ்க்குவனே வளி மாற்றுவன் எனே"**[120]

எனப் பாடுகிறார். மலையகழ்தல், கடல்தூர்த்தல், வான் வீழ்த்துதல், வளி மாற்றல் ஆகியன அறிவியல் துறையின் கூறுகளேயாகும்.

நானில மக்களுக்கும் மேற்பாற் குலத்தினர்க்கும் தத்தம் வாழ்க்கைத் தொழில்களுக்கு வேண்டும் துணைக்கருவிகளைச் செய்தளிக்கும் பணியில் ஈடுபட்ட தொழில் மாந்தர் பலராவர். இவரைக் "கம்மியர், தொழில் செய்வார் என்னும் பொருளில் வந்தன என்று கருதுவர்"[121].

**உழவுத்தொழிலில் விழுமியம்**

பழந்தமிழகத்தில் உழுபவரே உயர்ந்தோராக மதிக்கப்பட்டனர். 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் என்பது திருக்குறள், தமிழர் உழுது பயிர் செய்து உலகைக் காக்கும் இத்தொழிலைப் பெரிதும் போற்றினர். 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்னும் அன்றைய புகழ்மொழி இன்றும் தமிழரால் போற்றப்படுகிறது. மருத நிலத்தின் பெருமை கருதியே வேந்தனை முதன்மைப்படுத்தினர்.

தமிழர்களின் வீரவுணர்வு மட்டுமல்லாது, தொழில் வளமும் செல்வச் செழிப்பும் மிக்கது சோழ நாடு. இந்நாட்டில் வாழும் உழவர்கள் ஆமை இறைச்சியோடு ஆரல் மீனினது வேகவைத்த கொழுப்பமைந்த துண்டையும் மதுவையும் உண்டு மயங்கி இருப்பர். இப்படி உழவர்கள் சிறப்புடன் வாழும் சோழ நாட்டில், உறையூறைக் தலைநகரமாகக் கொண்டு உலகம் புகழும்படி அரசாண்டான் கோப்பெருஞ்சோழன் என்னும் மன்னன்.

**“யாமைப் புழுக்கின் காமம் வீடஆரா**
**ஆரல் கொழுச் சூடு அம்கவுன் அடாஅ**
**வைகு தொழில் மடியும் மடியா விழவின்**
**யணர் நல் நாட்டுள்ளும்**
**கோழியோனே கோப்பெருஞ்சோழன”**[122]

**விளையாட்டுகள்**

உழைக்கின்ற மக்களுக்கு உழைப்பிலிருந்து விடுதலை பெற விளையாட்டுகள் தேவைப்படுகின்றன. உடலைக் கட்டுடன் காப்பதற்கும் மன அமைதி பெறுவதற்கும் மகிழ்ச்சியடைவதற்கும் விளையாட்டுகள் துணைபுரிகின்றன. விளையாட்டைக் குழந்தைகள் முதல் பெரியவர் வரை விரும்புகின்றனர். உலக மக்கள் அனைவரும் விளையாட்டை விரும்புகின்றனர். ஒவ்வொரு நாட்டிலும் பல்வேறு வகையான விளையாட்டுகள் நிலவி வருகின்றன. ஒரு நாட்டின் இயற்கைச் சூழல்களுக்கேற்ப, தட்பவெப்ப நிலைகளுக்கேற்ப, பழக்க வழக்கங்களுக்கேற்ப விளையாட்டுகள் அமையும். ஒரு நாட்டு மக்களின் சீரிய பண்பாட்டை அறிவதற்கு அவர்கள் பழக்கத்தில் கொண்டுள்ள விளையாட்டுகளும் துணைச் செய்கின்றன.

விளை + ஆட்டு = விளையாட்டு. ‘விளை’ என்ற சொல்லுக்கு விருப்பம் என்று பொருள். விருப்பமாக ஆடுகின்ற ஆட்டம் விளையாட்டு எனலாம். குழந்தைகள் பேசுவதற்கு முன்னரே விளையாடத் தொடங்கி விடுகின்றனர். தமிழர் வாழ்வில் சங்க காலம் முதல் இன்றுவரை நிலவி வருகின்ற, மாறி வருகின்ற, மறைந்து வருகின்ற விளையாட்டுகளைக் குறித்துக் காணலாம். தொல்காப்பியம் நமக்குக் கிடைத்த முதல் நூல். அந்நூலில்,

**“செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று**
**அல்லல் நீத்த உவகை நான்கே”**[123]

என உரைக்கிறது. இந்நூற்பா மூலம் மனமகிழ்ச்சியை ஊட்டும் காரணிகளுள் விளையாட்டும் ஒன்று என தொல்காப்பியர் உணர்த்துகிறார். மேலும் நீர் விளையாட்டு, நில விளையாட்ட என விளையாட்டை இரு விகையாகப் பிரிக்கிறார். விளையாட்டு பற்றிய அறிவும் சங்கப் புலவர்களால் எடுத்தியம்பட்டுள்ளன.

**2.3.2 அரசர்**

அரசனது தொழில் உலகுக்கு நல்லது செய்தலாகும். அதற்கு மன்னன் மயக்கந் தீர்ந்த அறிவும் நடுவு நிலையும், முறை வேண்டுபவர்க்கும் குறைவேண்டுபவர்க்கும் எளிதாகவும் இனிதாகவும் நீதி வழங்கும் பண்பும், உதவும் உள்ளமும் பெற்றிருத்தல் வேண்டும். அரசன் தன்னை மதியாத வேற்றரசை வீரத்தால் அஞ்சச் செய்தல் வேண்டும். தன்னை மதிக்கும் நட்பரசை மேன்மேலும் தனது அன்பினால் தழுவிச் செல்ல வேண்டும். இங்ஙனம் அரசன் வீரமும் அருளும் உடையவனாய் ஆட்சி செய்தால் நாட்டில் எப்பொழுதும் அமைதி நிலைபெற்றிருக்கும். மன்னனது வெற்றிக்குக் காரணம் அவனது வலிமை அல்லாமல் 'அறமுறைமையே' சிறப்புச் செய்கிறது. அறம் என்பது நடுநிலைமை அதாவது நம்மவரென்று ஒருவரது தீமைக்கு ஆக்கமும் அடுத்தவரென்று நன்முயற்சிக்கு அழிவும் ஏற்படாதிருத்தல் வேண்டும். மன்னனது தொழில் வீரமும் மென்மையும் கொடையும் உரிய இடங்களில் புலப்படுத்தி நாடு வளம்பெறப் பாடுவது என்பதை,

**"அறநெறி முதற்றே அரசின் கொற்றம் அதனால்**
**நமரெனக் கோல்கோடாது**
**பிறரெனக் குணங்கொல்லாது**
**ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத் தன்ன வண்மையும் மூன்றும்**
**உடைய யாகி இல்லார் கையற"**[124]

என்கிறது. மேலும் அரசன் குடிமக்களுக்கு வளம் உண்டாக்கிக் கொடுத்து அதன்மூலம் அரசன் அவர்களிடம் அன்புடன் திரைபெறுதல் வேண்டும். மேலும் மக்கள் தமது திரைப்பொருளைத் தாமே அன்புடன் செலுத்தும்படி இடங்கொடுக்க வேண்டும். தன்நாட்டு மக்கள் மேன்மேலும் வளமாகவும் நலமாகவும் வாழ்வதற்கு நல்ல வசதிகளை அவர்களுக்கு உருவாக்கிக் கொடுக்க வேண்டும் என்பதை,

**"அறிவுடை வேந்தன் நெறிஅறிந்து கொளினே**
**கோடியாத்து நாடுபெரிது நந்தும்"**[125]

என்கிறது. இவ்வாறு அறிவுடை வேந்தன் மேற்காட்டியபடி முறையறிந்து கொண்டால் குடிமக்கள் கோடி கோடியாகத் திரைப்பொருளை உண்டாக்கிக் கொடுத்து தாமும் உயர்வர். மக்கள் உயர்வதற்கு அரசன் 'அத்தாணி மண்டபத்தில்' அமைச்சர் முதலிய அரசியல் சுற்றங்களின் நடுவே இருந்து ஆட்சி புரிந்தான்.

**"கொடைக்கடன் இறுத்த கூம்பா் உள்ளத்து**
**உரும்பில் சுற்றமொடு இருந்தோன்"**[126]

என்று அரசன் கடமையைச் சுற்றத்தோடு இருந்து செய்த காட்சியை பெரும்பாணாற்றுப்படை சுட்டுகிறது.

**அமைச்சர்**

அரசனுக்கு நேர்மையான வழியைக் காட்டுபவர் அமைச்சர். நாட்டில் மன்னன் புகழுற வேண்டுமெனில் அமைச்சர் தேவை. அக்காலத்தில் மந்திரியை அமைச்சர் என்பர். இச்சொல் 'அமாத்ய' என்னும் வடசொல்லிலிருந்து பெறப்பட்டது என்பர் க.ந. சுப்பிரமணியன். நாட்டையாளும் மன்னனின் அருகிலேயே எப்போதும் இருப்போராக உள்ளவர்கள் அமைச்சரும் படைத்தலைவரும் ஆவர். இவர்களுள் அமைச்சரே அரசனுக்கு முதன்மைத் துணையாக உள்ளனர். இவர்கள் பொய் என்பதை அறியாமல் இருப்பதால் இல்லாதபடி மண்ணுலகம் முழுவதையும் ஆளும் பேரரசர்களுக்கு அறிவாகிய சொல்லைச் சொல்லுதலை இயல்பாக உடையோர் அமைச்சர்கள் என்பதை,

**"பொதுமொழி பிறர்க்கு முழுது ஆளும் செல்பவர்க்கு**
**மதிமொழி இடல்மாலை வினைவர்போல் வல்லவர்"**[127]

எனக் கூறுகிறது. அமைச்சர் தொழில் மேற்கொள்வார்க்குச் சில தகுதிகள் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் இயற்கை நுண்ணறிவும் ஆன்ற நல்லொழுக்கமும் நூற்பயிற்சி முறையும் உலகியல் உணர்வும் நன்கு அமையக்கூடும். இயற்கையாகப் பெற்ற நுண்ணறிவோடும் நூலறிவும் அமையப்பெற்று நல்ல அறவொழுக்கமும் உடையவராகவும் அமைச்சர் இருத்தல் வேண்டும். அரசர்க்குரிய அறங்களை அறிந்தவராகவும் தாம் கற்ற கல்வித் திறத்தால் திறமைபெற்ற சொற்களை உடையவராகவும் எக்காலத்திலும் செயல்படக்கூடிய திறம் வாய்ந்தவராகவும் அமைச்சர் இருத்தல் வேண்டும். மன்னன் நாட்டைவிட்டு வெளியிடங்களுக்குச் செல்ல வேண்டிய காலங்களில் மன்னனுடைய ஆணைப்படி நாட்டை ஆளும் திறமையும், அறமுறையும், போர்த்திறனும் உடையவராய்

இருத்தலோடு மனத்திண்மையும் உடல்வலிமையும் உள்ளவராய் அமைச்சர் இருத்தல் வேண்டும் என்பதை,

**“தம்முயிர்க்குருதி எண்ணார் தலைமகன் வெகுண்டபோதும்**
**வெம்மையைத் தாங்கநீதி விடாதுநின் நுரைக்கும்வீரர்**
**செம்மையில் திறம்பல செல்லாத் தேற்றத்தார் தெரியும்காலம்**
**மும்மையும் உணரவல்லார் ஒருமையும் மொழியும் நீரார்”**[128]

என்று ஓர் அமைச்சருக்குரிய இயல்புகளாகக் கம்பர் குறிப்பிடுகிறார். அமைச்சருக்குரிய தகுதிகளைத் திருவள்ளுவர் அமைச்சு என்னும் அதிகாரத்தில் தொகுத்துக் கூறுகிறார். இவற்றில்,

**“படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு”**[129]

என்று சேனையின் வலிமை, குடி, செல்வச்சிறப்பு, அயல்நாட்டவர்களின் நல்லுறவுகோட்டை, கொத்தளம், பாதுகாப்புகள் ஆகியவற்றோடு நல்ல அமைச்சரும் அமையப்பெற்ற அரசனே சிறப்புக்குரியவன் என்கிறார். அக்காலத்தில் இன்னது செய்தால் நலம் பயக்கும் என்று ஆராய்ந்து அரசனிடம் சொல்லிச் செய்வதே அமைச்சர்களின் தலையாயக் கடமை. இவர்கள் அரசனிடம் உள்ள நல்ல குணங்களையும், தீய குணங்களையும் ஆராய்ந்து அவனை நன்னெறியில் நடக்கச் செய்வர். அரசனைக் குடிகளிடம் அன்புடன் ஒழுகச் செய்வர். நீதியை அறநெறியினின்றும் பிறழாமல் காப்பர். தாமும் பழிக்கு இடமான செயல்களைச் செய்யாது போற்றத்தக்க நல்ல செயல்களைச் செய்வர். சிறந்த புகழையும் பெறுவர். இத்தகைய சிறப்புடைய அமைச்சர்கள் ‘காவிதி’ எனும் பட்டத்தைப் பெற்றனர் என்பதை,

**“நன்றும் தீதும் கண்டாய்த் தடக்கி**
**அன்பும் அறனும் ஒழியாது காத்துப்**
**பழிஒரிஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த**
**செம்மை சான்ற காவிதி மாக்களும்”**[130]

என்கிறது மதுரைக்காஞ்சி. அக்காலத்தில் காவிதிப்பட்டம் பெற்றமைக்கு அறிகுறியாகக் **காவிதிப்பூ** என்னும் **பொற்பூ** வழங்குதல் மரபாக இருந்தது.

**ஒற்றர்**

பிறர் ஐயுறா வண்ணம் அஞ்சாத தன்மையுடன் எது நடந்தாலும் தன் கருத்தைப் பிறருக்கு வெளிப்படுத்தாத இயல்புடையவர். இவர் வேடர், சாரணர் என்றும் அழைக்கப்பட்டனர். அரசர்களுக்கு மக்களின் கருத்துக்களை அறிவதற்கும் பகைவரின் படைவலிமைகளை அறிவதற்கும் ஒற்றர்கள் பயன்படுத்தப்பெற்றனர். ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களும் ஒற்றர்களாகச் செயல்பட்டுள்ளனர். அரசர்கள் வேவு பார்ப்போரைப் பெரிய எண்ணிக்கையில் ஏவல் கொண்டனர். அவர்கள் தொழில் ‘ஒற்று’ அல்லது ‘வேய்’ எனப்பட்டது. வேய் என்பது ஒற்றர் பகைவருடைய இடத்திற்குச் சென்று ஆநிரை நின்ற இடத்தில் ஒற்றறிவது இதனை,

**“பற்றார் தம்முனைப் படுமணி யாயத்**
**தொற்றா ராய்ந்த வகையுரைத் தன்று”**[131]

என்கிறது புறப்பொருள். ஒற்றர்கள் முன்பே தங்களுக்குள் பேசிக்கொண்டபடி ஒலியால் செய்தியனுப்புவர். மேலும் மற்றவர்களுக்குக் கேட்கா வண்ணம் ஒடுங்கிய குரலிலும் பேசுவர். **“ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல்”**[132] என்கிறது. நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் ஒற்றர்கள் இருந்தனர். அரசன் தன் நாட்டு நிலையை அமைச்சர் வாயிலாகவும் பிறநாட்டு நிலையைத் தூதர் வாயிலாகவும் இவ்விரு நாடுகளின் நிலையை ஒற்றர்கள் வாயிலாகவும் அறிந்து கொள்கின்றான். ஒற்றர்கள் ஒருவன் கூற்றை ஒருவரையொருவர் அறிந்துக்கொள்ளா வண்ணம் ஒற்றாடல் செய்ய வேண்டும். இதனை ‘ஒற்றொற்றுணராமை ஆள்க’ என்று திருவள்ளுவர் வலியுறுத்துகிறார்.

போர் தொடங்கும் முன் பகைவரின் நிலையை ஒற்றர்கள் மூலம் அறிந்துக்கொள்ளும் முறையைப் ‘புடைகெட ஒற்றின் ஆகிய வேயே’ என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். வள்ளுவரும் ஒற்றாடல் என்னும் அதிகாரத்தில் ஒற்றின் இன்றியமையாமையையும் ஒற்றர்களின் தன்மையினையும் விளக்கியுள்ளார். ஒற்றர் தமக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்று அரசினர், நண்பர் என்று அனைவரிடமும் ஒற்றறிதல் வேண்டும். ஒற்றர்கள் துறவி தவ ஒழுக்கமுடையவர் போன்றவர் போல் மாற்றுஉருவுடன் சென்றும் செய்திகளைச் சேகரிப்பர். இதனால் புலவர்களையும் ஒற்றறிய வந்தவர்கள் என்று சந்தேகப்படும் நிலை இருந்துள்ளது. சோழன் நெடுங்கிள்ளி, இளந்தத்தன் என்ற புலவர் மீது சந்தேகப்பட்ட அப்புலவரைக் கொல்ல முனைந்தான் அப்பொழுது கோவூர்கிழார்,

**“வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கை**
**பிறர்க்குத் தீதறித் தன்றோ இன்றே”**[133]

என்று கூறி அக்கொலையைத் தடுத்தார். சிலப்பதிகாரத்தில் கோவலன் ஊழ்வினையைக் கூற வந்த இளங்கோவடிகள் அவன் முற்பிறப்பில் சங்கமன் என்பவன் மீது ஒற்றன் என்று பொய்குற்றஞ்சாட்டி அவன் கொலைக்குக் காரணமாயிருந்தமையைக் கூறுகின்றார். இவ்வாறு பழந்தமிழக அரசுகள் ஆட்சி நிலைபெறப் பகைவரது ஆட்சி நிலையை அறிய ஒற்றாடலைப் பயன்படுத்தியது போன்று இந்நூற்றாண்டிலும் அனைத்து நாடுகளின் அரசியலிலும் ஒற்றாடல் தொடர்ந்து வருகிறது. பிறநாடுகளின் செய்திளை அறியப் பெரிதும் துணை செய்வது நாட்டின் உளவு அல்லது துப்பறியும் இலாகாவாகும். இது ராணுவ ஒற்றர் இலாகா என்றழைக்கப்படும். மேலும் ஒற்றர்கள் சண்டைக் காலங்களிலும் எதிரிகளிடமிருந்த செய்திகளைத் திரட்டச் சண்டையிடும் ஒற்றர்கள், வேவு பார்க்கும் ஒற்றர்கள் என்று பலவகையாகப் பிரித்துள்ளனர். எனவே இன்றும் சிறந்த அரசியலமைப்பிற்கு உற்ற துணையாக ஒற்றர்கள் செயல்பட்டு வருகின்றனர்.

**தூதுவர்**

தூது என்பது ஒருவர்தம் கருத்தைப் பிறர்க்கு அறிவிப்பதற்காகத் தோன்றியது இத்தூது என்னுந் தொழில் மிகவும் நல்லியல்புடைய தொழிலாகும். ஒரு வேந்தனின் சார்பாளராக மற்றொரு வேந்தனின் அரசவையில் செயல்பட்டவர் தூதர் எனப்பட்டார். தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் தூதினை மூவகைப் பிரிவினுள் ஒன்றாகக் குறிப்பிடுகிறது. இதனை, **“ஓதல் பகையே தூதிவை பிரிவே”**[134] என்கிறது. பண்டைய முடிமன்னர்களின் அரசவை வளர்த்த செய்தொழில்களுள் ஒன்று தூது. இத்தூது செல்பவர்கள் சிறந்த தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும் என்பதை,

**“அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்**
**பண்புடைமை தூதுரைப்பான் பண்பு”**[135]

என்கிறது. மகாபாரதத்தில் கிருஷ்ணரும் இராமயணத்தில் அனுமனும் சிறந்த தூதுவர். அனுமன் சுக்கிரிவன் பொருட்டு இராமனிடத்தும் இராமன் பொருட்டாகச் சீதையிடத்து தூது செல்கிறான். அனுமன் தூதாகச் சென்று திரும்பி வந்து கண்டனன் கற்பினுக்கணியை எனக்கூறும் பகுதி தூதுவனின் பண்பையும், ஆற்றலையும் காட்டுகிறது. அக்காலத்தில் தலைமகன் தலைமகளிடையே கருத்து வேறுபாடு நிகழுங்காலத்தில் தூது

அனுப்பப்பட்டது. இவ்வாறு தூது செல்வதற்கு உரியவராகத் தொல்காப்பியர் பன்னிருவரைக் குறிப்பிடுகிறார். இவைமட்டுமின்றி இருநாடுகளுக்கிடையில் பகை உண்டாகிவிடுமானால் உயிர்கட்கும் பொருளுக்கும் பெருத்த அழிவு உண்டாதல் இயல்பு. அந்த அழிவை நீக்கச் சான்றோர், இருநாட்டு மன்னர்களையும் சமானதப்படுத்தி அமைதியான முறையில் நாடுகளைக் காவல் புரியச் செய்வர். தூதனாக இருப்பவன் அரசனிடமும் மற்றவரிடமும் அன்பு கொண்டு அரசனுக்கு நன்மையானவற்றை ஆராய்ந்து அறியும் அறிவினையும், வேற்று அரசரிடம் சென்ற தூது சொல்லும் காலத்தில் ஆராய்ந்து முறைப்படி சொல்லும் சொல்வன்மையினையும் பெற்றிருத்தல் வேண்டும். இதனை அறிந்தவர் ஔவையார்.

தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் என்பான் அதியமான்பால் பகைமை கொண்டான். தன்னிடத்து படைவலிமை மிகுந்து இருப்பதாக எண்ணி அவ்வேந்தன் செருக்குற்றான். அவனது அறியாமையை அறிந்த அதியமான போரின் கொடுமையையும் அதனால் நாட்டுக்கும் நாட்டு மக்கட்கும் நேரும் கேட்டையும் தெரிந்துக்கொள்ளுமாறு அறிவித்தற்கு ஔவையார் என்னும் தன் மதிப்பிற்குரிய புலவரை அவன்பால் தூதுவிட்டான். ஔவையார் அவனிடம் சென்றபோது தொண்டைமான் தன் படைக்கலக்கொட்டிலுக்கு அழைத்துச் சென்று காட்டினான். அவன் கருத்தறிந்த ஔவையார் அதியமான் படைக்கலங்களைப் பழிப்பது போலப் புகழ்ந்தும் தொண்டைமான் படைக்கலங்களைப் புகழ்வத போலப் பழித்தும் பாடியுள்ளார். இதனை,

**“இவ்வே பீலி யணிந்த மாலைசூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்தநெய் அணிந்து**
**கடியுடைய வியநகர் அவ்வே யவ்வே**
**பகைவர்க் குத்தி கோடு, நுதி சிதைந்தும்**
**கொல் துறைக் குற்றிலமாதோ”**[136]

என்கிறது. தூதாகச் செல்லுந் தொழீல் விழுந்தொழில் என்று குறிப்பிடப்பட்டது. விழுந்தொழில் என்பது தூது போதலைக் குறிக்கிறது. இத்தொழிலின் சிறப்புக்கருதி **“ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன”**[137] என்கிறார் தொல்காப்பியர். அரசன் மேற்கொண்ட போர்தொழில் நிகழாவண்ணம் மழைபெய்யத் தொடங்கியது. இதனால் வேந்துவிடு விழுத்தொழிலாகிய தூது சொல்லுதல் கைவிடப்பட்டது. தூதுவரைச் சிறந்த வலிமையுள்ளவர், உயர்ந்த ஆற்றலுடையவர் என்றும் குறிப்பிடுவர். இல்வாழ்க்கை அளவில் நலம்புரிய அமைந்த தூதே நாடுகளுக்கிடையில் நன்மையை ஏற்படுத்துகிறது.

ஆகவாழ்வில் பிரிந்தவரைச் சேர்க்கவும் புறவாழ்வில் பகைமைக்கொண்ட நாடுகளை இணைக்கவும் அமைந்த ஒரே தொழில் தூது.

**காவலர்**

காக்கும் தொழிலைச் செய்பவர் காவலர் எனப்பட்டனர். காத்தல் தொழிலை அடிப்படையாகக் கொண்டு அரசனுக்குக் காவலன் என்ற பெயரும் வழங்கப்பட்டது. கொலை, களவு முதலியவற்றிலிருந்த மக்களைக் காத்தல், ஆட்சிப்பொறுப்பிலிருக்கும் அரசனின் கடமையாகும். அரசன் மக்களை இவற்றிலிருந்து காக்காவிட்டால் நாட்டின் செல்வமாகக் கருதப்பட்ட பசுக்களில் பால் குறையும் அறிஞர்கள் தங்கள் கடமைகளை மறப்பர் என்பதை,

**"அபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**

**காவலன் காவலன் எனின்"**[137]

என்று அரசனின் கடமையைச் சுட்டுகிறது. நாடு, ஊர், நகர் மக்கள் இவற்றைக் காக்கும் பொறுப்பு அரசனது கடமையாக இருந்தது. அவற்றைக் காக்கத் தவறினால் நாட்டில் கல்வி கற்றல், பொதுநல வேள்வ செய்தல், கொடுப்பது, வாங்குவது ஆகிய ஆறு தொழில்களும் இல்லாது போகும் என்பதை,

**"காவலர்ப் பழிக்குமிக் கண்ணகல் ஞாலம்"**[138]

**"காவலர் வழிமொழிந்து ஒழுக"**[139]

ஏன்ற பாடலடிகள் அரசனது காக்கும் பொறுப்பைக் சுட்டுகின்றன. மேலும் 'திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் காணலாம்' என்று எண்ணும் வகையில் மன்னன் மக்களைக் காவல் செய்ய வேண்டும். பண்டைய மன்னர்கள் நகரையும், ஊரையும், தெருக்களையும் காவல்புரிவதற்கென்று காவல்படைகள் அமைந்திருந்தனர். அக்காவல்காரர்கள் காவல் செய்தலையும், ஒற்றறிதலையும் முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

**நகரக்காவலர்**

நகரைக் காவல் செய்வதும் ஒற்றறிந்து உரைப்பதும் நகரக்காவலரின் தொழிலாகும். இவர்கள் தூக்கம் என்பதை அறியாதவர்கள் இவர்கள் நள்ளிரவில் கரிய துடியின் தோலைப் போன்று கருநிறத்து கல்லையும், மரத்தையும் அறுக்கும் கூர்மையான

‘உளியும்’, ‘நூலேணியும்’ வைத்திருப்பர். இடையில் வாள்தொங்கும் நுண்ணிய வேரைப்பாடுமிக்க ஆடை அணிந்திருப்பர். இரவில் கள்வரைப் பிடிப்பதற்குக் காவலர் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் துயில் கொள்ளாத கண்களை உடையவராக இருந்தனர். மேலும் சிறந்த விற்பயிற்சி உடையவர் காவலர். இப்படிப்பட்ட காவலர் தேரோடும் நகரவீதிகளில் மழைபெய்து ஓய்ந்துபோன நள்ளிரவிலும் உறங்காது கடமையாற்றும் திறத்தை,

**“கண்மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி**
**வயக் களிறு பார்க்கும் வயப்புலி போல**
**துஞ்சாக் கண்ணீர் அஞ்சாக் கொள்ளையர்”**[140]

என்கிறது. நகரக்காவலர் களிறு பார்க்கும் புலிபோல ஒற்று அறியச் செல்வர். இவர்கள் துஞ்சாமை அஞ்சாமை அறிந்தோர் புகழும் ஆண்மையைப் பெற்றவர் என்பதை,

**“நிலம் அகழ் உளியின் நீலத் தானையன்**
**கலன் நசைஇ வேட்கையின் கடும்புலி போன்று”**[141]

என்று காவலரின் வீரத்தைச் சிறப்பிக்கிறது.

**ஊர்க்காவலர்**

பழந்தமிழர் இரவுப்பொழுதில் தூங்காமல் ஊரைச் சுற்றிக் காவல்புரிந்தனர். இவர்கள் நள்ளிரவில் ‘சூலம்’ ஏந்திய கையுடன் திரிவர் என்பதை, **“யாமங் கொள்பவர் சுழர்நிழல்”**[142] என்கிறது புறம். இக்காவலர்கள் ஊரைச்சுற்றி வரும்போது மக்களை எச்சரிக்கும்பொருட்டு மணிகளை ஒலிக்கச் செய்வர். ஊர்க்காவலர் சிறிதும் சோர்விலாதவர் இரவில் உறங்காமல் காவல்காப்பர்.

**மெய்க்காப்பாளர்**

காவலர் நகரையும், ஊரையும் காவல் செய்ததோடு நாடுகாக்கும் மன்னனுக்கு எந்த நேரத்திலும் எந்தவிதமான தீங்கும் நேரிடாதவாறு உறுதுணையாய் உடனிருந்து காக்கும் பொறுப்பையும் மேற்கொண்டனர். இவர்கள் மெய்க்காப்பாளர் என்றழைக்கப்பட்டனர். மன்னனுக்கு மெய்க்காப்பாளராக இருப்பவர்கள் அவன் நம்பிக்கைக்கு உரியவராய் நல்லொழுக்கம் உடையராய் விளங்கவேண்டும். எனவே

நீண்டநாள் தம்மிம் பணியாற்றியவரையே மெய்க்காப்பாளராக அரசர் நியமிப்பார். அதனால் மெய்க்காப்பாளர் முதிர்ந்த வயதை உடையவராய் இருந்தனர்.

**"நெடுநா ஒள்மணி நிழத்திய நடுநாள்**
**அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்**
**சிதர்வால் அசைவளிக்கு அசைவந் தாங்கு**
**துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்**
**பெருமூ தாளர் ஏமம் சூழ"**[143]

மக்களின் வாழ்க்கை நலனைக் கருத்தில்கொண்டு நடுவுநிலை பிறழாமல் நன்கு ஆராய்ந்து உண்மைத்தெரிந்த தீர்ப்புக்கூறும் இடம் இருந்தது. அது அறங்கூறவையம் என்றழைக்கப்பட்டது. இதனை, **"சிறந்த கொள்கை அறங்கூ றவையம்"**[144] என்கிறது. இந்த அவையத்தில் இருந்தோர் கல்வி கேள்வி ஒழுக்கம் ஆகியவற்றில சிறந்த அறவோராகவும், நடுவுநிலைமை கொண்டவராகவும் இருந்தனர் என்பதை,

**"சமன்செய்து சீர்தூக்கும கோல்போல் அமைந்தொருபாற்**
**கோடாமை சான்றோர்க் கணி"**[145]

என்ற வள்ளுவரின் வாக்கிற்குச் சான்றாய்த் திகழ்ந்தவா் அறங்கூறவையத்தார், பயத்தையும், துன்பத்தையும் ஆசையையும் விட்டவர்கள். ஒரு பக்கத்தாரிடம் கோபத்தையும் மற்றொரு பக்கத்தாரிடமும் மகிழ்ச்சியையும் காட்டாமல் தம் உள்ளத்தை நடுவுநிலையிலே நிறுத்திக்கொண்டு துலாக்கோலைப்போல் நடுநிலையில் நிற்பார்கள். இவர்கள் சிறந்த ஒழுக்கமுடையவராய் நீதிபதியாய் வீற்றிருந்த நீதி வழங்குகின்ற அவையம் அறங்கூறவையம் என்பதை,

**"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்**
**செற்றமும் உவகையும் செய்யாது காத்த**
**ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்**
**சிறந்த கொள்கை அறங்கூர் அவையமும்"**[146]

என நீதிபதிகளின் நேர்மையைச் சுட்டுகிறது மதுரைக்காஞ்சி. இவை சிற்றூர்களில் ஏற்படும் சிக்கல்கள் உடனுக்குடன் தீர்க்கப்படவும் வேந்தனின் வேலைப்பளுவைக் குறைப்பதற்காகவும் இவ்வறங்கூறவையம் ஏற்படுத்தப்பட்டிருக்கக் கூடும். இவ்அவையம் அக்கால ஆட்சி முறைக்கு பெருந்துணை புரிந்தது.

**அறிவர்**

அறிவர் என்பவரைக் கணிவன் எனவும் அழைப்பர். இவர் இல்லற வாழ்க்கையில் கணவன் மனைவிக்குள் ஊடல் முதலியவை நிகழ்ந்தால் அவர்களுக்கு அறிவுரைகூறி இல்லறநெறியில் நிறுத்துவார். இவர் திருமணம் நடத்தக்கூடிய நாளைக் கணித்துக் கூறுவார்.

**"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவினை முந்துற்இத்**

**தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவர்"**[147]

என்கிறது. இவரைக் குற்றமற்ற செயலையுடைய மழையும் பனியும் வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினால் அறிபவன் என்கிறார் இளம்பூரணர்.

**"மறுவில் செய்தி மூவகைக் காலமும்**

**நேறியின் ஆற்றிய அறிவன் தேயம்"**[148]

**ஆசிரியர்**

கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பர். அத்தகைய சிறப்பான கல்வியாளரை உருவாக்குவது ஆசிரியரின் தொழிலாகும். நல்ல நூல்களையும நல்ல மாணவர்களையும் உருவாக்குபவர் சிறந்த ஆசிரியர் ஆவார். அவர்தாம் கற்றதனால் பெற்ற இன்பத்தை எல்லோர்க்கும் அறிவிப்பதற்காகக் கல்வியைக் கற்பிக்கிறார். இதனை,

**"தொல்லாணை நல்லாசிரியர்**

**புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்"**[149]

ஏன்கிறது மதுரைக்காஞ்சி. கல்லாதவர்க்குத் தம்கைப்பொருளைக் கைமாறாகக் கொடுத்த நூலைக் கற்பித்தனர். **கற்பித்தான் நெஞ்சமுங்கப் பகிர்ந்துண்ணும் விச்சைக்கண்** என்கிறது கலித்தொகை. அக்காலத்தில் கற்றோர்க்கிடையே விவாதமும் பட்டிமன்றமும் நடந்துள்ளது.

அங்கு வாதிட்டோர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினர். விவாதம் நடக்கும் இடத்தில் கொடியை நட்டிக் கல்வியின் சிறப்பை நிலைநாட்டினர்.

**“பல்கேள்வித் துறைபோகிய**
**தொல்லாணை நல்லாசிரியர்**
**உறழ்குறித் தெடுத்த உருகெழு கொடியும்”**[150]

என்கிறது பட்டினப்பாலை. கல்வி கேள்விகளில் சிறந்தவர் அல்லாதார்க்கு இக்கொடி அச்சம் விளைவித்தலின் ‘உருகெழுகொடி’ எனப்பட்டது. இவற்றின் மூலம் பூம்புகாரில் பட்டிமன்றம் இருந்ததையும் அங்கு வாதிட்டோர் பலகேள்வித் துறைபோகிய தொல்லாணை நல்லாசிரியராக இருந்ததையும் உணர்த்துகிறது.

## முடிவுரை

- நிலம், நீர், தீ, காற்று என்கிற இயற்கைக்கு அப்பாற்பட்ட உருவாக்கத்தைப் பெற்ற மனிதர்களாக சங்க கால மனிதர்கள் இருந்தனர்.

- வாழ்வு என்பது கலங்கரை விளக்கம் போன்றது. அடக்கத்தோடு வாழும் முறையும், பண்புகொண்ட வாழ்வு முறையும், உழைப்புடன் வாழும் முறையும் ஆய்வினால் தெளிவு பெற முடிகிறது.

- விழுமியம் என்னும் சொல்லாட்சி மதிப்பு என்னும் பொருளில் ஆளப்படுவதும், சிறப்பான, உயர்வான மேன்மையான, பெரிய என்ற பெயரடைகளைக் கொண்டதாக அறியமுடிகிறது.

- சங்ககால மனிதர் கூடிவாழும் பண்பினர். ஆதலால் அவர்களிடம், ஆளுமை, அதிகாரம், குணநலம் அனைத்தும் உடையத் தலைமைபண்பைக் காணமுடிகிறது.

- கல்வி அறிவுடையோர் சங்க காலந்தொட்டே சிறப்புற்றிருந்தனர். வானியல், மருத்துவம், இசை, ஓவியம், சிற்பம், நாட்டியம் எனப் பலநிலையில் இருந்தனர் என்பது புலனாகிறது.

- கற்றவர்களுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்னும் சங்ககாலத்தவருக்குப் பொருத்தமான உள்ளதை அக்கால மன்னர்களுக்கே புலவர்களின் அறிவுரையின் மூலம் தெரிகின்றது.

- களவு, கற்பு வாழ்விற்கு முதன்மையானதாக நட்பு பேணப்பட்டுள்ளது. சங்க கால மக்களுக்கு மன்னரும், குறுநில மன்னர்களும் வறியவர்களுக்கு வேண்டுமளவில் கொடைமடத்தன்மையில் இருந்தனர் என்பது அக்கால வாழ்வுநலனில் காணமுடிகிறது.

- அரசியல் வாழ்வில் செங்கோல் வாழ்வு நலனில் மட்டுமே தமிழர்கள் வாழ்ந்தனர். படைக்கலம், கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர், மாலை, முடி ஆகிய சின்னங்களைப் பெற்றும், காவிதிப்பட்டம், வட்டில் கணக்கர், நாழிகைக் கணக்கர், அமைச்சர், புரோகிதர், சேனாதிபதி, தூதுவர், ஒற்றர் என அரசியல் வாழ்விற்குரிய தூண்களாக காணமுடிகிறது.

- நாடு சிறக்கவும், பெருமைமிக்க வாழ்விற்கு நாட்டைச் நேசித்து வாழ்ந்தனர் தமிழர்.

- வீரவாழ்வு மட்டுமல்லாது தொழில் வளம் பெருக உழவுத்தொழில் செய்து வாழ்ந்தனர் தமிழர்.

- ஐம்பூதங்களால் ஆனது இவ்வுலகம். இவ்வுலகத்தில் நின்று இயற்கையைப் பேண தமது வாழ்வை நடத்தி வந்துள்ளனர் தமிழர்கள். தன்மையில் அடிப்படையில் களர்நிலம், நிறத்தின் செம்மண்நிலம், சுவையில் உவர்நிலம் என்கிற நிலங்களில் தமிழர் வாழ்ந்தனர்.

- மருத்துவக் கலையில் மாற்று உறுப்புப் பொருத்தும் அளவில் அறிவு நலனில் வாழ்ந்துள்ளனர்.

- ஓரறிவு முதல் ஆறிறிவுடைய மனிதர்களாக(சிந்திக்கும்) ஆற்றல் பெற்றவர்களாகவும், அவற்றை மதித்து தமது வாழ்வின் விழுமியங்கள் காணப்பட்டதென ஆய்வினால் தெளிவாக காணமுடிகிறது.

- தமிழர்தம் பண்புநலன் பேணும் முறைமையில் தமது வாழ்க்கையை இரண்டற கலந்தவர்களாக ஆய்வினால் புலனாகின்றது.

- மனிதநேயமிக்கவர்களாக தமிழர்கள் வாழ்ந்தனர். அவ்வாறே ஆற்றுதலில் - உதவியரும், போற்றுதலில் - பிரியாமையும், பண்பில் - ஒழுக்கமும், அன்பில் உறவு முறையோடும், அறிவில் - பேதமையும், செறிவில் - கருத்துச்செறிவ மறவாமையும், நிறைவில் - உயிர் போன்றும் வாழ்ந்தனர் என்பது திண்ணம்.

- பொருளாதாரம் மற்றும் உயர்வான குணநலன்கள் அடைவதற்கு கல்வி சிறந்த வழிகாட்டுதலாகும். அதுவே நிலைபேறுடையது என்பதை கற்றல் நன்று என்பதும், அவனிடத்தே அரசு உருவாக்கமும் இடம்பெற்று இருப்பதை ஆய்வினால் தெளிவுர முடிகிறது.

- இலக்கியப்புலவர் மட்டுமல்லாது பிறரிடத்தும் நட்போடு வாழவேண்டுமென சங்க இலக்கியம் மெய்ப்பித்துள்ளதை காண முடிகிறது.

- தமிழ்நாட்டு அரசியலில் மன்னர்களும், சிற்றரசர்களும் தமக்கென வாழ்ந்த நிலப்பகுதிக்கு ஒத்த செங்கோலோடு ஆட்சிபுரிவதில் கவனத்தோடு வாழ்ந்தனரென அறிய முடிகிறது.

- நாகரிகத்தின் வளர்ச்சிக்கு மக்களிடையே நிலவும் பல்வேறு கலைகள் வேண்டப்படுகிறது. ஆயினும் கட்டிடக்கலையை விரும்பியதோடு அல்லாமல் பல வடிவங்களில் அமைத்து தந்தார்கள்.

- நிலம் சார்ந்த சூழலில் ஒருவரையொருவர் போர் புரிவதில் ஆர்வம் கொண்டிருந்தனர்.

- தமிழர் வாழ்வுநலன் நோயற்ற வாழ்வு பேணும் முகமாக தொடக்கம் முதலே வாழ்ந்தனர். அவற்றுள் நம்பிக்கையறிவு, மருத்துவ அறிவு, வானியல் அறிவு, ஒலிக்குறிப்பினால் ஏற்படும் விந்தையறிவு, பல்வேறு உயிரினங்களின் (ஓரறிவு முதல் ஆறறிவு வரை)

# இயல் - இரண்டு

## சங்க இலக்கியத்தில் விழுமியங்கள்

### அடிக்குறிப்பு

1. தொல். சொல். உரி – 55
2. நாலடி – 159
3. புறம் - 27: 3 ப - 118
4. அகம் - 170 : 3 ப - 112
5. அகம் - 339, 11 – 14
6. கலித் - 18, 7 – 12
7. அகம் - 379, 15
8. அகம் - 361, 3 – 5
9. ஐங் - 361, 3 – 5
10. குறுந் - 49, 3 – 5
11. தொல். கற்பு. 1093 ப - 367
12. புறம் - 24, 26 – 28வரி
13. அகம் - 352, 8
14. குறுந் - 40, 1 – 5வரி
15. பதிற்று - 90, 40
16. புறம் - 212, 3 – 8
17. மேலது – 110, 1 – 4
18. மேலது – 182, 1 – 4
19. கலி – 133, 6 – 13
20. புறம் - 186, 1
21. பதினெண் - 1048
22. பட்டின – 69 – 72
23. பரி – 2, 5 – 12
24. நற் - 165, 3வரி
25. பதிற் - 13, 20 – 22
26. நற் - 201, 103
27. பரி – 6, 1 – 2
28. தொல். பொருள். மர. 86

29. புறம் - 2, 1 – 6
30. மேலது - 18
31. தொல். பொருள். 5
32. புறம். 335, 4 - 8
33. புறம். 109, 3 – 6
34. புறம் - 28, 3 - 5
35. பரி – 6, 1 – 2
36. பட்டின – 126 – 129
37. பரி – 7, 1 – 4
38. D.S.Lal – Climatologes p - 177
39. Tayiors work D.S. L.al p – 56
40. பதிற் - 42, 2 – 6
41. புறம் - 192, 8 – 10
42. புறம் - 27: 8 ப - 118
43. தொல். மரபு. 1526 ப - 526
44. தொல். மரபு. 1527 ப - 527
45. குறுந். 18
46. தொல். மரபு. 1528 ப - 527
47. அகம் - 296: 8 – 10, ப - 400
48. தொல். மரபு. 1529 ப - 527
49. அகம் - 339, 1 – 3
50. குறள் - 1122(இன்பத்துப்பால்- தலைவியற் அச்சம் கொள்ளுதல்) ப - 225
51. அகம். 377, 1 - 2
52. தொல். மரபு. 1530 ப - 528
53. ஐங். 21
54. ஐங். 22
55. தொல். 1531
56. ஐங். 291
57. ஐங். 57
58. அகம். 197, 4- 6
59. குறுந் - 40: 1 - 4
60. குறுந் - 3: 1 - 4
61. நற் - 397, 3- 6
62. பட்டின – 216 – 220
63. நாலடி - 131
64. குறள் - 392(பொருட்பால் - கல்வி) ப - 79
65. குறள் - 410(பொருட்பால் - கல்லாமை) ப - 82
66. வெற்றிவேற்கை – 35
67. புறம் - 183, 1 – 4
68. மேலது – 184, 9 – 10

69. மேலது – 195, 6 – 7
70. மேலது – 186, 1 – 2
71. மேலது – 312, 1 – 2
72. மேலது – 55, 7 – 9
73. குறுந் - 3: 1 - 2
74. குறுந் - 49: 3 - 5
75. கா. கோ.வே. த.வ. ப – 118
76. கலித். பாலைக்கலி – 73
77. நல்வழி பா – 29
78. மகாத்மா காந்தி, பொன்மொழிகள் ப – 183
79. குறள் - 788(பொருட்பால் - நட்பு) ப - 158
80. புறம் - 216: 10 – 12 ப - 354
81. கதிர் மகாதேவன், தமிழர் பண்பாடு ப – 61
82. புறம் - 175, 1 – 2
83. மேலது – 236, 5 – 7
84. நாலடி – 130
85. புறம் - 158, 17 – 20
86. புறம் - 142, 5 – 6
87. பதிற் - 14, 7
88. சிறுபாண் 113
89. புறம் - 164, 8 – 14
90. நற் - 217, 1 – 2
91. அகம் - 78, 15
92. பதிற் - 39
93. கலி – 119, 6
94. மதுரை – 131 – 133
95. புறம் - 101, 2 – 5
96. புறம் - 383, 4 – 6
97. தொல். பொருள். புற. நூ. 1003 ப - 313
98. புறம் - 388, 1 – 2
99. புறம் - 117, 1 – 2
100. புறம் - 124, 1 – 3
101. புறம் - 140, 1 – 3
102. கலித் - 132, 3 – 5
103. கலித் - 2, 5 – 7
104. மு. கருணாநிதி. இளைய சமுதாயம் ப – 20
105. கலித் - 128, 4 – 8

106. புறம் - 42, 1 – 4
107. பதிற் - 74
108. கலித் - 79, 5 – 7
109. மதுரை 732 – 733
110. பதிற் - 45
111. பொருந – 308
112. மதுரை – 60
113. புறம் - 20, 2 – 4
114. மேலது – 323, 4 – 6
115. குறுந் - 12
116. பெரும் - 112
117. புறம். 292, 2 – 5
118. குக்கூ ப – 32
119. பட்டி – 283
120. பட்டி - 271
121. மதுரை – 521, 89
122. புறம் - 22, 3 – 4
123. தொல். மெய் - 1205 ப - 410
124. புறம் - 35, 6 – 7
125. புறம் - 185, 5 – 6
126. பெரும்பாண் - 47 – 49
127. கலித் - 68, 1 – 2
128. கம்ப. 27, 6 – 10
129. குறள் - 381(பொருட்பால் - இறைமாட்சி) ப - 77
130. மதுரை – 496 – 499
131. புறப்பொருள் - 5
132. அகம் - 313, 15
133. புறம் - 47, 6 – 7
134. தொல் -பொருள். அகம். 971 ப - 298
135. குறள் - 681(பொருட்பால் - தூது) ப - 137
136. புறம் - 95, 1 – 5
137. தொல் - பொருள். அகம். 972 ப - 298

138. குறள் - 560(பொருட்பால் - கொடுங்கோன்மை) ப - 112
139. புறம் - 35, 29
140. புறம் - 8, 1
141. மதுரை 642 – 644
142. புறம் - 20, 3 – 4
143. புறம் - 37, 9

144. முல்லை 50 – 54
145. குறள் - 118(அறத்துப்பால் - நடுவுநிலைமை) ப - 24
146. மதுரை – 489 – 492
147. கலித் - 39, 4 – 7
148. தொல். பொருள். புறம். 1021 ப - 325
149. மதுரை 761 – 762
150. பட்டின 169 – 171

# இயல் - மூன்று

# அகப்புற சமூக மரபுநிலை விழுமியங்கள்

## முன்னுரை

அகம் என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன. உள்ளத்தில் எழுந்த ஆசை, உடல்வழிப் படர்ந்து உள்ளத்தைக் குளிர்விப்பது ஆதலின் உள்ளம் என்பதனுடன் தொடர்புபட அகம் என்றனர். **'உள்ளத்தையே அகம்'** என்றும் குறித்தனர். உள்ளம்தான் ஊன்றின்பத்திற்கு உயிர்க்களம் ஆகும். ஆனாலும், அதனை மெய்வழி உணர்தலே இயற்கை. ஆயினும், அது உடல், உள்ள இன்பம் மட்டுமன்று, உயிர் இன்பம் காதற்செயலும் உள்ளத்தின் வழி இயங்குவனவேயாகும். உள்ளத்தால் நினைந்த நினைவும் காதல் நுகர்ச்சிக்குச் சமம். உள்ளப் புணர்ச்சி என்னும் பரிவையும் உயர்திணை, அ∴றிணை உயிர்க்கெல்லாம் பொதுவானது. **"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்"**[1] என்று தொல்காப்பியரே கூறுவது போன்று உடம்பொடு ஒட்டிய இயற்கையது. சங்கத் தனிப்பாடல்களின் தொகை 2381. அவற்றுள் அகப் பாடல்கள் 1862. சங்கப் பாடல்களைப் பாடிய புலவர்கள் 472 சான்றோர்களுள் அகம் பாடியவர்கள் மட்டும் 378 பேர். இவர்களில் பெண்பாற் புலவர்கள் 23 பேர். இவர் பாடிய பாடல்களின் தொகை 97 ஆகும். சங்கச் சான்றோர்களுள் அகத்திணை பாடாது புறத்திணை மட்டும் பாடியோர் எண்ணிக்கை 301. அகமும் புறமும் ஆகிய இரு திணைகளையும் பாடியோரின் தொகை 71. தொல்காப்பியர் ஒன்பது இயல்களில் புறத்திணைக்கு ஓர் இயலை மட்டும் ஒதுக்கி, அகப்பொருளுக்கு அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் எனப் பல இயல்களை ஒதுக்கியுள்ளார். இதுவும் அகத்திணையின் சிறப்பையுணர்த்துகின்றன.

### 3.1 அகம் பற்றிய விழுமியக்கூறுகள்

சங்கப் பாடல்கள் அமைப்பாலும், நடையாலும், உரையாடல் தன்மையாலும், கருத்தமைதியாலும், நிகழ்ச்சிப் பின்னலாலும் உளவியல் அடிப்படையில் ஒத்து நிற்பவை ஆகும். சங்க அக இலக்கியங்கள் திணை, துறைகளுக்குத் தரும் சிறப்பைக் காட்டிலும்

அகமாந்தரின் மனவுணர்வுகளுக்குச் சிறப்பிடம் தருகின்றன. சங்க அக இலக்கியங்கள் அகமாந்தரின் கூற்று அடிப்படையில் அமைந்துள்ளதைச் சுட்டிச் செல்கிறது. அக இலக்கியங்களில் இடம்பெறும் அகமாந்தர்கள் தோழி, தலைவி, தலைவன், தாய், செவிலி, பரத்தை, வாயில்கள் என்போராவர். அகமாந்தரின் மனவுணர்கள் கூறுவோரின் இன்ப துன்ப நிலைக்கு ஏற்பவும், கேட்போரின் மனநிலைக்கு ஏற்பவும் மாறுபட்டு ஒலிக்கின்றன. கேட்போருக்கமைந்த பின்புலங்களின் தன்மைக்கேற்ப, கூறுவோர் உள்ளுறை, இறைச்சிக்களைப் பயன்படுத்திக் குறிப்பாகவோ, உவமைகளைப் பயன்படுத்தி விளக்கமாகவோ, நேர்முகச் சொற்களைப் பயன்படுத்தி வெளிப்படையாகவோ தம் மனவுணர்களை வெளியிடுகின்றனர். இம்மனவுணர்கள் உளவியல் அணுகுமுறை கொண்டும் புலவர்கள்தம் வரன்முறைக்குப்படுத்தப்பட்ட புலனெறி மரபு சார்ந்தும் விளங்குகின்றன.

**அகம்**

சங்க அக இலக்கியம் இலக்கியமாகத் திகழ்வதாக தமிழண்ணல் குறிப்பிடுகிறார். **“மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்”**[2] என்று தொல்காப்பியம் குறிப்பிடுபிறது. இலக்கியம் மனித வாழ்வோடு பின்னிப் பிணைதல் வேண்டும். மனிதப் பண்பைச் சித்திரிக்க வேண்டும். மானுடம் பாட வேண்டும். இங்ஙனம் இலக்கியம் மனித வாழ்வோடு ஒருங்கிணைவதை மனிதத்துவப்படுத்தல் (Humanization of Literature) என்று இன்றைய ஒப்பீட்டாய்வாளாகள் கூறுகின்றனர். சங்க இலக்கியம் மனித வாழ்வில் நிகழும் சூழல்களையும் மனவுணர்களையும் உரிப்பொருளாக்கிப் பாடிய முறை, தலைசிறந்த மனிதத்துவப்படுத்தும் முறையாகும். ‘‘இலக்கியத்தில் பிரிவின்றி ஆழமாகப் பதிந்துள்ள மனிதப்பண்பு காரணமாகவே நாம் அதைப் போற்றுகின்றோம். ஒரு சிறந்த நூல், வாழ்விலிருந்து நேரே முகிழ்க்கின்றது. அதைப் படிப்பதன் மூலம் நாம் வாழ்வின் நெருங்கிய, புதிய அகன்ற தொடர்புகளைப் பெறுகின்றோம். இலக்கியத்தின் ஆற்றல் இதில்தான் அடங்கியிருக்கின்றது. இவ்வாறு அடிப்படையில் மொழியின் வாயிலாக வாழ்வை விளக்குவதே இலக்கியமாகும் என்ற கூற்றும் சங்கப் பாடல்களுக்கு மிகுதியும் பொருந்தும்.

சங்கப் புலவர்கள் தம் உணர்வுகளையும் சிந்தனைகளையும் அடிப்படையாகக் கொண்டு படைத்தது போன்று, சுவைப்பவரும் தம் உணர்வுக்கும் சிந்தனைக்கும் ஏற்பச் ஆதிமந்தியார் தன் கணவனைக் காவிரியாற்றில் தொலைத்த நிலையில் அவனைத் தேடித்

செல்கிறாள். **'தன் கணவன் என்ன ஆனான்'** என்று தெரியாமல் அவனைத் தேடிச் செல்கிறாள். ஆதிமந்தியார் சென்ற செலவின் நோக்கம் வேறுபட்டது. தலைவி, **'தலைவனைப் புணர்ச்சியின் நோக்கமாகத் தான் தேடிச் செல்லுதல் கூடாது'** என்று தொல்காப்பியர் வலியுறுத்துகிறார். ஆதிமந்தியார் புணர்ச்சி நோக்கமின்றித் தன் தலைவனைத் தொலைத்த நிலையில் தேடிச் செல்லுதல், தமிழ்ப்பண்பாட்டு மரபைச் சிதைப்பதாகப் பொருள் கொள்ளக்கூடாது. தலைவி தன் முதல்வனையே (கணவனையே) தொலைத்த நிலையில் தலைவன் உள்ளவிடத்துத் தேடிச் செல்லலாம் என்ற புதிய விதி தொல்காப்பியத்துள் மறைந்து நிற்பதை ஆதிமந்தியாரின் பாடல்வழி அறியமுடிகிறது என்று உள்வழிப்படுதலுக்கு விளக்கம் தருகிறார் சி. சிதம்பரம்.

**அகமும் கற்பும்**

அக இலக்கியம் பெண்ணின் கற்பை வற்புறுத்தும் கற்பிலக்கியமாகத் திகழ்கிறது. **"உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"**[3] எனத் தொல்காப்பியம் கற்பிற்கு இலக்கணம் வகுத்துள்ளது. அகத்தலைமையை ஏற்கும் தலைவியின் பல்வேறு பண்புகளைக் கூறும் தொல்காப்பியம் தலைவியின் பண்புகளில் கற்புடைமையையே முதலில் வலியுறுத்துகிறது.

தலைவியின் திண்ணிய கற்புக்காதலே முடிவில் வெற்றி பெறுகிறது. தலைவியின் காதல், கற்பாகாமல் (திருமணத்தில் முடியாமல்) தோல்வியுற்றதாகவோ, உயிர் துறந்ததாகவோ சங்க இலக்கியம் கூறுவதில்லை. தலைவியின் காதல் நெஞ்சத்திற்கு முன் குடும்பமும், உலகமும் அடங்கி ஒழுகுவது தான் சங்க இலக்கியத்தில் சிறப்பாக அமைகிறது.

**"நின்னணங்கு அன்மை அறிந்தும் அண்ணாந்து**
**வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்**
**கடவுளாயினும் ஆகுக**
**மடவை மன்ற வாழிய முருகே!"**[4]

தலைவன் மார்புதர (காரணமாக) வந்த இந்நோய் உன்னால் ஏற்பட்டதல்ல என்று அறிந்தும், வேலன் வேண்டிக் கொண்டதனால் இங்கு வந்துள்ள முருகவேளே! நீ கடவுள்

ஆனாலும் அறியாமை உடையவனே, நீ வாழ்க என்று கூறித் தோழி அறத்தொடு நிற்கிறாள் என்ற கற்புள்ளம் கடவுளையே எள்ளும் நிலைக்குச் செல்கிறது. பெண் கற்பு, கடவுட் கற்பாம் என்பது அக இலக்கியம் துணிந்த கூற்றாகும். அக இலக்கியம் கற்புடைய பெண்ணின் கற்பைச் சோதிப்பதாகவோ, ஐயுறுவதாகவோ காட்டுவதில்லை. இற்பரத்தைக்கும் கற்பு இருப்பதாகக் காட்டுவதே அக இலக்கியமாகும்.

**முல்லைநில அகம்**

முல்லை நிலத்திற்குரிய இருத்தல் பண்பாட்டின் அடிப்படையில் தலைவி ஆற்றியிருக்கிறாள். மாலை நேரம் வந்ததும் திணைக்குரிய முல்லைக் கொடிகளில் முல்லைமலர்கள் மலர்ந்தன. வினைமுடித்துக் காலந்தாழ்த்தி வரும் தலைவன் அரும்பியிருந்த முல்லை மலர்களைக் கண்டு தலைவிக்குப் பற்றுக்கோடாக இல்லாமல் காலந்தாழ்த்தி வந்து வருத்தம் செய்தமைக்காகத் தன்னை நோக்கி எள்ளி நகையாடுவதைப் போல் உணர்கின்றாள். இந்த உணர்வை,

**“-------------நீ நின்**
**சிறுவெண்முகையின் முறவல் கொண்டனை**
**நகுவை போலக் காட்டல் தகமோ”**[5]

என்ற பாடல் மெய்ப்பிக்கிறது. பொருள்வயிற் பிரிந்த தலைமகன் கார்காலம் தொடங்குவதற்கு முன் வந்துவிடுவேன் என்று கூறிச் செல்கின்றான். கார்காலம் தொடங்கி, மழை பெய்தது. அக்காலத்தில் முல்லைக் கொடிகள் அரும்புகள் அவிழ மலர்ந்து விளங்கின. அக்காட்சியைக் கண்ட தலைவியின் மனம் இன்பம் கொள்ளவில்லை. மாறாக, கார்காலம் தொடங்கியபின்னரும் தலைவன் சொன்னபடி வரவில்லையாதலால், முல்லைக்கொடிமகள் தன் அரும்புகளாகிய பற்களைக் காட்டித் தன்னை எள்ளி நகையாடுவதாக உணர்கின்றாள். ஆனால், தலைவனை குறை சொல்வதில்லை என்பதையும் அறிய முடிகின்றது.

**நெய்தல்நில அகம்**

நெய்தல் தலைவனும் இடையூறு மிக்க வழியில் வரினும், சுறவுமீன் தடுப்பினும் இறப்பதில்லை. பாலைநிலத் தலைவன் கொடிய விலங்குகள் நீர்வேட்கையில் அலைவுறும் வழியில் செல்லினும், வழிச்செல்வோரைக் குத்திப் பிணம் துள்ளுதலைக் காணும் வேட்கையுடைய ஆறலைகள்வர் இருக்கும் வழியில் செல்லினும் இறப்பதில்லை. பகைவயிற் பிரியும் முல்லை நிலத் தலைவன் போர்க்களத்தில் சாவதில்லை. அவன் கார்காலத்தில் திரும்பிய வருவான். இதனால் சங்க அக இலக்கியத்தை வாழ்விலக்கியமாகக் கருதலாம்.

இக்காலத்துப் புதினங்கள் காட்டும் நடப்பியல் போல் (Realism) சங்க இலக்கியங்கள் காட்டுவதில்லை. இன்னவாறு வாழ வேண்டும் என்ற குறிக்கோளியல் (Idealism) காட்டுவது சங்க இலக்கியம். சங்க இலக்கிய நிகழ்ச்சிகள் கற்பனையால் விரிக்கத் தக்கனவாகக் காணப்பெறும். ஆயினும், அவை மரபு மீறாமல் ஒரு நெறிக்குள் அடங்கிச் செல்லும். இவ்வாறு அக இலக்கியம் குறிக்கோளுடன் இயங்கி நன்முடிவையே பயனாக அறிவிக்கின்றது.

**திருமணம்**

திருமணம் என்பது ஒரு இன்றிமையாத நிகழ்ச்சி. தனிமனிதனைச் சமுதாய உறுப்பினராகவும் குடும்பதைத்தைச் சமுதாயத்தின் அடிப்படை அலகாகவும் ஏற்றுக்கொள்வதற்குத் திருமண உறவுமுறை இன்றியமையதாகக் கருதப்படுகிறது. காதலில் ஈடுபட்டவர்கள் அதனை இல்லையென்று மறுத்த நிலையில் கரணம் தோன்றியது இதனை,

> **“பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்**
> **ஐயர் யாத்தனர் கரணம் என்ப”**[6]

என்கிறார் தொல்காப்பியர். ‘களவு நெறியில் ஒழுகியவன் தனக்கும் அவளுக்கும் தொடர்பில்லை என்று கூறிவிட்டால் கற்பும் இல்லை, கரணமும் இல்லை. ஆகவே களவு முறையில் தோன்றும் பொய்யையும் வழுவையும் கரணம் தடுக்கும். அதனால் தடுப்பதற்காகவே கரணத்தை அமைத்தனர் சான்றோர். களவு நெறிப்பட்ட காதலர்கள் ஊரில் இருப்பினும் அல்லது உடன்போக்கு முறையில் ஊரை விட்டுச் சென்றாலும்

‘வரைவு’ என்ற நிலைக்கு உட்பட்டு கணவன் மனைவி என்று பலர் வெளிப்படையாகச் சொல்லும் நிலையை திருமண ஒழுக்கமாகக் கொண்டனர். தலைமக்கள் இல்லறம் தொடங்குமுன் நடைபெறும் திருமணச்சடங்குகளைத் தொல்காப்பியனார் கரணம் என்று குறிப்பர்.

**“கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**
**புணர்ந்துடன் போகிய காலை யானே”**[7]

என்று தொல்காப்பியர் திருமணம் தாய், தந்தை மற்றும் உறவினர் இல்லாமல் உடன்போக்கு நிலையிலும் நடைபெறும் என்பதைக் குறிப்பிடுகிறார். ஆண்டுக்கு ஒருமுறை வேங்கை பூக்கின்ற காலமும் திங்களைச் சுற்றி ஒளிவட்டம் சூழும் காலமும் திருமணம் செய்தவற்குரிய காலமாகக் கருதினர் என்பதை,

**“வேங்கை விரிவு இடம்நோக்கி**
**வீங்கு இறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே”**[8]

தமிழர்கள் திங்களும் உரோகினியும் கூடிய நன்னாளில் திருமணம் நடத்தினர். வைகறைப் பொழுதில் மணவினை நிகழ்த்தினர். இதனை,

**“கனை இருள் அகன்ற கவின்பெறு காலை**
**கோள் கால் நீங்கிய கொடு வெண்திங்கள்**
**கோடு இல்விழும் புகழ்நான் தலைவந்தென”**[9]

**“வேங்கையும் ஒள் இணர் விரிந்தன**
**நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே”**[10]

என்ற பாடலடிகள் இவ்வுண்மையைப் புலப்படுத்

என்கிறது கலித்தொகை. அருந்ததி என்பவள் அனைவரும் வணங்கி வாழ்த்தும்படியான கற்பினையுடையவள். அதனால் திருமணம் முடித்து அருந்ததி பார்க்கும் தலைவி கற்புக்கரசியாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி இச்சடங்கு நடைபெறுகிறது. அக்கால மக்கள் வீர விளையாட்டுக்களை நிகழ்த்தி வென்றவனுக்குத் தன் மகளைக் கொடுத்துத் திருமணம் செய்து வைத்தனர். இதனை,

**“அவ்வழி முழக்கு எனஇடி எனசமத்து ஆர்ப்ப**
**வழக்கு மாறுகொண்டு வருபு வருபு ஈண்டி**
**நறையொடு துகள் எழ நல்லவர் அணி நிற்ப”**[11]

என்கிறது. இப்பாடலில் ஆயர்களில் காளையைத் தழுவி அடக்கியவனுக்கு இவள் உரியவள் என்ற குறிக்கொளுடன் வளர்ந்துவரும் காளையைத் தழுவி அவற்றுக்குப் பரிசுப்பொருளாகிய ஆயர் மகளிரை மணப்பதற்குத் துணிவு கொண்டனர். அதனால் ஏறுதழுவுதற்குரிய இடத்தில் இளைஞர் கூட்டம் அதிகமாக இருந்தது. மேலும் திருமணக் காலத்தில் வீட்டின் முன்பு புதுமணல் பரப்பல் அந்தணர் திருமணத்தில் முறைகள் வேதம் ஓதித்தீயை வலம்வருதல் போன்றச் சடங்கு முறைகள் செய்யப்பட்டன. சங்ககாலத்தில் திருமணம் நடைபெறுதவற்கு முன்பு முல்லைப்பூச் சூடுவது பண்பாட்டிற்கு எதிரானதாகக் கருதப்பட்டது. இதனை,

**“கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாம் கண்டாய்நம்**
**புல்லினத்து ஆயர் மகன் சூழ வந்தது ஓர்**
**முல்லை ஒரு காமமும் கண்ணியும் மெல்லியால்”**[12]

என்கிறது. இப்பாடலில் தலைவன் கொடுத்த மாலையைத் தலைவி கூந்தலில் சூடிக் கொண்டாள். தலையில் வெண்ணெய் தடவ வந்த செவிலி கூந்தலை விரித்த போது முல்லை மாலைக் கீழே விழுந்தது. அதனால் அவள் நடுங்கினாள். அதாவது திருமணமானப் பெண்கள் முல்லைப்பூச் சூடுவதும் திருமணமாகாதப் பெண்கள் வேறுப் பூக்களைச் சூடுவதும் அக்கால மரபாக இருந்துள்ளது. ‘‘அகத்துறையின் வேர் காதல், அது களவில் அரும்பும் கூடலில் மொட்டாகும் கற்பில் மலரும் இல்லறத்தில் மணம் பரப்பும் மக்கட்செல்வம் என்னும் கனி குலுங்க நிறைவு பெறும்’’ என்கிறார் பேராசிரியர் அன்பழகன். இவரின் கூற்றிற்கு ஏற்ப ஆண், பெண்ணின் வாழ்க்கை காதலில் அரும்பி, திருமணத்தில் இணைந்து குழந்தைப் பெற்ற பின்னர் நிறைவு பெறுகிறது. மனித வாழ்க்கையின் அங்கமாக அமைவது திருமணம். அதனால் தான் களவு வாழ்க்கையிலிருந்து திருமண உறவான கற்பு நிலைக்கு வர விரும்புகின்றனர் தலைமக்கள்.

கணவனும் மனைவியும் காதலால் கூடுதல் வேண்டும். காதலால் கூடிய ஆடவரும் மகளிரும் கணவன் மனைவியாக இணைந்து என்றென்றும் வாழ வேண்டும். மறைவாகக் காதல் பூண்டு ஒழுகி மகளிர் நலம் துய்த்து விட்டப் பின்னர் மகளிரைக் கைவிடும் ஆடவரும் இருந்திருப்பர். ஒருத்தியை மட்டுமின்றி ஆசை வார்த்தைகளைக் கூறி வேறு பல பெண்களுடனும் களவு கொள்ளத் துவங்கியபோது ஆடவர்க்கெல்லாம் பொய்யும் வழுவும் நிகழாமல் தடுத்தற்பொருட்டும் காதலிப்போர், பலரும் அறியக் கடிமணம் புரிய வேண்டும் என்ற விதியினைப் பழங்கால முன்னோர் விதித்தனர்.

**“உழுந்து தலைபெய்த கொழுங்களி மிதவை**

**பெருஞ் சோற்றமலை நிற்ப நிரைகால்”**[13]

இதில் திருமண முறையாக, திங்களும் உரோகிணியும் கூடிய நல்ல நாளில் திருமணம் நிகழ்ந்தது. வைகறைப் பொழுதில் மணவினை நடந்தது. பந்தலமைத்துப் புது மணல் பரப்பினர். விளக்குகளை ஏற்றினர். மாலைகளைத் தொங்கவிட்டு இல்லத்தை அழகுபடுத்தினர். உழுந்து பெய்த கொழுந்துவை அடிசில் கொடுக்கப்பட்டது போன்ற செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**“மைப்புறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு**

**வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி”**[14]

என்ற அகநானூற்றுப் பாடலில் மணவினைச் சடங்கின்போது வெண்ணூலில் வாகை இலையையும், அறுகம் புல்லையும் சேர்த்துக் கட்டி காப்பாகப் பெண்ணுக்கு அணிவித்ததையும் தூய உடை உடுத்தியதையும் போன்ற செய்திகளைத் தருகின்றது. மேலும் சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் மணம் மாமுது பார்ப்பான் மறைவழி காட்ட நடந்ததும், மணமக்கள் தீவலம் வந்ததையும் அறியலாம். நாச்சியார் திருமொழியில் தன் மனம் குறித்துக் கண்ட கனவினை எடுத்துரைக்கையில் மணச் சடங்குகள் பல குறிப்பிடுகின்றன. அன்புடன் கூடிய களவு வாழ்க்கையில் தலை மக்களிடையே பொய், வழு தோன்றியபிறகு பெரியோர்கள் முன்பாகச் சடங்குகளுடன் கூடிய மன்றல் விழா நடைபெறுவதை,

**“கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே”**[15]

இவ்வாறு திருமணம் நடக்கின்ற தலைமக்களுக்கு மனம் ஒத்த அன்புமட்டுமின்றி குணநலன்கள் ஒத்திருக்க வேண்டும்.

**“பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டோடு**
**உருவு நிறுத்த காம வாயில்**
**நிறை அருள் உணர்வு திருவுஎன”**[16]

என எடுத்துக்காட்டுகின்றார். பெண்களுக்கு இன்றியமைாத பண்பு கற்பு. இது தொல்காப்பியர் காலம் முதல் சொல்லப்பட்டு வருகின்றது. ‘‘கற்பு’’ என்ற சொல்லின் பொருள் காலம் தோறும் மாறுபட்டு வந்துள்ளது. தொல்காப்பியர் திருமணச் சடங்கைக் கற்பு எனக் குறிப்பிடுகின்றார். அச்சம், நாணம், மடம் ஆகிய பண்புகளுடன் இல்லறக் கடமைகளில் சிறந்து விளங்குவதே சிறந்த கற்புடைமை என்ற கருத்து தொல்காபயிர் காலத்திற்குப்பின் ஏற்பட்டது. தன் கணவனைத் தவிர பிற ஆடவனை மனத்தாலும் எண்ணாத தன்மை கற்பு எனப்பட்டது. இம்மணுலகில் மனிதன் மனிதனாக வாழ்வதுதான் உண்மையான வாழ்க்கை. ‘அறம் செய்ய விரும்பு’ என்று அறம் கூறத் தொடங்கிய ஔவையார். நமக்கு விட்டுச் சென்ற சொத்துக்கள் பல சங்க இலக்கியப் பாடல்களில் நீதி இலக்கியங்களிலும் நற்பண்புகள் கல்வி, அறஞ்செய்தல், போர்ந்நெறி, மன்னின் சிறப்பு. நட்பின் சிறப்பு, மகளிர் நிலை, திருமணமுறை, வேந்தர்களின் ஒருமைப்பாடு, ஒழுக்கம், கொடை, நிலையாமை, கல்வி ஆகியன ஔவையார் சுட்டும் வாழ்வியல் நெறிகளாக அமைகின்றன.

தலைவன் தலைவியரால் தனிமையில் கூடும் களவு மணம் பெரியோர்களால் ஆதரிக்கப்பட்ட முடிவே திருமணமாகும்.

**“இருவேம் ஆய்ந்த மன்றல் இதுஎன**
**நாம்அறிவு றாதலின் பழியும் உண்டோ”**[17]

என்னும் பாடல் பழிப்பின் தன்மையது என்று சொல்கிறாள் தலைவி.

**“விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்**
**அருநெறி ஆயர் மகளிர்க்கு**
**இருமணம் கூடுதல் இல்இயல்பு அன்றே?”**[18]

**"மாமயில் அன்னார், மறைமயில் புணர்மைந்தர்,**
**காமம் களவிட்டு, கைகொள்ற்பு உற்றென**
**மல்லல் புனல் வையை மாமலை விட்டுஇருத்தல்**
**இல்லத்து நீதனிச் சேறல் இளிவரல்"[19]**

என்னும் பாடல்களில் மகளிர்க்க ஒரு மணத்தைத் தவிர இருமணம் நேருவதில்லை. ஆயினும் தமிழர் இல்லங்களில் பெண்கள் ஒரே ஆடவணை மணந்தனர் என்பது புலனாகிறது. நதி புறப்படுவது யாருக்கும் புலப்படாது, அது கடலை நாடி பாயும் அதுபோல் மகளிரின் கற்பு ஒழுக்கம் ஆடவனை நாடி மணமுடிக்கச் செய்வது அக்காலம் முதல் இன்றுவரை திருமணம் நிகழ்வாக காணமுடிகிறது.

**குடும்பம்**

மலையில் பிறந்த சந்தனமும், நீருள் பிறந்த முத்தும், யாழில் பிறந்த இசையும் அவற்றைப் போற்றுவோர்க்குப் பயன்படுவது போல பெண்கள் எப்பொழுதும் தாங்கள் புகும் இடத்திலேயே பெருமதிப்புடன் குடும்பம் நடத்துவர். குடும்ப பெண்களுக்கு ஆண்களின் அன்பும் ஆதரவும் அவர்களுக்கு பேரரண்களாகவும், உயிராகவும் அமைவதை,

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"[20] (குறுந்: 135 – 1 – 2)**

**"ஒண்சுடர் பாண்டிற் செஞ்சுடர் போல**
**மனைக்கு விளக்கு ஆயினள் மன்ற"[21] (ஐங் 405: 1 – 2)**

குடும்ப பெண்கள் அன்பு, ஒழுக்கம், கற்பு, பொறை, விருந்தோம்பல், சுற்றத்தை உபசரித்தல் முதலிய குணங்களைப் பெற்றவளாக இருப்பதை,

**"அன்பும், மடனும், சாயலும் இயல்பும்**
**என்பு நெகிழ்க்கும் கிளவியும், பிறவும்,**
**ஒன்றுபடு கொள்கை யொடு" [22] (அகம் 225: 1 – 3)**

**மக்கட்பேறு**

குடும்ப வாழ்க்கையில் சிறந்த பேறாக உள்ளது அறிவறிந்த மக்கட்பேறாகும். செல்வம் அனைத்திலும் சிறந்தது மக்கட்பேறாகும். மக்களைப் பெறாதவர் வாழ்க்கை சிறப்பதில்லை. முழலைப்பேச்சும், தளர் நடையும் அவர்கள் உண்ட சோற்றை நாம் உண்ணும் போது கிடைக்கும் இன்பம் எல்லையற்றதாகும்.

**“படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்**
**உடைப் பெருஞ்செல்வர் ஆயினும் இடைபடக்**
**குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லை தாம்வாழு நாளே”[23] (புறம்: 188)**

தங்கள் குடிப்பிறந்த முன்னோர்களுக்கு நீர்க்கடன் அளித்து நற்கதியளிப்பவர் புதல்வர்களே ஆவர். இதனை,

**“அருங்கடன் இறுத்த செருப்புகல் முன்ப”[24]**

**“தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**போன்போல் புதல்வர்ப் பெறா அதீரும்”[25]**

செவிலி தலைவியை அரவணைத்து வளர்த்ததோடு மட்டுமல்லாமல் தலைவியின் குழந்தையையும் அரவணைத்து அன்புகாட்டி வளர்க்கும் நிலையினையும் கீழ்வரும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**“வெறிஉற விரிந்த அறுவை மெல்அணைப்**
**புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச**
**ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்**
**பசுநெய் கூர்த்த மென்மை யாக்கைச்**
**சீர்க்கெடுமடந்தை ஈர் இமை பொருத்த”[26]**

இப்பாடலில் நறுமணம் உண்டாக விரிந்திருந்த நூலாடையுடைய மெல்லிய படுக்கையில் அண்மையிற் பிறந்த புதல்வன் செவிலி அருகில் உறங்குகிறான். சிறப்பு மிக்க தலைவி வெண்சிறு கடுகு அணிந்த நெய்யாட்டு நிறைவேறிய அண்மைக்காலத்தில் பசிய நெய் விளக்கும் மெல்லிய உடம்போடு இரு இமைகளும் பொருந்தத் தூங்கிக் கிடந்தான் என்று தலைவியின் மகன் செவிலித்தாய் அருகில் உறங்கியதாகக் கூறப்படுகின்றது

**வாயில் மரபு**

வாயில்களாகத் தோன்றுபவர்கள் தலைவன் தலைவியிடத்தேயின்றி தமக்குள் உரையாடிக் கொள்ளும் பொழுதும் அவர்களைப் பற்றிக் குறைகூறாமல் நிறை கூறுமாறு வேண்டும். தலைவன் ஒருவன் தலைவியை விட்டுப் பரத்தையை நாடிச் சென்றான். பின்னர் வீட்டிற்கு வருமுன்னர்த் தலைவியின் ஊடலை நீக்கப் பாணனை அனுப்புகிறான். தோழி வாயில் மறுக்கிறாள்.

**"யாரினும் இனியன் பேரன் பினனே**
**உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்**
**சூல்முதிர் பேடைக்கு ஈன்இல் இழை இயர்**
**தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்**
**நுாறா வெண்பூக் கொழுதும்**
**யாணர் ஊரன் பாணன் வாயே"[27]**

பாணனே! உன் தலைவன் அனைவரை விடவும் நல்லவன். பேரன்பு கொண்டவன். அவன் ஊரில் குருவிக் குடும்பம் ஒன்று. பேடை அடைகாக்கும் முட்டைகள் குஞ்சு பொறிக்கும் நிலையில் உள்ளன. குஞ்சு பொறிக்க மெத்தென்ற படுக்கை வேண்டும். ஆண் குருவி படுக்கை அமைப்பதற்கான மென்மையான பொருள்களைத் தேடிப் புறப்பட்டது. மிகுந்த தொலைவு பறந்துசென்று கரும்பினது வெண்மையான, மென்மையான பூக்களைக் கோதி எடுத்துவந்தது. இத்தகைய இயற்கை நலம் மிக்க ஊரையுடைய தலைவனுடைய பாணனே என்கிறாள்.

பெண் குருவியிடம் இன்பம் துய்த்த ஆண் குருவி அது அடைக்காக்கும் போது வேறு குருவியை நாடிச் செல்லவில்லை. மாறாகக் குஞ்சு பொறிப்பதற்கான தேவைகளை நிறைவேற்றும் பொறுப்பான பணியில் ஈடுபடுகிறது. அஃறிணைக் குடும்பத்தில் உள்ள

ஆணின் கடமை உணர்வு இவ்வாறு உள்ளது. ஆனால் தலைவனோ, கருவுற்றிருக்கும் மனைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்றிருக்கிறான். குருவிக்குள்ள அன்பு அவனிடம் இல்லையே என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறாள். இயற்கை நிகழ்ச்சிகளைக் கொண்டே உள்ளுறைக் கருத்துக்கள் உணர்த்தப்படுகின்றன.

**“கரும்பு நடு பாத்திக் கலித்த தாமரை**
**சுரும்புபசி களையும் பெரும்புனல்ஊர”[28]**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலில் ‘கரும்பு நட்ட பாத்தியில் தாமரை பூத்து வண்டின் பசியைக்களையும் ஊரைச் சேர்ந்தவனே’ என்பது வெளிப்படையான பொருள். இதில் ‘தலைவிக்கு என அமைந்த இல்லற வாழ்க்கையில் பரத்தை புகுந்து தலைவனின் அன்பைப் பெறுகிறாள் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

பரத்தமை காரணமாகத் தத்தம் தலைவியர்களுக்கு ஏற்பட்ட ஊடலைத் தீர்க்க வாயிலைவிடுக்கும் உரிமை நான்கு வகை வருணத்தார்க்கும் உரியது ஆகும். பரத்தமை காரணமாக ஏற்பட்ட ஊடலைத் தீர்க்கப்பயன்படும் வாயில் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது.

### 3.2 அகவாழ்வில் தோழி

அக இலக்கியங்களில் தலைவியின் உணர்வுகளைப் பெற்றோரைவிட, மற்றோரை விட மிகச் சிறப்பாகப் புரிந்துக்கொள்ளும் பாத்திரமாகத் தோழி விளங்குகிறாள். தோழி என்பவள் செவிலியின் மகள் இது குறித்துத் தொல்காப்பியர்’ **‘தோழி தானே செவிலி மகளே’[29]** என்று செவிலியின் மகளாகத் தோழியைக்காட்டுகிறார். தோழி அக இலக்கிய முக்கோண வடிவத்தின் மேல் முனையாக விளங்குகிறாள். அவள் தலைவன் தலைவி என்ற இரு கரைகளை இணைக்கும் பாலமாகச் செயல்படுகிறாள். தோழிக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பு முந்தைய தலைமுறையிலே ஏற்பட்டதாகும் என்பது மட்டும் தெரிகிறது. தோழியின் தாயாகிய செவிலியும், தலைவியின் தாயாகிய நற்றாயும் நெருங்கிய தோழியின் தோழியராய் விளங்கியவர்கள் என்பது குறிப்பாகத் தோன்றுகிறது.

தோழியர் பலர் இருந்தனர் என்பதை இளம்பூரணரும் புலவர் குழந்தையும் கூறுகின்றனர். தோழியர் பலர் இருப்பினும் தலைவிக்கு உயிர்த்தோழிதான் தோழியாக

சிறப்பிக்கப்படுவாள் என்பதை ஆய்வினால் அறிய முடிகிறது. உலகியலில் உயிர்த்தோழன், உயிர்த்தோழி என ஒருவரையே சுட்டும் முறை தற்காலத்தும் வழங்கக் காணலாம். தோழி தலைவியோடு ஒத்த வயதுடையவள், உடன்வளர்ந்து விளையாடிப் பழகி அவளை விட்டுப் பிரியாதவள். உணர்வாலும் ஒத்தவள், ஒன்றித் தோன்றுந்தோழி எனத் தொல்காப்பியர் கூறுகிறார். இதன்மூலம் தோழியும், தலைவியும் தொட்டில் தொட்ட இப்பிணைப்புக் கருதி இவ்வாறு கூறியுள்ளதாக ஆய்வினால் உய்த்துணர முடிகிறது. வருத்தம் நேர்ந்த போது ஆறுதல் கூறுபவள். களவுக்காலத்திலும் தலைவியின் துணையாக இருப்பவள். தலைவனுக்கும், தலைவிக்கும் ஏற்றவிடத்தில் தன் தகுதிக்கு உட்பட்டு அறநெறி கூறுபவள். தலைவன் தலைவிக்கு இடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்கும் வாயிலாகவும் இருப்பவள். தலைவியின் இன்னொரு கண்ணாக அமைந்திருக்கிறாள். நேர்மை, கண்டிப்பு, கனிவு, அமைதி ஆகிய குணங்கள் தோழிக்கு இயல்பாக அமைந்துள்ளன.

காதலர்கள் உணர்ச்சி, மாந்தர்கள் உணர்ச்சியில் விளையும் அகப்போராட்டங்களையும், மோதல்களையும் உள்ளவாறு அறியும் அறிவுப் பாத்திரம் தோழியாவாள். வரம்பு கடந்து செல்லும் தலைவனை இடித்துரைத்தும் தனிமை தாங்காத தலைவியை ஆற்றியிருக்க அறிவுறுத்தலும் செய்யும் ஒளிவீசும் ஆசான் பாத்திரமாகத் தோழி விளங்குகிறாள். தலைவிக்கு மனக்கசப்பு தோன்றும் வேளையில் ஏற்ற அறிவுரையாகிய ஊட்டச்சத்தளித்து மன நோய்களைக் களைந்திடும் மருத்துவப் பாத்திரமாகவும் தோழி தொண்டாற்றுகிறாள்.

அகப்பொருள் பற்றிய பாடல்களில் வரும் அகமாந்தருள் பெரும் பொறுப்பு உடையவள் தோழி. அவள் அறிவும், பண்பும், திறனும் மிக்கவளாக இருந்தால் தான் தலைவனுக்கும், தலைவிக்கும் தக்க வழிகாட்டி அவர்களை நன்னெறிப்படுத்துதல் இயலும். உலகியல் தெளிவும் இருந்ததால் தான் காதல் நெறியில் நேரும் இடர்ப்பாடுகளை அறிந்து உற்ற துணையாக இருந்து வர இயலும். இத்தகையவள் தோழி என்பதை சங்கப்பாடல்களில் வழி அறிய முடிகிறது.

**“புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துஞ்**
**சொலத்தகு கிளவி தோழிக்குரிய”[30]**

இதற்கு ஒப்பாக,

**"அலந்தாரை யல்லல் நோய் செய்தாற்றல் தம்மைப்**
**புலந்தாரைப் புல்லா விடல்"[31]**

என்ற வள்ளுவரின் இக்குறளை ஒப்பிடலாம். அதாவது தம்மோடு வருத்தம் கொண்டு பிணங்கிய வரை ஊடலுக்குணர்த்தி தழுவாமல் விடுதல் துன்பத்தால் வருந்தியவரை மேலும் துன்ப நோய் செய்து வருவது போன்றதாகும். அதுபோல் தலைவன், தலைவி இருவரும் இடையில் ஊடல் தீர்க்க அழும் பொருட்டுத் தோழி செயல்படுகிறாள் என்பதை இந்நூற்பாவின் மூலம் அறிய முடிகிறது. தலைவியின் காதல் வாழ்வு வெற்றி பெறவும் அதை நிலை நிறுத்தவும் தன் அறிவையும் செயலாற்றலையும் கருவியாகக் கொள்கிறாள் தோழி. அதனால் தொல்காப்பியரும் அவளை அறிவுடையவளாகக் காட்டுகிறார். அவளுடைய சொல்லாற்றலால் தலைவன், தலைவி தாயார் முதலியவர்களைத் தன் சொல்வழி ஒழுகச்செய்யும் திறன் பெற்றவளாகிறாள். அவள் பேசும் சொற்களில் கேட்டார்ப் பிணிக்கும் தகைமையும், வருந்தாமல் திருத்தும் பண்பும் புலப்படும்.

உள்ளுறை வைத்துத் தோழி திறம்படச் செயலாற்றுபவள் என்பதனைச் சங்கப்பாடல்களில் தோழி கூற்றுக்கள் வழி அறியலாம். தலைவனின் செயல்கள் அனைத்தும் தோழியால் ஐயக்கண் கொண்டே பார்க்கப்படுகிறது. தலைவன் தலைவியைத் திருமணம் செய்துக் கொள்ள வேண்டும் என்று தோழியிடம் உறுதியளிப்பதும் பின் திருமணத்தைத் தள்ளிப்போட்டுக்கொண்டு செல்வதும் ஐயத்தை உறுதியளிப்பதாக உள்ளது. இதனால் தோழி தலைவியின் இரங்கத்தக்க நிலையை எண்ணி வருந்துகிறாள். மனதில் களிப்புடன் சொல்லில் கடுமையை வெளியிடும் சொற்களைச் செங்கடுமொழி என்பர். தலைவியின் மனத்தை நல்ல நினைவுகளில் திருப்புவதற்குத் தோழி கையாண்ட அரிய உளவியல் முறை இயற்பழித்து மொழிதலாகும். தலைவனின் இயல்புகளைப் பழித்தலே இயற்பழித்தலாகும்.

**"நெடிய மொழிதலுங் கடிய ஊர்தலும்**
**செல்வமன்று தன் செய்வினைப் பயனெனச்**
**சொல்லுப என்ப சான்றோர் நேர்ந்தோர்**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கண் செல்வம் என்பதுவே"[32]**

என்ற பாடலில் தலைவன் தலைவியோடு அன்போடு வாழ்வதே பெரிய செல்வமாகும் என்று தலைவனுக்கு அறிவுரை கூறுவதிலிருந்து தோழியின் மரபார்ந்த பண்பை அறிந்துக்கொள் முடிகிறது.

**செவிலியின் மரபுகள்**

தொல்காப்பியர் களவியல், கற்பியல் ஆகிய இரு இயல்களில் செவிலியின் சிறப்பியல்புகளை எடுத்துரைக்கின்றார்.

> **"ஆய்பெருஞ்சிறப்பின் அருமறை கிளத்தலின்**
> **தாயெனப்படுவாள் செவிலியாகும்"[33]**

என்கிறார். நல்ல பெரிய சிறப்பினையுடைய அறிதற்குரிய மறைப்பொருள் யாவற்றையும் கூறும் கட்டுப்பாடு உடையவளாதலின் தாய் எனப்படுவாள் செவிலி என்று கூறுகின்றார். தலைவன் தலைவியின் ஒழுகலாறு அயலாருக்குப் புலனாகி அவர் தூற்றப்பட்டவிடத்தும் தலைவிமாட்டு உள்ளதாகிய வேட்கை அளவிற்கு அதிகமாக இருக்கும் பொழுதும் புணர்ச்சியால் தலைவியின் உடல் மாறுபாடு அடைந்துவிடத்தும், தலைவனோடு தலைப்பெய்து காணினும், கட்டு வைப்பித்த வழியும், செவிலியும், நற்றாயும் தலைவியின் நிலை கண்டு வெறியாட்டு மேற்கொண்ட செவிலியும், நற்றாயும் தலைவியின் நிலைக்கண்டு வெறியாட்டு மேற்கொண்ட பொழுதும், காதல் மிகுதியால் தலைவனை எண்ணிக் கனவின்கண் அரற்று தற்கண்ணும், இவை நிமித்தமாகத் தோழியை வினாதலும், தெய்வத்தை வேண்டியும், தலைவன் வரையாது பிரிந்தவழி ஒழிந்த தலைமகள் அலராடுதலும் இன்றி, வேறுபாடும் இன்றி, ஒரு மனப்பட்டிருந்த உள்ளக் கருத்தை அறிந்த வழியும், தலைவன் குடிமை தன் குடிமையோடு ஒக்குமென அறைதற் கண்ணும் என்று இவ்வாறாக பதின்மூன்று நிலைகளில் செவிலி கூற்று நிகழும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

> **"கிழவோன் அறியா அறிவினள் இவளென**
> **மையாறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்**
> **ஐயக்கிழவியின் அறிதலும் உரித்தே"[34].**

என்று நற்றாய் - செவிலித்தாய் பற்றித் தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார். நற்றாய் களவொழுக்கம் அறிவுறுத்தல் செவிலியோடு ஒக்கும் என்றும் எடுத்துரைக்கிறார்.

**“கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள**
**நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்**
**செவிலிக்குரிய ஆகும் என்ப”**[35]

என்பதனால் இறந்த காலத்தினும் நிகழ்காலத்தினும் எதிர்காலத்தினும் நல்லவை கூறுதலும் அல்லவை கடிதலும் செவிலிக்கு உரியவை என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர்.

**பாங்கன்**

பாங்கனின் செயலானது தன்னுடைய தோழனான தலைவனுக்கு அறிவுரை கூறுவதே முதற்கண் நோக்கமாகும். காமத்தால் நாண் இழந்து நிற்கின்ற தலைவனை அவர்தம் பாங்கர் கடிந்து, அதனைப் பாராட்டாது இருக்குமாறு அறிவுரை கூறுவது உண்டு. தலைவன் பாங்கனின் அறிவுரையை கேட்டு எதிர்மொழிவதும் உண்டு. இதனை,

**“காமம் காமம்; என்ப; காமம்**
**அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்**
**கடுத்தலும் தணிதலும் இன்றே யானை**
**பாணியும் உடைத்து, அது காணுநர் பெறினே”**[36]

**“நயனும் நண்பும் நாணுநன் உடைமையும்**
**பயனும் பண்பும் பாடு அறிந்து ஒழுகலும்**
**நும்மினும் அறிகுவென் மன்னே**
**-------------------------------------------------------------**
**ஆரிமதர் மழைக்கண் காணா ஊங்கே”**[37]

**சான்றோர்**

சான்றோர் கல்வி கேள்விகளிற் சிறந்து என்றும் அமைதியானக் கொள்கைகளை உடையவர்களாவர். அன்புடைய உள்ளம், அருள் நிறைந்த செய்கை உடையவரும், நல்ல நெறிகளையே வகுத்துக் காட்டுவர். தீமை நேராவண்ணம் நன்மை மட்டுமே புரிபவர். பிற உயிர்களையெல்லாம் காக்கும் பேரருள் உள்ளம் படைத்தவரே சான்றோர்.

பெரியோர்களாக நின்று பழியை நீக்கி புகழ்வர எல்லோருக்கும் நல்வழிக்காட்டி பாதுகாப்பது இவர்களின் சிறந்த ஒழுக்கமாகும்.

**"பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது**
**குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்**
**வழிவழிச் சிறக்க, நின்வலம்படு கொற்றம்"[38]**

**அறத்தொடு நிற்றல்**

தலைவியின் செயல்பாடுகளில் மாற்றத்தினைத் தமது நுண்ணுனர்வினால் அறிந்த செவிலித்தாய் நற்றாயிடம் அறத்தொடு நிற்கின்றாள்.

**"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு**
**தொல்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய**
**நால்ஊர்க் கோசர் நல்மொழி போல**
**வாய்ஆ கின்றே தோழி ஆய்கழல்**
**செயலை வெள்வேல் விடலையொடு**
**தொடுவளை முன்கை மடந்தை நட்பே"[39]**

இப்பாடலில் தலைவி உடன்போக்கு போன பிறகு தோழி செவிலித்தாயிடம் அறத்தொடு நிற்கின்றாள். பிறகு செவிலித்தாய் நற்றாயிடம் அறத்தொடு நிற்கின்றாள்.

**இற்செறிப்பு**

தலைவி தலைவனோடு களவொழுக்கம் புரிதலை அறிந்த செவிலி தலைவியை மறைமுகமாக இற்செறிக்கின்றாள். ஊரில் அலர் தூற்றப்படுவதாலும் தலைவியிடத்து காண்பதாலும் இந்நிகழ்வினைச் செவிலி செய்விக்கின்றாள்.

**"அன்னையு மறிந்தன அலரும் ஆயிற்று**
**நன்மனை நெடுநகர் புலம்பகொள உறுதரும்"[40]**

என்ற இப்பாடலில் எங்கள் தாயும் நமது களவொழுக்கத்தை அறிந்துக்கொண்டாள். ஊர் முழுவதும் பழிச்சொல்லும் பரவுகிறது. இதுகாறும் இன்பமாக இருந்த எங்கள் வீடும்,

நாங்களும் தனிமைத் துயரத்தை அனுபவிக்க ஏற்றதாகிவிட்டது என்று தலைவி தலைவனிடம் புலம்புகின்றாள்.

**“புன்னை ஓங்கிய துறைவனோடு அன்னை**
**தான் அறிந்தன்றோ இலளே பானாள**
**சேரிஅம் பெண்டிர் சிறுசொல் நம்பி**
**கடுவான் போல நோக்கும்**
**அடுபால் அன்னஎன் பசலை மெய்யே”[41]**

என்ற பாடலில் தலைவனோடு கொண்ட உறவை இதுவரை அன்னை அறியவில்லையெனினும் பாதிநாள் இரவில் சேரியின் அழகிய பெண்டிர் சிறுசொல்லாகிய அலரை நம்பிக் காய்ச்சிய பால் போன்ற என் பசலை படர்ந்த உடலைச் சுடுதல் போல அவள் நோக்குவாள். இவ்வாறு அலர் காரணமாகவும், பசலைக் காரணமாகவும், தாய் தலைவியின் களவினை உணர்கின்றாள் என்பது கூறப்படுகின்றது.

**வெறியாட்டு**

தலைவி தினைபுனம்காக்கச் செல்கின்றாள். சென்ற இடத்தில் தலைவனுடன் நட்பு ஏற்பட்டு பின்னர் களவு நிகழ்கின்றது. ஆனால் தாய் சென்ற இடத்தில் தலைவிக்கு அணங்கு ஏறப்பெற்றாள் என்று எண்ணி வேலனை அழைத்து வெறியாட்டு நடத்துகின்றாள்.

**“----- தோழி வேறு உணர்ந்து**
**அணங்கு அறி கழங்கின் கோட்டம் காட்டி**
**வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறிஅறுத்து**
**பொன்நேர் பசலைக்கு உதவா யாறே”[42]**

**இடந்தலைப்பாடு**

தலைவன் - தலைவி என்ற இருவர் தற்செயலாக ஓர் இடத்தில் ஒரு நாள் சந்தித்து உள்ளம் புணர்ந்த நிலையில் வேட்கை பெருகி, முதல் நாள் கண்டவிடத்தே மீண்டும் காண்பதே இடந்தலைப்பாடு. தலைவன் பகற்பொழுதில் ஊர் எல்லையில் தலைவியைச் சந்தித்து மகிழ்தல் பகற்கூட்டமாகும். இரவுநேரத்தில் மனைக்கு அண்மையில் சந்தித்து மகிழ்தல் இரவுக்கூட்டமாகும்.

**"குறி எனப்படுவது இரவினும் பகலினும்**

**அறியக் கிளந்த ஆற்றது என்ப"[43]**

காதல்வலியே வழியாகக் கொண்டு தலைவன்வரினும் தோழிக்கு அது நல்வரவாகாது. இங்குவருக என்று இடம்மாற்றிக் குறித்திடுவாள். இந்நிலை நம்பார்வைக்குத் தலைவனை அலையவைத்து, அலைக்கழிப்பு செய்வதுபோல் தோன்றும். ஆனால் நாள் நீடிக்காமல் தலைவன், தலைவியை மணக்க வேண்டும் என்பதற்கே பொறுப்புடன் தலைவிமேல் பற்றுடையவளாய் தோழி உரைப்பாள். இலக்கியங்கள் போன்றவற்றில் குறிப்பிடும் திருமண முறைகள் இன்றைக்கும் நடைபெறும் திருமண முறைகளோடு ஒத்துப் போவதை அறியலாம். சடங்கு என்பது காலந்தோறும் மாறுபட்டாலும் ஒத்த தலைவியும் தலைவனும் சேர்ந்து வாழ்வதற்குக் கரணம் என்ற சடங்கு தேவை என்பதைத் தொல்காப்பியர் வலியுறுத்தியுள்ளார்.

**உடன்போக்கு**

தலைவன் தலைவி ஆகிய இரு குடும்பத்தார்களும் திருமணத்திற்கு உடன்படாதபோது உடன்போக்கு நிகழும். உடன்போகிய தலைவியை நினைந்து மனையிலிருந்து புலம்புதல் தாய்க்குரியதாகவும் மனையிலிருந்து புலம்புதல் மட்டுமின்றிப் பின்சென்று தேடுதல் செவிலிக்குரியதாகவும் அமைகின்றன.

**"ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்**

**தாமே செல்லும் தாயரும் உளரே"[44]**

நற்றாய் செவிலி இருவரது செயல்களும் உணர்வால் ஒன்றுபட்ட படைப்பில் செயலால் வேறுபடும் தொல்காப்பியர் தாயர் எனப் பன்மைப்படுத்திக் கூறியமை மனைப்புறத்துச் சென்று தேடிய தாயைச் செவிலி எனப் பாகுபடுத்தக் காரணமாய் இருந்திருக்கலாம். வீதிகளில் சென்று தேடியவன் செவிலி, இருந்து புலம்பியவள் தாய் என்று விளக்கம் தருகின்றனர். தலைவன் தலைவியிடம் பொய் சொல்லியும் பாராட்டியும் மயக்கிக் கொண்டு சென்றுள்ளான் என்று தாய் கூறுகின்றாள். தலைவனைப் பொய்யன் என்றே கூறுவதைக் காணமுடிகிறது.

**“வில்லோன் காலன கழலே தொடியோள்**
**மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்**
**யார்கொ லளியர் தாமே யாரியர்**
**கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி**
**வாகை வெண்ணெற் றொலிக்கும்**
**வேய்பயி லழுவ முன்னி யோரே”**[45]

என்று செவிலித்தாய் தலைவி தலைவனின் பொய்யுரைகளையும் இன்சொல்லினையும் நம்பிப் பாலை வழியில் சென்று விட்டாள் என்று தலைவனை இடித்துரைத்துத் தலைவியின் எதிர்கால வாழ்வினை எண்ணி வருந்தும் நிலையை அறிய முடிகிறது. செவிலியது மகள் தோழியாவாள். இதனை தொல்காப்பியர், செவிலி தலைவியின் வளர்ப்புத் தாயாகவும் நிகழ்கிறாள். தோழி – செவிலி ஆகியோரின் சொந்த வாழ்வியல் நிகழ்வுகள் இலக்கியத்தில் இடம் பெறாமல் உள்ளது. தலைவிக்கு அமைந்த தோழியைப் போன்றே நற்றாய்க்குத் தோழியாகச் செவிலி படைக்கப்பட்டுள்ளாள். செவிலியின் கணவனைப் பற்றிய குறிப்புகள் ஏதும் இடம்பெறவில்லை. தலைவிக்குள்ள உரிமைகள் அனைத்தும் தோழிக்குத் தருவதைப் போன்று நற்றாய்க்குள்ள உரிமைகள் அனைத்தும் செவிலிக்கும் வழங்கப்படுகின்றன. ஒரு குடும்பத்தில் பிறந்த இருதலைமுறையினர் தலைமக்கள் வாழ்வில் பெரும்பங்கு கொண்டு அவர்களுக்காகத் தொண்டாற்றும் சிறப்பைப் பெறுகின்றனர். அவர்கள் செவிலியும் தோழியும் ஆவார்.

**“அரிநகைக் கூந்தல் செம்முது செவிலியர்**
**புரிமெலிந் தொழியச் பந்தர் ஓடி**
**ஏவல் மறுக்கும் சிறுவிளையாட்டி”**[46]

என்ற பாடலில் தோழியை எவ்வாறெல்லாம் செவிலித்தாய் வளர்த்தாள் என்னும் குறிப்பு இல்லை. செவிலி தலைவியின் நலனில் அக்கறைக்கொண்டு அவளின் வாழ்வுக்காகவே வாழ்ந்த இயல்பினளாக விளங்குகிறாள். தலைவியின் களவினைத் தோழி கூறுவதற்கு முன்பு செவிலித்தாய் தமது நுண்ணறிவினால் அறிந்துக் கொள்ளும் மனநிலை கொண்டவளாக இருப்பதனை அறிய முடிகிறது. பின்னர் இற்செறிப்பின் மூலம் செவிலி தமது குலப்பெருமையும், குடிப்பெருமையும் காக்கும் கடமை உணர்வு மிக்கவளாக் காணப்படுகிறாள். வெறியாட்டு பற்றிய செயல்களைக் காணும் போது தலைவி மீது கொண்டுள்ள பாச உணர்வை செவிலி வெளிப்படுத்துகிறாள். தலைவி உடன்போக்குச்

சென்ற பிறகு செவிலி நற்றாயிடம் அறத்தொடு நின்று தமரின் உடன்பாட்டுடன் நாடறிய நல்மணம் செய்விக்க விழைகின்றாள். இவற்றால் செவிலியின் மனஉணர்வும், கடமையுணர்வும், பொறுப்புணர்வும் வெளிப்படுவதனை அறிய முடிகிறது.

**காமம்**

காமம் என்பது அன்பின் முதிர்ந்தநிலை, சாதாரணமாக நிகழும் அன்பே காமம் என்பர். **"காமம் கலந்த காதல் உண்டு எனின் நன்றுமன்"**[47] என்பதனால் காமம் கலந்து பெருகி முதிர்ந்த நிலையில் அது காதலாக விளைகிறது. இது இருவர்மாட்டும் மெய்யுறுப் புணர்ச்சியால் நடக்கிறதை,

**"காதற்காமம், காமத்துச் சிறந்தது**
**விருப்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி"**[48]

**"உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று எனத்**
**தொல்லோர்க் கிளவி"**[49]

காதலன் மறைவில் வந்து தலைவியிடத்தில் அன்பு செய்தாலும் அது இடையுறுபடுதலினால் மேனி பசலையடைந்து நாணம் மிக்க காமவுணர்ச்சியின் எல்லையைக் காண வேண்டியதை உணரமுடிகிறது.

**காதல் நெறி**

இயற்கை நெறியில் தலைவனும் தலைவியும் தனித்து வாழ்தல் என்பது இயலாது. மக்களினப் பெருக்கம் ஆடவரும் பெண்டிரும், கணவனும் மனைவியும் இணைந்து வாழ்தலைச் சார்ந்தது. தனித்து வாழ்ந்தால் வாழ்வின் பயன் முற்றுப் பெறாது. ஆணும் பெண்ணும் கலந்து வாழ்வதற்கு அடிப்படையாக இருப்பது காதல் திருமணங்கள் பலவகையில் நிகழும் காதல் திருமணமே அனைத்திலும் சிறந்தது. உயர்ந்தது. காதல் திருமணத்தில் தான் சாதி, மத, மொழி, நிறம் போன்ற வேறுபாடுகள் இருக்காது. காதல் திருமணம் நிகழும் நிலையைக் கொண்டுள்ள மக்களினம் நாகரிகத்தில் உயர்ந்ததாகும். பண்பாட்டில் சிறந்ததாகும். எந்தவித பந்தமும் இல்லாமல் உறவு கொண்டு காதல் வயப்பட்டு உள்ளங்கலந்ததை,

**“யாயும் ஞாயும் யாராகியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே”**[50]

என்ற குறுந்தொகை பாடல் நமக்கு எடுத்துரைக்கிறது. தொல்காப்பியர் காலத்தில் காதல் திருமணமே வழக்கில் இருந்துள்ளது. பருவம் அடைந்த தலைவனும் தலைவியும் தம்முள் கலந்து பழகி நட்புக்கொண்டு ஒழுகும் ஒழுகலாற்றைக் களவு என்று அழைத்தனர். தம் சுற்றமோ, தம்மைச் சார்ந்தவர்களோ அறியா வண்ணம் பழகுவதால் அதனைக் களவு என்றே சுட்டுகிறார் தொல்காப்பியர்.

**“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்**
**கன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்**
**காமக் கூட்டம் காணுங்காலை**
**மறை ஓர் தேயத்து மன்றல் எட்டனுற்**
**துறையமை நல்லியாழ்த் துணைமையார் இயல்பே”**[51]

என்ற நூற்பாவில் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் போன்ற எட்டுவகை மணங்களின் மரபு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஒரே நிலத்தைச் சார்ந்த தலைவனும் தலைவியுமோ வெவ்வேறு நிலத்தைச் சார்ந்த தலைவனும் தலைவியுமோ ஊழின் துணையால் சந்திப்பது உண்டு. களவு வெளிப்பட்டுவிட்டால் கற்பு நிலையை எய்துதல் வேண்டும். அதாவது இருவருக்கும் திருமணம் நிகழ்தல் வேண்டும் காந்தருவம் கற்பின்றி அமையும். களவு கற்பின்றி அமையாது என்பார் நச்சினார்க்கினியர். கற்பு என்பது ஆடவன் ஒருவனையன்றி வேறு ஒருவனை உள்ளத்தாலும் விரும்பாத இயல்புதான் கற்பாகும் என்பர்.

திருமணத்திற்கு வரைதல் என்ற பெயருமுண்டு. வரைதல் என்றால் வரையறுத்துக் கொள்ளுதல் என்று பொருள்படும். பலர்க்கும் உரியவளாம் தகுதி வாய்ந்த ஒருத்தியைத் தனக்கே உரிமையாக்கிப் பிறர் உரிமையினின்றும் நீக்கிக் கொள்ளுதல் தான் திருமணம் மணமற்ற வாழ்வு பிண வாழ்வு என்று கருதிய நாடுகளும் உண்டு. மணவாழ்வினையே தொல்காப்பியர் கற்பு என்கிறார்.

காதல் இன்பம் என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது இருமனங்களின் இணைவு காதல் எனப்படுகிறது. எல்லா உயிர்களிடத்தும் தோன்றும் அன்புணர்வே காதல் என்ற பெயரால் சுட்டப்படுகின்றது. காதல் என்ற சொல் **அன்பு வேட்கை** என்ற பொருளைத் தருகிறது என்பது தமிழ்ப்பேரகராதி. காதல் என்ற மையப்புள்ளியைப் பற்றிக்கொண்டே இவ்வுலகம் இயங்குகிறது. காதல் இன்பத்திலும், துன்பத்திலும் நிலைக்கும் தன்மை உடையது. சாதி. மதம், நிறம், இனம், மொழி ஆகியவற்றைக் கடந்தது. இதனை **"இருட்டில் ஒளி போன்றது காதல்"**[52] **என்கிறார் ஷேக்ஸ்பியர்**. மனித வாழ்க்கையில் காதலென்பது பிறப்பு முதல் இறப்பு வரையிலும் நீங்காத நிலைபேறுடையதாக விளங்குகிறது. காதல் என்பது மனித வாழ்வில் பல பரிமாணங்களில் சங்கமித்துச் செல்கின்றது. இது கண்களில் அரும்பி இதயத்தில் மலரும். அவ்வாறு மலர்ந்த காதலின் வாசம் மேனியெங்கும் தோற்றுவிக்கும் தலைவனொடு செய்துகொண்ட காதலின் தன்மையைக் குறுந்தொகை,

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர்அளவு இன்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"**[53]

என்கிறது. காதலின் அகலத்தையும், உயரத்தையும், ஆழத்தையும் தெரிவிக்கின்றது. 'காதல் உறவுகளுக்கு அப்பாற்பட்டது. காதல் என்பது காதுக்கினியச் சொல், கருத்தக்கினியப் பொருள், காதல் உண்டாயின், இவ்வுலகில் எல்லாம் உண்டு. காதல் இல்லையேல் ஒன்றும் இல்லை என்கிறார் ரா.பி. சேதுப்பிள்ளை'[54]. காதல் இயற்கையின் ஆணையால் உள்ளத்தில் தோன்றுவது. காதலில் பிரிவு ஏற்படும்போது காதலர் துன்பம் அடைகின்றனர். **"இளங்காதலர்களுக்குப் பிரிதல் என்பது முகவாட்டமும், உயிர்வாட்டமும் தரும் கொடுஞ்செயலாகும்"**[55] **என்கிறார் வ.சு.ப. மாணிக்கம்.** காதலில் பிரிவுநிலையில் காதலர் இருவரும் துன்பம் அடைகின்றனர். துன்பத்தை வெளிப்படுத்தும் நிலையில் காதலி தன் மனதிற்குள் வைத்துப் புழுங்கி அழுவாள். காதலன் காதலியின் ஊருக்குச் சென்று தம் காதலை மடலூர்ந்து ஊராருக்குப் புரிய வைத்துக் காதலியைத் தன்னோடு சேர்த்து வைக்குமாறு வேண்டுகிறான்.

**“என் கண் இடும்பை அறிஇயினென் நுங்கன்**
**தெருளுற நோக்கித் தெரியுங்கால் இன்ன**
**மருளுறு நோயோடு மம்மா அகல**
**இருளுறு கூந்தலாள் என்னை**
**அருளுறச் செயின் நுமக்கறனுமா றதுவே”[56]**

என்கிறது அகம். தான் விரும்பிய பெண்ணைத் தனக்கே திருமணம் செய்து வைத்தால் அதுவே அறமாகும் என்று வருந்திக் கேட்கிறான். உள்ளம் கலந்து வாழும் வாழ்க்கைதான் காதல் வாழ்க்கை அத்தகைய காதல் வாழ்க்கையில் உயர்ந்த குணங்கள் மட்டும் வெளிப்படுகிறது. “உலகத்தின் எல்லா மொழித்தோட்டங்களிலும் காதல் மலர்கள் அன்றாடம் பூத்துக்கொண்டுதான் இருக்கின்றன”[57] என்கிறார் கு.வே. பாலசுப்பிரமணியன். தலைமக்கள் இருவரின் காதல் பார்வைகளில் கருத்து ஒருமித்த நிலையை வாய்ச் சொற்களைவிடவும் நுண்மையாக விளக்கக்கூடியது கண்கள் என்பதை

**“கண்ணோடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல”[58]**

## 3.3 புறநிலை சமூக விழுமியங்கள்

புறத்திணை இலக்கியம் இறப்புப் பற்றியே பெரும்பாலும் பேசுகிறது. கொடிய பாலைவழியில் கணவனை இழந்து, தலைமகள் புலம்பும் முதுபாலையும், காதலி இழந்த தபுதார நிலையும், காதலன் இழந்த தாபத நிலையும், குடும்பம் சார்ந்த இறப்புப் பற்றிய பேரவலங்கள். இவை வாழ்வின் நிலையாமையைக் காட்டுகின்றன. இவை கையறுநிலையுடன் சேர்த்துப் புறத்திணையில் பேசப்படுகின்றன.

அகம் என்னும் சொல்லைப் போலவே புறம் என்பதும் ஓர் இலக்கியக் கலைச் சொல்லாகும். புறம் என்பது காதல் தவிர்ந்த ஏனைய பொருள்களை உள்ளடக்கியது. அதாவது போர், வீரம், கொடை, புகழ், அறநெறி போன்ற வாழ்க்கையின் புறக்கூறுகளைத் தெளிவாக்குவது. அகப்பொருளானது போக நுகர்ச்சியாகலான் அதனாலாய பயன் தானே அறிதலின் அகம் என்றும், புறப்பொருளாவது மறஞ்செய்தலும் அறஞ் செய்தலும் ஆகலான் அவற்றாலாய பயன் பிறருக்குப் புலனாதலின் புறம் என்கிறார் இளம்பூரணர். புறப்பொருள் என்பது போர், வீரம், கொடை, புகழ், பிறப்பு, இறப்பு முதலிய சமுதாயப் புறச்

செய்திகளைச் சுட்டுகின்றது. அகத்திணையியல் காதலை மட்டுமே கூறும். ஆனால் புறத்திணையியலோ, காதல் தவிர மற்ற எல்லாவற்றையும் கூறும். சங்க காலப் புறத்திணைப் பாடல்கள் போர் பற்றிய செய்திகளையும், அரசர்களின் ஆட்சியின் சிறப்பையும், புலவர்கள் மேல் அவர்கள் கொண்டிருந்த பேரன்பையும் மிகச் சிறப்பாக விளக்குகின்றன. மேலும் அப்பாடல்களில் சொல்லப்படும் கருத்துக்கள் அக்கால மக்களின் வாழ்வியலை முழுமையாக எடுத்துக்காட்டுகின்றன.

குழுவாகக் கூடி வாழ்ந்த ஆதிமனிதனுக்கு வேட்டையே முதன்மையான தொழிலாக விளங்கியது. வேட்டையின் மூலம் பெறப்பட்ட ஒருசில விலங்குகளைப் பழக்கி வீட்ட வேலைகளுக்கும் பயன்படுத்திக் கொண்டான். வேலையோடு அதிக பலனையும் தரக்கூடிய விலங்குகளில் பசுவே முதன்மை வகித்தது. இதனால் தொல் சமூக மக்கள் பசுக்கூட்டங்களைச் செல்வமாகக் கருதினர். இனக்குழுக்களுக்கு இடையேயான போரில் செல்வமாகக் கருதப்பட்ட பசுக்கூட்டங்கள் கவர்ந்து வரப்பட்டன. தொதவர், கோத்தர்களின் செல்வம் இவர்களுக்கு உடமையான எருமை மந்தைகளைக் கொண்டே மதிப்பிடப்படுகிறது. ஆதிகால மக்களைப் போலவே நாகரிகமடைந்த மக்களும் பசுக்களைச் செல்வமாக நினைத்தனர். இதன் விளைவாகவே போரின்போது நாட்டைவிட்டு விலக்கி வைக்கப்பட வேண்டியவர்கள் வரிசையிலும் பசுக்கூட்டமே முதலிடம் வகிக்கிறது. இதனை, **“ஆவு மானியற் பார்ப்பன மக்களும்”**[59]எனும் .புறநானூற்று அடி புலப்படுத்துகின்றது. பெருஞ்செல்வமாகிய பசுக்களைக்கவர்ந்து செல்வதற்குப் பயந்தே இம்முன்னேற்பாடுகள் நிகழ்ந்திருக்க வேண்டும். நிரைகவர்ந்து வருதலை,

**“ஊர்கொலை, ஆகோள், பூசல்மாற்றே**
**நோயின்று உய்த்தல், நுவலுவழித் தோற்றம”**[60]

எனும் தொல்காப்பிய அடிகள் உறுதிப்படுத்துகின்றன. தொல் சமூகத்தில் நிலவிய நிரை கவர்தலின் எச்சமாகவே இதனைக் கருதலாம். ஆதி பொதுவுடைமைச் சமூக அமைப்பில் கவர்ந்து வரப்பட்ட பசுக்கள் வெற்றி பெற்ற குழுவுக்குச் சொந்தமாயின. புலத்திலிருந்து வந்த பொருட்களை (ஆநிரை உட்பட) இனக்குழுத் தலைவனே மற்றவர்களுக்குப் பகிர்ந்தளிப்பான். இதனை மானிடவியலார் மறுபங்கீடு என்னும் சொல்லால் குறிப்பர். இனக்குழுச் சமூகத்தில் நிலவிய மறுபங்கீடு செய்தலின் எச்சத்தைத் தொல்காப்பியர் பாதீடு எனும் சொல்லால் குறிக்கிறார். இதனை தந்துநிறை, பாதீடு, உண்டாட்டு, கொடை

எனும் தொல்காப்பிய நூற்பாவழி வெளிப்படுத்தி நிற்கிறது. தொதவர் போட்டிய இருளர் போன்ற பழங்குடிகள் காலத்தடைகளை முக்கிய செல்வமாகக் கருதி மதிக்கின்றனர்.

தொல் சமூக மக்கள் வேட்டையின் போது தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், விலங்குகளை இலாவமகமாக வேட்டையாடவும் வேட்டைக்கான ஒத்திகை நிகழ்வை மேற்கொண்டனர். இந்நிகழ்வு பிற்காலக்கலை இலக்கியங்களுக்கு அடிப்படையாய் அமைந்தது எனலாம். போரின் போதும், போருக்குப் பின்னரும் ஆரவார ஒலி எழுப்புவது இனக்குழுச் சமூகத்தின் எச்சநிலையே காட்டுகிறது.

வெட்சித்திணையின் படை இயங்கு அரவம். வஞ்சித்திணை பேசும் இயங்கு படை அரவம் போன்ற சொல்லாடல்கள் இதனைப் புலப்படுத்துகின்றன. தொல்காப்பியர் அகத்திணையியல் கூறியதற்குப் பிறகு புறத்திணையியலைக் கூறக் காரணம் என்னவென்றால் அகப்பொருள் பகுதிக்குப் புறனாய பகுதிகளைக் கூறுவதற்கேயாகும். தொல்காப்பியர் முன்னர் அகத்திணைகள் ஏழு வகைப்படும் என்று கூறினார். அந்த அகத்திணைகளுக்கு இவ்வியலில் கூறப்பெறும் புறப்பகுதிகள் அவ்வகத்திணைகளுக்கே புறத்திணைகளாய் அமைந்த சிறப்பினையும் உணர்த்துகின்றார்.

நிலைபேறு இல்லாத உலக இயற்கையைப் பற்றி எடுத்துரைப்பது காஞ்சித் திணையாகும். புறப்பொருள் வெண்பாமாலை காஞ்சி என்பதற்கு வேறு பொருள் கொண்டு பகைவரைத் தன் நாட்டின் எல்லையைத் தாண்ட விடாமல் தடுத்தல் காஞ்சிப் படலம் என்கிறது. இவர்கள் காஞ்சிப் பூவைச் சூடியிருப்பர். இதற்கு இருபத்தொன்று துறைகளைப் புறப்பொருள் வெண்பாமாலை சுட்டுகின்றது.

வெற்றி பெற்ற அரசனின் வீரம், புகழ், கொடை முதலிய பண்புகளைப் புகழ்ந்து பாடுதல் பாடாண் திணையாகும். இத்திணையில் இருபத்தைந்து துறைகள் உள்ளன. புறப்பொருள் வெண்பாமாலை இதனைப் பாடாண் படலம் என்று கூறி நாற்பத்தெட்டு துறைகளைச் சுட்டுகின்றது. திணைகள், துறைகள் ஆகியவற்றின் விரிவும் விளக்கமும் புறப்பொருள் வெண்பாமலை மூலம் அறியலாம்.

புறத்திணைகள் போர்ப் பிரிவுகளை விளக்குகின்றன. ஆநிரைகளைக் கவர்தல்தான் போருக்குத் தொடக்கமாக அமைகின்றன. ஆநிரை கவர்வோர் செயலை ஆநிரைகளை மீட்போர் மிகக் கடுமையாக எதிர்த்துப் போரிடுவர். பகைவன் நாட்டைக் கைப்பற்றவோ, அவ்வரசனின் மகளைப் பெண் கேட்டு, அவன் தர மறுக்கும்போதோ, போர் நடத்தப் பெறுதல் பெரும்பான்மை நிகழ்வாக இருக்கும். சில நேரங்களில் இகழ்ந்து பேசியதாலும்

இகழ்ச்சிக்கு ஆட்பட்டவன் போர் தொடுத்தலும் நடைபெற்றுள்ளது. புறத்திணைகள் போர்ப் பிரிவுகளைக் கூறினாலும் அவற்றிற்குரிய துறைகள் போரின் சிறு சிறு நிகழ்வுகளைக் கூறுவனவாகும். போருக்கு அடிப்படைக் காரணம் உலகப் பொருள்கள் மேல் ஆசையும், பெண்ணாசையுமே ஆகும். புறத்திணைகளில் ஒன்றான காஞ்சித் திணை உலக நிலையாமையை எடுத்துரைக்கிறது. வாழ்வில் ஏற்படும் பல்வேறு அனுபவங்களையும் இது எடுத்துக் கூறுகின்றது. ஆசைகளால் பயன் இல்லை என்கின்றது. போர் தொடங்குவதில் இருந்து போர் முடிந்து வெற்றி பெற்றோ, தோல்வியுற்றோ வரும்வரை ஓர் ஒழுங்கு கடைபிடிக்கப்பட்டதால் தான் போர் நிகழ்விற்கும் ஓர் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகை நூல்களில் உள்ள புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவையும், பத்துப்பாட்டில் உள்ள ஆற்றுப்படை இலக்கியங்களும் மதுரைக் காஞ்சியும் மேற்கண்ட புற இலக்கணப் பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டே இயற்றப்பட்டுள்ளன.

**துணங்கைக் கூத்து**

ஆதிமந்தியார் தன்னை ஆடுகள மகளாகவும், தன் தலைவனை ஆடுகள மகனே எனக் குறிப்பிட்ட பாடலில், தலைவன் இருக்கும் இடத்திற்குச் செல்லத்தகாத கற்புடையாட்டியாகத் தான், ஆண்டும் செல்ல நேர்ந்தமையால் வந்த நிகழ்வினைக் கூறுவதாக உள்ளது. வீரர்கள் கூடிஎடுக்கும் விழாவில் தத்தமக்குரிய மல்லரைத் தழுவியாடுகின்ற கூத்து துணங்கைக் கூத்து, இவ்விடங்களிலும் இவையல்லாத பிற இடங்களிலும் தேடி காணக்கிடைத்திடா தலைவனைப் பாடுவதாக அமைந்துள்ளது.

**மகட்பாற் காஞ்சி**

பண்டைக் காலத்தில் மண், புகழ், பெண் ஆகியவற்றின் காரணமாக தமிழக மன்னர்களிடையே போர் ஏற்பட்டது. போர் தொடுப்பதற்கு ஏதேனும் காரணமில்லா விட்டாலும் தங்களுடைய போர்த் தினவினைப் போக்கிக் கொள்வதற்காகவும் போர் ஏற்பட்டது. இருப்பினும் பெண் காரணமாக நிகழ்ந்த போர்களைக் குறிப்பிடும் புறத்திணைத் துறையாக மகட்பாற் காஞ்சித் துறை விளங்குகின்றது. வணிகரும், வேளாளரும் தமது மகளை மன்னர்களுக்குக் கொடுப்பதற்கு அஞ்சினர். அதனாலேயே போர்கள் மூண்டன எனலாம். சங்கப் பாடல்களில் களவிலும், கற்பிலும் அலர் ஏற்படுவதையும், அவ்வலர் தலைவியின் உள்ளத்தை உறுதிப்படுத்துவதையும் காண முடிகின்றது. இதனைத் தொல்காப்பியம், **அலரின் தோன்றும் காமத்தின் மிகுதி** என உணர்த்துவர். தனிமனிதனின் பண்புநலன் ஒட்டியே அவன் பெற்றோரின் தகுதி பிறரால் நிர்ணயிக்கப்படும். இதனையே வள்ளுவர்,

**"தக்கார் தகவிலர் என்பது அவரவர்**
**எச்சத்தால் காணப் படும்"[61]**

என்பார். ஒரு நிலத்தில் வாழும் மக்களின் பண்பு நலன்களை ஒட்டியே அவர்கள் வாழும் மண்ணும் மதிக்கப்பெறும்.

**"நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ"[62]**

என்கிறார் ஔவையார். மகள் மறுத்தலால் ஏற்படும் அழிவை எண்ணிப் பரணர் மிகவும் வருத்தம் அடைகின்றார். பரணரின் ஆறு பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. வேந்தன் முதுகுடியினரிடம் பெண் கேட்கின்றான், தர மறுக்கின்றனர். எனவே, வேந்தன் பெரும்படையோடு வந்துள்ளான். அதனால் இருவருக்கும் போர் நிகழ இருப்பதைக் கண்ட பரணர் அப்பெண்ணின் தாயைச் சீண்டிக் கூறுகின்றார்.

**"தகை வளர்த்து எடுத்த நகையொடு,**
**பகை வளர்த்திருந்தஇப் பண்புஇல் தாயே"[63]**

இதன்மூலம் ஆசிரியர், தாயாராவது இப்போர் வாராது தடுத்திருக்கலாம். போரிட்டு அழிதலை விரும்பினளாகிய இவள் ஒரு பண்பில்லாதவளே என்கிறார். இவளை இவள் தாய் பெறாதிருந்திருக்கலாமே பகைவர் புகுந்து பாழ்படுத்தும் நிலை இவளாலன்றோ இவ்வூருக்கு ஏற்பட்டது என அவலத்தின் நிலைநின்று கூறுவதை காணமுடிகிறது. சங்கப்புலவர்கள் பெண் காரணமாகப் போரிட்டழிவதைப் பெருமிதமாகக் கொள்ளவில்லை. பெண் காரணமாகப் போரிட்டு அழிவது வருந்தத்தக்கது என்றே கருதினார் என்பதை மேற்கண்ட பாடலின் வழியே அறிந்துக்கொள்ள முடிகிறது. பெண் கேட்டு வந்த வேந்தனை இழித்துரைத்து, அவனுக்குத் தன்னுடைய மகளைப் பெண் கொடுக்க மறுக்கின்றான். ஒரு பெண்ணினுடைய தந்தை. இத்தகைய நிலையைக் கண்ட வேந்தன் சினமுற்று போர் தொடுப்பதும், பொருத்தமின்றி தனது மகளை விரும்பிய மன்னன் மீது ஒருவன் மாறுகொண்டு போர் செய்ய எத்தனிப்பதும் மகட்பாற் காஞ்சி என்னும் துறையாகும். இம்மகட்பாற் காஞ்சி குறித்து,

**“நிகத்தது மேல்வந்த வேந்தனோடு முதுகுடி**
**மகட்பா டஞ்சிய மகட்பா லானும்”[64]**

என்ற தொல்காப்பிய நூற்பா எடுத்துரைக்கின்றது. ‘‘பெண்கோள் ஒழுக்கத்தினொத்து மறுத்தல் பற்றிப் பகைவனாக வலிந்து கோடற்கு எடுத்து வந்த அரசனோடு முதுகுடித் தலைவராகிய வணிகரும் வேளாளருந் தத்தம் மகளிரைப் படுத்தற்கு அஞ்சிய மகட்பாற் காஞ்சியாகும் என்பது நச்சினார்க்கினியர் கூறும் விளக்கமாகும். ‘‘ஒத்து மாறுபட்டுத் தன்மேல் வந்த வேந்தனோடு தன் தொல்குவந்து உள்ள மக்கட்கொடை அஞ்சிய மகட்பாற் காஞ்சியும்’’ [65] என்பது இளம்பூரணர் விளக்கம் தந்துள்ளார். ஒருவன் தன் மகளை விரும்பும் அரசனோடே மாறுபட்டு நின்றது மகட்பாற் காஞ்சி என்னும் துறையாகும்.

**“நுதிவேல் கொண்டு நுதல் வியர்துடையா,**
**கடியகூறும், வேந்தே; தந்தையும்,**
**நெடிய அல்லது, பணிந்து மொழியலனே;**
**இஃது இவர் படிவம்: ஆயின், வைஎயிற்று,**
**அரிமதர் மழைக் கண், அம்மா அரிவை,**
**மரம்படு சிறுதீப் போல,**
**அணங்கு ஆயினள், தான் பிறந்த ஊர்க்கே”[66]**

என வரும் பாடல், மகட்பாற் காஞ்சிக்கு எடுத்துக்காட்டாக அமைகின்றது. மன்னர்களது ஆட்சிக்காலம் சிறந்த நிலையை அடைவதற்கு முன், சிறந்த குடியில் பிறந்த ஒரு பெண்ணை நாடாளும் தலைவருக்குக் கொடுக்க மறுத்திருக்க வேண்டும். எனவே, அரசர்களின் ஆட்சித் தொடங்கிய காலத்துப் போர்காலத்தில் உயிருக்கு அஞ்சாது போரிடுவதால் அவர்களின் வாழ்க்கை நிலையெண்ணி அவர்கள் விரும்பிக் கேட்ட பெண்ணைப் பெண்ணின் பெற்றோர்கள் தர மறுத்திருத்தல் வேண்டும். அவ்வாறில்லையெனில், தன் கருத்திற்கு ஒவ்வாத அரசர்களுக்குப் பெண் கொடுப்பதற்கு மறுத்திருத்தல் வேண்டும். இதனை அறிந்த புலவர்கள் பெண்ணால் ஏற்படும் அழிவின் நிலை எண்ணிக் கூறுவதால் இத்துறை காஞ்சித்திணையுள் ஒன்றாக உள்ளது.

**போர்**

போர் என்பது உலக உயிரினங்களின் வாழ்க்கையில் அங்கமாகிவிட்ட ஒன்றாகும். உயிரினங்களிடையே இடையீடின்றி இருந்து வரும் இல்வாழ்க்கைப் போராட்டமே போருக்கான அடிப்படை காரணமாகும். போர்க்குணம் என்பது மக்களின் மனத்தில் இயல்பாகிவிட்ட ஒன்றாகும். வலிமைக்கேற்பவும், இடத்திற்கேற்பவும், காணப்படும் ஓயாத போராட்ட நிலையே போர் எனலாம். மனித வாழ்க்கையில் நடைபெறும் இப்போரின் நோக்கமே தன்னையும், தன்னைச் சார்ந்தவரையும் காத்தலாகும். போரினால் ஒருவரையொருவர் தாக்கிச் கொள்ளும்போது அன்பும், அமைதியும், அரனும், ஆக்கமும், உயிரும், உடைமையும், இருதரப்பிலும் அழிவதைக் காணலாம். இதனை அழிவு என்பது போய் நிகழ்காலத்தில் பேரழிவாக அமைகின்றது. பண்டைக்காலம் முதல் இன்றுவரை மனித இனத்தின் முக்கிய பிரச்சனையாக அமைவதைக் காணலாம்.

**3.4 போர் பற்றிய விழுமியங்கள்**

போரில் மடிந்துபோன சேரமானுடைய நாட்டில் தோன்றிய அவலத்தைக் கழாத்தலையார் சுட்டியுள்ளார்.

**“மண்முழா மறப்ப, பண்யாழ் மறப்ப,**
**இருங்கண் குழிசி கவிழ்ந்து இழுது மறப்ப,**
**உழவர் ஓதை மறப்ப, விழவும்**
**புன்கண் மாலை மலை மறைந்தாங்கு,**
**தன் போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த”[67]**

முழவு மண்(மெழுகு) இடுதலை மறந்தது. பெரிய பானை கவிழ்ந்து வெண்ணையை மறந்தது. சுற்றம் தேறல் மறந்தது. உழவர் ஒசையை மறந்தனர். சிற்றூர் விழாவை மறந்தது என்கின்றார். எழினி என்ற அரசன் தகடூரில் நிகழ்ந்த போரில் மாண்டபோது அரிசில்கிழார்,

**“வையகம் புகழ்ந்த வயங்கு வினைஒள் வாள்**
**ஈன்றோள் நீத்த குழவி போல,**
**தன் அமர் சுற்றம் தலைத்தலை இனைய**
**கடும்பசி கலக்கிய இடும்பை கூர் நெஞ்சமொடு**
**நோய் உழந்து வைகிய உலகினும், மிக நனி”[68]**

தாயை இழந்த குழந்தையைப் போல அவனுடைய சுற்றம் வருந்தியது. உலகம் இடும்பைகூர் நெஞ்சமொடு வருந்தியது என்று பாடினார். வீரர்கள் மாண்டால் அவ்வீரர்தம் மனைவிமார்கள் தங்கள் கூந்தலைக் களைந்துவிட்டுக் கைம்மைக்கோலம் பூணுவர். மகளிர் களைந்த தலைமுடியைக் கயிறாகத் திரித்து. பழையன் மாறனின் காவல் மரத்தை வெட்டித் துண்டுகளாக்கி வண்டியில் ஏற்றி யானைகளைப் பூட்டி ஓட்டி வந்தான். வேட்டுவன் எனப் பரணர் பாடியுள்ளார்.

கரிகாலன், பகைவர் ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்தினான் வளமிக்க வயல்களை அழித்தான் என உருத்திரங்கண்ணனார் பாடியுள்ளார். கழுதை ஏர் பூட்டி விளைந்த நெல் வயல்களை அழித்து, கொள்ளும், கவடியும் விதைத்துவிட்டுச் செங்குட்டுவன் திரும்பினான் என்ற செய்தியையும் அறிகின்றோம். முதுகுடுமிப் பெருவழுதி பகைவருடைய தேர்வழங்கு தெருக்களைக் கழுதை ஏர்பூட்டி உழுதான். புள்ளினங்கள் மேயும்படியான விளைந்த வயல்களைத் தேர்களை விட்டு அழித்தான். நீர்நிலைகளை யானைப் படையினை விடுத்துக் கலக்கிச் சேறாக்கினான் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பகைவர்களுடைய நெல்விளை கழனிகளைக் கொள்ளையடித்தான். பனை மரத்தை விறகுக்காக வெட்டினான். மாந்தர் நீராடவும் உயிரினங்கள் பருகவும் உதவுகின்ற பொய்கைகளில் யானைகளைப் படியவைத்துச் சேறாக்கினான். ஊரைத் தீயிட்டுக் கொளுத்தினான். இச்செய்திகள் போரினால் ஏற்படும் பொருளாதாரச் சீரழிவுகளையும் இன்னபிற கொடுமைகளையும் உணர்த்துகின்றன. இத்தகைய கொடிய தீமைகளை உளங்கொண்ட சான்றோர் அமைதி ஏற்படுத்த முயன்றனர்.

**போர்க்காரணம்**

தொல்காப்பியர் காலத்தில் நடைபெற்ற போரானது பகை நாட்டவர் ஊரின் எல்லையிலுள்ள பசுக்கூட்டத்தைக் கவர்தலும் அதற்கு பின் அதுவே போராக மாறுதல் ஆயிற்று எனலாம். இப்பசுக்கூட்டத்தைக் கவர்தலை தொல்காப்பியர்,

**"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக்களவின்**
**ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்"**[69]

என்று சுட்டுகிறார். போர்களானவை ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்ற ஆறுவகை காரணங்களால் பிறக்கும் என்கிறார். போர்க்குரிய காரணங்களாகப் பற்பல உரைக்கப் பெறுகின்றன. இயல்பான மறப்பண்பு, மண்ணாசை, இடஞ்சிறிதென்னும்

ஊக்க மேலீடு, அரசர்க்கரசராகத் திகழும் உட்கோள், அரசுரிமை யார்க்கெனும் சிக்கல், மானக்குறைவு உண்டாக மற்றையோர் நடத்தல், மகள் மறுத்தல் ஆகிய காரணங்களால் போர் தோன்றக் கூடுமென்பர்.

பழைய இந்து சமூகத்தில் போர்கள் நடைபெற்றமைக்குரிய உளவியற் காரணங்களாக 1. சாதி மனநிலை. 2. போர்த்தொழிலின்றி வாழ அமைய இயலாத மனநிலை, 3. வீரச் செயல்களில் நாட்டம், 4. உடல் தினவு, 5. தற்காப்பு எண்ணம், 6. வெகுளியும், பொறாமையும், 7. பிறர் மீது ஆளுகை செலுத்தும் நோக்கம் ஆகியவற்றை ஆய்வறிஞர் குறிக்கின்றனர். அரசுகள் தோன்றுவதற்கு முன்னர், இனக்குழு மக்களிடையே செல்வப் பொருளாக விளங்கிய ஆனிரைகளைக் கவரும் மாடுபிடிச் சண்டையே அரசுகளும், அதிகாரமும் தோன்றிய பின்னர் பிரதேச உணர்வின் அடிப்படையில் நாடுபிடிச் சண்டை யாகியிருக்க வேண்டுமென்று கூறுவதும் எண்ணுதற்குரியதாகும்.

நாட்டுப் பிரிவுகளும் அரசுத் தலைமைகளும் உருவாவதற்கு முன் காடுகளிலும் குகைகளிலும் வாழ்ந்த நிலையில் மனித இனம் வேட்டைத் தொழிலிற் செல்லும்போதும், உணவு சேகரிக்க முனையும் போதும் குழுக் குழுவாய் இயங்கியிருக்கிறது. இக்குழுவில் அனைவரினும் வலியனாகவும், தறுகண்மை மிக்கவனாகவும் இருந்தவன் தலைவனாக எண்ணப்பட்டிருக்க வேண்டும். பிறரை அடக்கியும், அஞ்சி ஒழுகச்செய்தும் தலைமை பூணுதலன்றிச் சட்ட நெறிமுறைகளாலும், குடிப் பிறப்பாலும், பெரும்பான்மையாரின் விருப்பத்தாலும் தலைமையெய்தும் நாகரிகச் சமுதாயம் தோன்றுவதற்குப் பன்னூறு ஆண்டுகட்கு முன் உடல் வலியும் தறுகண்மையுமே தலைமையை முடிவு செய்தன. வீரம் நிறைந்த எச்சமூகத்திலும் தலைவன் ஒப்பிலா வலிமையும் ஆற்றலும் உடையவானாகக் கூறப்படுகிறான்.

தமிழர் திருமகனாம் தொல்காப்பியர் வாழ்ந்த காலம் வீரயுகக்காலம். உலகோர் போற்றும் மறக்காலம். அந்த சங்ககால மக்கள் வாழ்க்கை முறை அம்மக்களின் நாட்டுணர்வு, அவர் தம் வீரச்சிறப்பு, வாணிகம், அக்காலப் புலவர்களின் ஆழ்ந்த புலமை, மகளிரின் வீரப்பண்பு போன்ற செய்திகளையும் தொல்காப்பியம் தெள்ளத் தெளிவாக காட்டுகிறது.

**படை**

தொல்காப்பியம் அரசருக்குரியனவாகச் சுட்டும் ஒன்பது பொருள்களுள் படையும் ஒன்று வீரத்திற்கு முதன்மையளித்து வந்த அக்கால வேந்தரும், மக்களும் போர் என்றால்

பெருமகிழ்வு கொண்டனர். தகடூர் மன்னன் அதியமான் நெடுமாறன் அஞ்சி ஔவையாரை ஆதிரித்தவன். ஔவைக்கு நெல்லிக்கனி அளித்த சிறிப்பிற்குரியவன். ஔவைக்கு நெல்லிக்கனியை உண்டவர் இறவாமை எய்துவர். அக்கனியைத் தான் உண்ணாமலும் அதன் தெய்வீகப் பண்பினைக் கூறாமலும் அக்கனியை ஔவைக்கு அளித்து, அவள் அதனை உண்டபின் அவளிடம் உண்மையைக் கூறிய பெருமையுடையவன். அவள் தனக்கு இறவாமை ஈந்தவனுக்குத் தனது பாடல்கள் வாயிலாக அமரத்துவம் அளித்தனர். பழந்தமிழகத்தில் புலவர்கள் பெரிதும் செல்வாக்குப் பெற்று விளங்கினர். அவர்களின் பரந்த உள்ளமும் ஆழ்ந்தகன்ற அறிவும், வேந்தர் பலரை அவர்களோடு நட்புக் கொள்ளச் செய்தது. வேந்தர் புலவராய் தம் அவையின்கண் வைத்துப் போற்றினர். அவைப் புலவராய் அமர்த்திச் சிறப்பு செய்தனர். சங்க இலக்கியங்கள் புலவர், வேந்தர் நட்பைப் பெரிதும் தொல்காப்பியர் காலப் போர்களின் போது பகைவருடன் போரிடும் போதும், அவர்களை அஞ்சச் செய்யவும் காலாட்படை, யானைப்படை, குதிரைப்படை என்று மூவகைப்படை கொண்டு வீரன் தலைமையிலோ, அரசன் தலைமையிலோ போரிட்டு வெற்றி பெற்றனர்.

**“தானை, யானை, குதிரை என்ற**
**நோனார் உட்கும் மூவகை நிலையும்”**[70]

என்ற நூற்பாவில் சுட்டுகிறார். அறிவியல் வளர்ச்சியாலும், விஞ்ஞான வளர்ச்சியாலும் தற்காலத்தில் தரைப்படை, கப்பற்படை, விமானப்படை என்று மூவகையாக படைகள் பிரிக்கப்பட்டுப் போர் நடத்தப்படுகிறது. போரில் ஈடுபடும் வீரமறவர்கள் எக்காரணம் கொண்டும் புறமுதுகிட்டு ஓடாத தன்மை கொண்டவர்கள் என்பது ‘உளப்பட ஓடா உடல்வேந்தடுக்கிய உன்னநிலையும்’ என்ற அடிகளால் சுட்டுகிறார். போருக்குச் செல்லுகின்ற படை எழுப்புகின்ற பேரொலி மிகுந்த ஒலியாக எழுப்பப்படும் என்பதை இயங்குபடை அரவம் என்று சுட்டப்படுவதையும் பகைவரோடு போர்புரியும் போது போரில் வெற்றி பெறுவதோடு இறுதியில் அந்நாட்டிற்குப் பேரழிவினைத் தோற்றுவிப்பதையும் தொல்காப்பியர் எரிபரந்தெடுத்தல் என்று வார்த்தையால் சுட்டுவது அக்காலத்திற்கு மட்டுமல்லாது இக்காலத்திற்கும் பொருந்துவதைக் காணலாம்.

எல்லோரோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்கும் பெருமித உணர்வே வீரமென்றும், இவ்வுணர்வு கல்வி, தறுகண். இசைமை, கொடை ஆகிய நாற்பண்பு பற்றிப் பிறக்குமென்றும் கூறுவர். இவையன்றிக் காமம், வெகுளி காரணமாகவும் வீரம்

பிறத்தலுண்டு. யானை மதம் போலும் உடல் தினவும், பிறரைப் பகைக்கும் உளச்செருக்கும் மனித இனத்தின் தொடக்கக் காலத்தில் வீரமாக மதிக்கப்பட்டன. வேட்டையிலும் உணவு சேகரிக்கும் முயற்சியிலும், ஒரு கூட்டம் மற்றொரு கூட்டத்தோடு மோதுகின்ற நிலையில், தொல்பழங்காலத்தில் மனித வீரம் விலங்கு நீர்மையிலிருந்து மிக வேறுபட்டதாக இல்லை. வரலாற்றுக்கு முற்பட்ட கால எச்சங்கள், மனிதர்கள் கருவி கொண்டு பொருத செயல்களைக் காட்டுகின்றன. குழுக்குழுவாக வாழ்கின்ற வாய்ப்புடைய இடங்களெல்லாம் போர் என்பது தவிர்க்க முடியாததாகவே இருந்திருக்கிறது. ஆடவரை வீரர், மறவர், மன்னர், பொருநர், மழவர் எனப் பல சொற்களாற் குறிப்பதன்றியும், புலி, சிங்கம், சிறுத்தை ஆகியவற்றோடும் வெள்ளம், தீ ஆகியனவற்றோடும் உவமித்தும் உருவகித்தும் புலவர் பாடுவர். வீரர்களை மற்றைய மனிதரிலிருந்து வேறுபடுத்திப் பாடுதல் உலகில் பல இடங்களில் வழக்கமாக இருந்திருக்கிறது. உளச்செருக்கும் உடலுறுதியும் வாய்ந்த வீரனின் தொட்டிற்பருவத்திலிருந்து, இறப்புவரை பல நிகழ்ச்சிகளில் அவன் தெய்வத்தை ஒத்தவனாகப் போற்றப்படுகின்றான். ஆசியாவின் பெரு வீரனான நார்ட் உரிசுமாக் என்பவன் கடலடியில் பிறந்தவனாகக் கூறப் பெறுகிறான். பாட்ரகட் என்பவன் நெடுமாடத்தின் மேல் சிறை வைக்கப்பட்டிருந்த கன்னிப்பெண் வயிற்றில் தோன்றியதாகக் கூறப்பெறுகின்றான். இத்தகைய வீரன் ஒருவனின் இறப்பும் இவ்வாறே புகழ் மிக்கதாகப் புனையப்படுகிறது.

**"செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்**
**உற்றன் றாயினும் முய்வின்று மாதோ**
**பாடுநர் போலக் கைதொழு தேத்தி**
**இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்**
**மண்டமர்க் கடக்குந்த தானை**
**திண்டேர் வளவற் கொண்ட கூற்றே"**[71]

எனப் பெருவீரனின் உயிரிழப்பும் அவனது கொடைப் பண்பினால் நேர்ந்ததாகப் பாடுவர். வீரனின் களச்சாவு புகழிற்கும் மான மேம்பாட்டிற்கும் உரியதாகப் பேசப் பெறுகின்றது. முகத்திலும், மார்பிலும் விழுப்புற படுகின்ற அருஞ்செய் ஆடவர், உயர்ந்தோர் உலகத்தைச் சேர்வர் என்றும், அரசக் குடிப் பிறந்தார் இத்தகு இறப்படைதலே நேரிதென்றும், களச்சாவு பெறாது மூத்தும், நோயுற்றும் விளிந்தாரை வாள்போழ்ந்தடக்குதல் வேண்டுமென்றும் புறப்பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

குடும்பத்தில் இழவுகள் பல நேர்ந்த பின்னும் ஒரு மகனல்லது இல்லோள் தன் மகனைப் போர்க்கனுப்பும் காட்சியையும் வளர்த்து ஆளாக்கிய சமூகத்துக்குக் கடமை புரியும் வகையில் ஆடவன் களம் சென்று களிறெறிந்து பெயர்ந்து வர வேண்டிய தேவையினையும் புறப்பாடல்கள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன. இவ்வாறெல்லாம் வீர உணர்வும், போரும் சமூகத்தின் இன்றியமையாத் தேவைகளாக வருணிக்கப்பட்டமைக்குரிய காரணங்கள் ஆராயத் தகுவன.

அன்று ஒரு நாட்டின் வீரத்தினை நிலை நிறுத்திக் காட்டியது, நால்வகைப் படைபலங்களே ஆகும். தனி ஒரு வீரரும் தம் வீரத்தை தயங்காது முன்னேறிக்காட்டினர். அவர்களின் போர்ப்படைகளிலே தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்ற நால்வகைப் படைகளும் இருந்தன என்பதை

**“தேரும், யானையும், குதிரையும், பிறவும்**
**ஊர்ந்தனர் இயங்கவும் உடையவர் என்ப”[72].**

என்று தொல்காப்பியரே தெளிவாகக் காட்டியுள்ளார். இச்சூத்திரம் தொல்காப்பியர் காலத்திலிருந்த ஊர்திகளைக் காட்டுகிறது. இவ்வூர்திகளைப் படைகளாலே பயன்படுத்திக் கொண்டு தம்வீரப் போரை நிகழ்த்தினர். அன்று தொல்காப்பியர் குறிப்பிட்ட இப்போர் வகைகளே இன்றும் உலக அளவில் ஒரு நாட்டிற்கு பாதுகாப்பைத் தேடித் தருகின்றது. தேரேறிப் போர் செய்ய வந்த அரசர்களை வென்ற வேந்தன், தன் வெற்றிக்களிப்பால் தேர்த்தட்டிலே ஏறி நின்று ஆடும் குரவைக் கூத்து என்று வந்துள்ளமையால் தேர்ப்படையின் சிறப்புக் கூறப்படுகிறது. தொல்காப்பியர் காலத்துத் தமிழ்மக்கள் கடல் கடந்து சென்றனர். அதாவது கப்பலேறிக் கடல் கடந்து சென்றனர். இதனடிப்படையில் கால்நடையாகப் பொருள் தேடச் செல்வதற்குக் காலிற் பிளவு என்பர்.

பண்டைத் தமிழர்கள் ஆக்கிரமிப்புப்போரை அடியோடு வெறுத்தனர். எதிர்த்து வந்தவர்களைக் கண்டு அஞ்சவில்லை. தற்காப்புப் போர் புரிந்து வெற்றி கொண்டனர். தங்களது குடிகளை நடுங்கவைக்கும் கொடுங்கோல் மன்னர்களைப் பண்டையத் தமிழர்கள் சும்மா விட்டு வைக்கவில்லை. அவர்களைப் போரினைக் கொண்டு விரட்டினர்.

**“வஞ்சி தானே முல்லையது புறனே”[73].**
**எஞ்சா மன்னரை வேந்தனை வேந்தன்**
**அஞ்சாதத் தலைச் சென்று அடல்குறித்தன்றே”[74].**

வஞ்சியென்பது முல்லையென்னும் அகத்திணையோடு தொடர்புடையது. அடங்காத மன்னனைக் கொண்டு, நாடு பிடிப்பதற்காகப் படையெடுத்து வந்த வேந்தனை, அறங்கருதும் மற்றொரு வேந்தன், படையெடுத்து வந்த அதிகப்படியான படைகளைத் திரட்டிச் சென்று அவனோடு போர் செய்ததாகும். தும்பை என்பது நெய்தல் என்னும் அகத்தினையோடு தொடர்புடையது. தனது ஆற்றலை உலகம் புகழவேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு, போர் புணர வந்த அரக்கனை, எதிர்த்துச் சென்று போர் செய்து அவன் கர்வத்தைப் போர்களத்திலே அழிக்கும் சிறந்த செயலாகும்.

**“தாய்இல் தூவாக் குழவி போல,**
**ஓவாது கூஉம், நின் உடற்றியோர் நாடே”**[75].

எனத் தமிழர்கள் அகந்தை கொண்டு ஆக்கிரமிப்புப் போரிலே இறங்கமாட்டார்கள். எதிரிகளுக்கு அடிபணியவும் மாட்டார்கள். தற்காப்புப்போரின் மூலம் தங்கள் வீரத்தையும், வாழ்க்கையும், பாதுகாத்துக்கொள்ளும் பண்புடையவர்கள். இவ்வுண்மைகளை மேலே காட்டிய வஞ்சித்திணை, தும்பைத்திணை இரண்டும் விளக்குகின்றன.

மனித இனத்தின் வாழ்க்கை முறையை வெளிப்படுத்தி பதிவுசெய்துள்ள தமிழ் இலக்கியங்களில் தொன்மையான பதிவுகளைக் கொண்டவையாகச் சங்க இலக்கியங்களில் கிடைத்துள்ளன. இலக்கியங்களைப் புனையத் தேவையான பாடுபொருள்கள் சமூகத்திலிருந்துதான் கிடைக்கின்றன. அவை இலக்கியத்தின் பாடுபொருளாக மேன்மையாக்கம் அடைகின்றன. அதுவரை அவை சமூக வழக்கங்களில் ஒன்றாக நிலவுகின்றன.

ஆதிச்சமூக வாழ்க்கையைத் தாய்வழித் தலைமை, புறமண உறவு, சுதந்திர மணம், உடன்போக்கு என்ற அமைப்பில் குறிஞ்சித் திணைப் பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இந்தச் சமூக அமைப்புக்குப் பின்னர் ஆநிரைகள் நிறைந்த தனியுடைமைச் சமுதாயமாக முல்லைத் திணை இருந்தது.

**“எருமை அன்னகருங் கல் இடைதோறு,**
**ஆனின் பரக்கும் யானைய, முன்பின்,**
**கானக நாடனை! நீயோ, பெரும!”**[76]

என்பதால் நாகரிக நிலையின் முதல் சொத்தாக ஆநிரைகள் இருந்துள்ளன. தனியுடைமை தோன்றவே அதனைக் காப்பாற்றிக் கொள்ள வாரிசுரிமை தோன்றியது. அதனை நிலைநாட்ட ஒருதார மணமும் அதில் தோன்றும் வழுக்களைக் களையக் கற்பு விதிகளும் உருவாயின. முல்லைத் திணையின் காதல் உரிப்பொருளான 'இருத்தல்'என விளங்கிக் கொள்ள வேண்டும். ஆநிரைகளின் வழியே நிலவுடைமைச் சமுதாயம் மலா்ந்தது. பெண்ணுக்குரிய ஒழுக்கம், கற்பு வாழ்க்கை, இல்லறக் கடமை, ஆணுக்குரிய கடமை என அறங்கள் உருவாயின. மக்கள் வாழ்வதற்கு ஏற்ற நிலப்பகுதியோடு தொடா்புகொண்டு நிலைத்து வாழத்தொடங்கினா். அப்போது இயற்கைச் சூழலை அடிப்படையாகக் கொண்டு தமது வாழ்க்கையை அமைத்துக் கொண்டனா். இயற்கையைப் பயன்படுத்திக் கொண்டு, உற்பத்திக் கருவிகளை உருவாக்கிப் பயன்படுத்திய நிலைமைக்கு ஏற்ப அவா்தம் வாழ்க்கை அமைந்தது. அதன் அடிப்படையில் சமூகவளா்ச்சி வேகமாக வோ, மெதுவாகவோ அமைந்தது.

வெவ்வேறு நிலப்பகுதிகளான மலை, நாடு, நன்செய், கடல் என்ற பாகுபாட்டையும் அந்தந்த நிலப்பகுதியில் இயற்கையான விளைபொருட்களும், உற்பத்திப் பொருட்களும், உணவுமுறை, மரம்செடி கொடிகளும், தொழில், இசை முதலான உற்பத்தி முறைகளும் வேறானவையாக இருப்பதையும் சங்ககால ஆற்றுப்படை நூல்கள் வழி அறிய முடிகிறது.

**அமைதி முயற்சி**

அதிகாரவா்க்கத்தினா் முனைப்பு, போருக்குக் காரணமாக இருந்தாலும் சான்றோரும் பெண்களும் குழந்தைகளும் முதியோரும் தொழிலாளா்களும் அமைதியை நாடிச்செல்லும் இயல்பினா். சான்றோா் போரைத் தவிா்க்கப் பல்லாற்றலாலும் முயன்றனா். கோப்பெருஞ்சோழன் தம் மக்களோடு போரிட முயன்றபொழுது எயிற்றியனாா் அவனை அமைதிப்படுத்தினாா் என அறிய முடிகின்றது. பாாி வள்ளலுக்கும் மூவேந்தருக்கும் நிகழ்ந்த போாில் அமைதி ஏற்படுத்த முயன்ற கபிலா் தோற்றாா். அதியமானுக்கும் தொண்டைமானுக்கும் இடையே தூது சென்று அமைதியை ஏற்படுத்தி வென்றாா் ஔவையாா்.

நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பகை உண்டாயிற்று. அதனைக் கண்ட புலவா் கோவூா்கிழாா் இருவருக்கும் அறிவுரை வழங்கினாா். உங்கள் இருவருடைய மாலையும் ஆத்திமாலையாகும். நம்முள் ஒருவா் தோற்பினும் சோழா் தோல்வி எய்தினா் என்றே குடிப்பெயரால் பழிவரும். இருவரும் வெற்றியடைதல் இயற்கையுமன்று. ஆதலால் உங்கள்

மாறுபாட்டினை விடுதல் உமக்கு நல்லது என்றார். மன்னர்கள் பகை மறந்தனர். சோழநாடு அமைதிப்பூங்காவாயிற்று, சோழர்களுக்குள் உட்பகை ஒழிந்து அவர்கள் சிறப்புற்றனர். அதனால் சேர, பாண்டியரின் குடைகள் சோழர் குடையினும் தாழப்பறந்தன எனக் குறிப்பிடுகின்றார் கோவூர்கிழார்.

**"சிறப்புடைய மரபிற் பொருளும் இன்பமும்**
**அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல**
**இருகுடை பின்பட வோங்கிய ஒருகுடை**
**உருகெழு மரபின் நிவந்தசேண் விளங்க"**[77]

மூவேந்தரும் ஒருங்கிருந்த காட்சி, காண்டற்கரிய இருந்தது என்றார் காரிக்கண்ணனார்.

**"நல்ல போலவும் நயவ போலவும்**
**தொல்லோர் சென்ற நெறிய போலவும்**
**காதல் நெஞ்சில் நும்இடைபுகல் கலமரும்**
**ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது**
**இன்றே போல்க நும் புணர்ச்சி"**[78]

உக்கிரபெருவழுதி, மாரிவெண்கோ, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகிய மூவேந்தரும் ஒருங்கிருந்த காட்சியைக் கண்ட ஔவையார்,

**"ஒன்றுபுரிந்து அடங்கிய இருபிறப் பாளர்**
**முத்தீப் புரையக் காண்டக இருந்த**
**கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்"**[79]

என்னும் பாடலின் மூலம் அறிய முடிகிறது. தன்னை ஏற்காதவரை வெற்றி பெறவேண்டும், நினைத்ததை முடிக்கும் அரசன் சிறப்பு, பழைமை கோட்டையைக் கவரும் விருப்பம், படைப்பெருக்கம், அரணுள் இருக்கும் செல்வம் என்பதுள்ளிட்ட பல்வேறு காரணங்கள் எண்ணங்கள் அரசனுக்குத் தோன்றும் போது அங்கு போர் ஏற்படலாம். மண்ணாசையும், நாட்டுக்காப்பு பற்றிய எண்ணமும், படையெடுப்பு உள்ளிட்ட எல்லைத்தகராறும், ஆட்சி பரப்பு பற்றிய கருத்து வேறுபாடும், ஆட்சி உரிமை, அரசியல் ஆதிக்கம் போன்ற மறைமுகக் காரணங்களால் நிகழ்காலத்து போர் தோன்றுகிறது என்று கருதப்படுகிறது.

ஆப்கானிஸ்தானில் தலிபான் ஆட்சியை அகற்ற வேண்டும் என்று தோன்றிய போரையும், வியட்நாமில் அரசியல் ஆதிக்கம் பெற வேண்டும் என்ற எண்ணத்திலும் நடைபெற்ற அமெரிக்காவில் நடத்தப்பட்ட போரையும் சுட்டிக்காட்டலாம். ஒற்று எனப்படும் உளவு படையெடுத்து செல்லலிலும் முன் அடிப்படையெடுப்பு எப்படி நடத்தப்பட்டால் வெற்றி பெறமுடியும். எதிரியின் பலம் என்ன பலவீனம் என்ன என்பது குறித்து நடத்தப்படுவதே ஒற்று என்று சுட்டப்படுகிறது. இது

**“படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி**
**புடைகெடப் போகிய செலவே, புடைகெட**
**ஒற்றின் ஆகியவையே, வேய்ப்புளும்**
**முற்றின் ஆகிய புறத்திரை”[80]**

என்று வெட்சித்திணை நூற்பாவில் சுட்டிக்காட்டுகிறார். அமெரிக்காவின் சிஐஏ என்ற உளவுப்படையும், பாகிஸ்தானின் ஐஎஸ்ஐ இந்தியாவின் ராணுவ உளவுப்படை அமைப்பு என்பவை வெளியுலகத்திற்கு அடிக்கடி தெரிந்திருப்பது போலவே ஒவ்வொரு நாடும் தனக்கென ஓர் உளவுப்படை அமைப்பைக் கொண்டு போர் புரிதலைச் செய்வதைக் காணலாம்.

**போர் அறம்**

ஒழுக்கம் என்பது ‘‘ஞாலத்து வரூஉம் நடக்கை’’ என்பர். ஒழுக்கம் அகத்திணை, புறத்திணை என இரண்டு வகைப்படும். இத்திணைகளின் மூலம் இலக்கிய மாந்தர்கள் எவ்வாறு அறத்துடன் விளங்க வேண்டும் என்று இலக்கணம் வகுத்தார். புறத்திணையில் முதலில் போர் எவ்வாறு நடைபெற வேண்டும் என்ற விதிமுறையினைக்கூறிய தொல்காப்பியர் வாகை, காஞ்சித்திணையின் மூலம் போரைத் தடுக்கும் அறச்செயல்களைக் கூறி சமுதாயத்தைப் போர் நெறியிலிருந்து காத்தார். போர் இல்லா நல்லதோர் சமுதாயத்தை அமைக்க முற்பட்டார். முனிதன் தன் வாழ்க்கையின் இறுதிநிலையில் செம்மை அடைய வேண்டும் என்பதற்காக இளமை, செல்வம், உயிர் நிலையாமை பற்றி எடுத்துக் கூறிகின்றார்.

**“நில்லா உலகம் புல்லிய நெறித்தே”[81]**

**"கடிமனை நீத்த பாலின் கண்ணும்**
**எட்டுவகை நுதலிய அவையகத்தானும்**
**கட்டமை ஒழுக்கததுக் கண்ணுமையானும்**
**இடையில் வன்புகழ்க் கொடையினானும்**
**பிழைத்தோர்த் தாங்கும் காவலானும்**
**பொருளோடு புணர்ந்த பக்கத்தானும்**
**அருளோடு புணர்ந்த பக்கத்தானும்**
**அருளோடு புணர்ந்த அகற்சியானும்**
**காமம் நீத்த பாலினானுமென்று"**[82]

என்பதிலும் காணலாம். தெரிவுகொள் செங்கோல் அரசா் என்பதன் மூலம் செங்கோல் வளையாத அறம் பிறழா அரசியல் அமைப்பு, மறச் செயல்களை அறச் செயல்களுடன், நல்ல அரசாட்சியை அமைத்து பகைவரையும் நட்பாக்கிக் கொள்ளும் அறத்தை நனி நாகரிகமாகப் புறத்திணை மாந்தா்களின் மூலம் படைத்துக்காட்டுகின்றனா்.

கொலை மலிந்த போா்களத்தில் அற அடிப்படையிலான சில வரையறைகள் சங்க காலத்தில் இருந்திருக்கின்றன. போா்க்குறிப்பு இல்லாதவனோட பொருதல், தன் கருத்தை வெளிப்படுத்தாமல் நெடுங்காலம் கோட்டையை அடைத்து உள்ளே வாளாவிருத்தல் ஆகியன நாணுத்தகவுடைய செயல்கள் எனப்பட்டன. போா் தொடங்குவதற்கு முன்னா்,

**"ஆவும் ஆனியற் பாா்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலம் வாழ்நா்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதல்வா்ப் பெறாஅ தீரும்**
**எம்மம்பு கடிவிடுது நும்மரண் சோ்மினென**
**அறத்தாறு நுவலும் பூட்கை----"**[83]

உடையவா் தமிழ்வேந்தா் என்பதறியப்படுகிறது. வீரநிலைக் காலப்போருக்கும், சங்க காலப்போருக்கும் வேறுபாடு உண்டென்பதை இப்பாடல் தெளிவுறக் காட்டுகின்றது. வீரநிலைக் காலப் போா்களில் ஆநிரை, பாா்ப்பனா், பெண்டிா், பிணியாளா், மகப்பெறாதவா் என விலக்கிப் போா் மறவரோடு மட்டும் போரிடும் நிலை இல்லை. சங்க காலத் தமிழ்ச்

சமூகத்தில் வைதிக சமயம் தன் கோட்பாடுகளைப் படர விட்டதன் விளைவே ஆநிரை, பார்ப்பனர் உயிர்கட்குத் தீங்கு விளைக்கக் கூடாது என்ற எண்ணமாகும். சமண பௌத்த நெறிகள் உயிர்க் கொலையைக் கடுமையாகக் கண்டித்த சமயங்கள் ஆகும். இவற்றிடமிருந்து இவ்வருளற நெறியைப் பின்பற்றிய வைதிக சமயம், பசுவைத் தெய்வமாகவே வழிபட்டதன் விளைவாகப் பசுவைக் கொல்லுவது என்பது கொடிய தீவினையாகக் கருதப்பட்டது.

அகநானூற்றில் ஆகோள் மறவர் கொழுத்த பசுவை வெட்டி உண்ணும் வழக்கத்தினர் என்பதை அறியலாம். ஆவும் ஆனியற் பார்ப்பனமாக்களும் என்ற புறப்பாட்டில் பசுவும் பார்ப்பனரும் பாதுகாக்கப்பட்ட வேண்டும் என்பதும் புதல்வரைப் பெறாதவரைப் போர் முகத்திலிருந்து விலக்கி விடுக என்பதும் தூய வைதிக சமய எண்ணங்களாகும். இப்பாடலிற் புகழப் பெறும் பாண்டிய வேந்தன் வேத வேள்விகளில் விருப்பமுடையவனாகவும், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பெயருடையவனாகவும் இருந்திருக்கிறான் என்பதும் எண்ணத்தகும் போரிற் புறங்கொடுத்தல் இழிந்த செயலாகவும், அவ்வாறு புறமுதுகிட்டோர் மீதுவாளோச்சுதல் அறக்கேடாகவும் கருதப்பட்டிருக்கிறது. போரிற் பின்னிடலும், முதுகு காட்டலும், முதுகிற் புண்படலும் நாணத்தக்க செயல்களாக வேறெந்த நாட்டு இலக்கியங்களிலும் கூறப்படவில்லை. மார்பிற் புண்படுதலும், புண்மலிந்த உடம்பினன் ஆதலும், போர் வீரர்க்குப் பெரும் புகழைத் தரும் செயல்களாகக் கருதப்பட்டிருக்கின்றன.

**“ஊறறியா மெய்யாக்கையொடு**
**கண்ணுக் கினியார் செவிக்கின் னாரே”**[84]

எனப் போரில் விழுப்புண் பெற்றவர் சிறப்பும், பெறாதவர் இழிவும், கூறப்படுகின்றன. தன்னைக் குறித்துக் கரிகாற் பெருவளத்தான் எறிந்த வேல் தன் மார்பை ஊடுருவிப் புறம் போனதற்கு நாணிப் பெருஞ்சேரலாதன் வடக்கிருந்த செய்தியைப் புறநானூற்றில் இரு பாடல்களும், அகநானூற்றில் இரு பாடல்களும் காட்டுகின்றன.

. சங்க காலத்தை வீரயுகக்காலம் என்பர். **“ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை”**[85]**.** சங்ககால வீரர்கள் என்றும் போர் வேட்கை உடையவர்களாய் இருந்தனர். வெட்சிப்போர், வஞ்சிப்போர், உழிஞைப்போர்,

தும்பைப்போர் என்று நான்கு வகையாகப் போர் மரபுகளைப் பகுத்தார் தொல்காப்பியர். போரில் படைமறவர்கள் அழிவர். யானை, குதிரை, தேர் விளைநிலம், அரண் ஆகியவற்றோடு மக்களும் அழிவர். வேந்தர்களும் மடிவர். சேரமான் நெடுஞ்சேரலாதனும், சோழன் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு மடிந்ததைப் புறநானூறு கூறுகின்றது.

**நடுகல்**

சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளைக் கொண்டிருந்தவர்களின் இறப்பிற்குப் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல்லே நடுகல் ஆகும். நடுகல் என்றால் நடப்பட்ட கல் எனப் பொருள்படும் இதனை அகநானூறு 'நட்டபோலும் நடாஅ நெடுங்கல்' எனக் குறித்துள்ளது. வீரத்தினைப் போற்றும் பண்பின் அடிப்படையில் தோன்றிய நம்பிக்கையின் பாற்பட்ட நிலையில் நடுகல் வழிபாடாக உருப்பெற்றது. வீரயுகத்தில் நினைவுச் சின்னமாகக் கருதப்பட்ட ஒன்று காலப்போக்கில் வழிபாடாக மாற்றம் பெற்றதனையே இது காட்டுகிறது. நடுகல்லுக்குரியோராகப் போரில் மாய்ந்தோர், கறவையினை மீட்டோர், வடக்கிருந்தோர், பத்தினிப் பெண்டிர் ஆகியோர் அமைகின்றனர். உயிர்நீத்த பின்னரே நடுகல் எடுக்கும் வழக்கம் நிலவியதனை மேற்காட்டிய சான்றுகள் தெரிவிக்கின்றன. வடக்கிருந்து உயிர்துறந்தோர்க்கு நடுகல் எடுத்தல் தன் நிலைமையில் தாழ்வு, மானம், நட்பு ஆகிய நிலைகளில் அமையக்காண்கிறோம். தொல்காப்பியர் புறத்திணையுள் வெட்சித்திணையின் மறுதலையாகிய நிரைமீட்டலாகிய கரந்தைத் திணைத்துறைகளுள் நடுகல் எடுக்கும் வழக்கத்தினை,

> **"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
> **சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று**
> **இருமூன்று மரபிற் கல்லொடு புணர"**[86]

எனக்குறித்துள்ளார். வீரத்தினையே உயர்வாகக் கருதிய வீரயுகத்தில் தோன்றிய நடுகல் எடுக்கும் வழக்கம், காலப்போக்கில் வேறு சில சமுதாய மதிப்புப் பெற்ற மனிதப் பண்புகளுக்கும் சிறப்பிளித்ததை நட்பு, மானம், புகழ் ஆகியவற்றிற்காக உயிர்நீத்து நடுகல்லான மாந்தரின் வாழ்வியல் நிகழ்ச்சியை உணர்த்துகின்றன. இறந்து போனவர்களுடைய ஆன்மாவிற்கு ஆற்றல் அதிகம் எனவும் அது ஆக்க சக்தியாகவும் அழிவு சக்தியாகவும் வெளிப்படலாமென்பது கல்நட்டோரின் நம்பிக்கையாகும்.

முன்னோர் வழிபாட்டையம் நடுகல் வழிபாட்டையும் ஒன்றாகவே கருதுவர். இவை வேறு வேறு என்பதனை இலக்கியச் சான்றுகள் தெளிவாக்குகின்றன. பழந்தமிழ் இலக்கியத்தில் குறிக்கப்படும். தென்புலத்தாரே நமது முன்னோராவர். முன்னோர்க்கு நடுகல் எடுத்ததற்கான சான்று இலக்கியத்தில் சுட்டப்படவில்லை எனினும் தென்புலத்தார் வழிபாட்டாலும் நடுகல் வழிபாட்டிலும் வழிபடுவோருக்க உதவும் நிலையில் ஒன்றிணைந்த நம்பிக்கையே இரண்டையும் ஒன்றாகக் கருதும் போக்குக்குக்ட காரணமாகலாம். இவ்விரண்டிற்கும் பொதுவானதாக அமைவது வழிபட்டோர்க்க உதவுதல் என்ற நம்பிக்கையே. அதிலும் நடுகல் வழிபாடு வழிபட்டோர் அனைவருக்கும் உதவும் நிலையில் அமைகின்றது.

வீரத்தையும் பாராட்டுவதற்காகத் தோன்றிய நடுகல் வணக்கம், காலப்போக்கில் மனிதனின் பிறபண்புகளைப் பாராட்டும் நிலையினதாக அமைவதனை வடக்கிருந்தோர் நடுகற்கள் தெரிவிக்கின்றன. நடுகல் எடுக்கும் வழக்கம் சங்ககாலத்தில் ஆண்களுக்குரிய ஒன்றாகக் காட்டப்படுகிறது. காலப்போக்கில் பெண்ணுக்கும் நடுகல் எடுத்து கடவுளாக்கிய நிலையினை முதன் முதலில் சிலம்பில்தான் காண்கிறோம். இளங்கோவடிகள் தொல்காப்பியர் காட்டும் நெறியில் நின்று கண்ணகிக்குக் கல்நட்டுக் கடவுளாககிய புதுமையினைச் செய்துள்ளார். இதனைக் காலத்தால் ஏற்பட்ட வழிபாட்டு மாற்றம் எனக் கொள்ளுதல் பொருந்தும். ஆனால் ஜி.எல். ஹார்ட் என்பவர் கணவனை இழந்த பெண்டிர் தீப்பாய்ந்து உயிர்நீத்தபின் அவர்களுக்குக் கல்நடும் வழக்கம் தென்னிந்தியாவில் பரவலாகக் காணப்பட்ட தெனினும் அதனை இலக்கியங்கள் சுட்டவில்லையெனக் கூறி அடிக்குறிப்பில் கண்ணகிக்குக் கல்நாட்டியதனைச் சான்றாக்குகின்றார். இவற்றிலிருந்து சங்க இலக்கியத்தில் பெண்களுக்கு நடுகல் எடுக்கும் நிலை இல்லாதிருந்தமை புலனாகின்றது. சிலம்பில் செங்குட்டுவன் இறவாது வானுலகடைந்த கண்ணகிக்குக் கல் எடுத்துப் பத்தினிக் கோட்டம் அமைத்தமை கடவுள் வழிபாடு என்ற நிலையில் நோக்கத்தக்கதாகும். ஒரு சமுதாயத்தினுடைய மரபு அச்சமுதாயத்தில் வாழும் மக்களின் நிலையைக் கொண்டே நிர்ணயிக்கப்படுகிறது. தமிழ் இலக்கிய மரபில் சங்ககாலப் பொதுமக்களிடத்தில் வீரம் முக்கியமான ஒன்றாகப் போதிக்கப்பட்டிருக்கிறது என்பதை,

**“குழவி யிறபினு மூனறடி பிறப்பினும்**
**ஆளன் றென்று வாளிற் றப்பார்”**[87]

என்கிறது புறம். மேலும் இறப்புப்பற்றிக் குறிப்பிடும் போது குழந்தை இறந்த நிலையிலோ அல்லது தசைப்பிண்டமாகவோ பிறந்தாலும் அப்படியே எடுத்துப்புதைத்து விடாமல் உடம்பில் கத்தியால் கீறி ஒரு வீரத் தழும்பை உண்டாக்கி விட்டே புதைக்க வேண்டும் என்ற மரபு சங்க காலத்தில் இருந்திருக்கிறது. போர்க்களத்தில் இறந்துபடுகிற தலைவன் நேரே வீரச் சொர்க்கத்தை எட்டிப் பிடிக்கிறான் என்பது அக்கால நம்பிக்கை அப்படி வீரச் சொர்க்கத்திற்குப் போகிற தலைவனை விட்டுபெரிய விரும்பாத தலைவி தன் உயிரை விட்டுத் தன் கணவனுக்கு முன்னாலே சொர்க்த்திற்குப் போக நினைப்பதை,

**“தரைமகள்தன் கொழுநன்தன் உடலந் தன்னைத்**
**தாங்காமல் தன்னுடலால் தாங்கி விண்ணாட்டு**
**அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்**
**ஆவியொக்க விடுவாளைக் காண்மின் காண்மின்”**[88]

என்ற பாடல் உணர்த்துகிறது. வீரர்களுக்கு எவையெல்லாம் கருவியாக இருந்தனவோ அக்கருவிகளையும் நடுகல்லொடு சேர்த்து வைத்து வழிபடும் வழக்கத்தைப் பட்டினப்பாலை, ‘கிடுகு நின்றத்தெகு கூன்றி நடுகல்லிரைன் போல’’என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. ஆழகான கல் ஒன்றை வெட்டியெடுத்து அதில் இந்தப் போர்களத்தில் இவ்வாறு இறந்தான் என்பதை எழுதிச் சுருக்கமான வரலாற்றோடு உலகமறிய வாழ்த்தி எழுதி மராமரத்தின் நிழலில் நட்டு அதைத் தெய்வமாகப் போற்றியதை,

**“செல்லுந் தேஎத்துப் பெயர்மருங் கறிமார்**
**கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த**
**கடவுளோங்கிய காடேசு கவலை”**[89]

என்று கூறுகின்றன. இவ்வாறு உலகறிய வீரத்தோடு வாழ்ந்த மறவர்களைப் பாராட்டி வணங்கும் வழக்கம் நல்ல மரபாகும். நடுகல் கடவுளை வழிபடுவதற்கு அக்கல்லில் மயில்தோகைகளை அணிவித்துத் துடியை அடித்து நெல்லாலாகிய கள்ளோடு செம்மறி ஆட்டின் குட்டியையும் பலி கொடுத்துக் கொண்டாடியிருக்கிறார்கள் என்பதை,

**“நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்**
**தோப்பிக் கள்ளொடு துருஉட்பலி கொடுக்கும்**
**போக்கருங் கவலை”**[90]

என்ற அகநானூற்றுப் பாடலாலும் அறிய முடிகிறத. இன்றும் தமிழகத்தில் கிராமப்புறங்களில் காக்கும் கடவுளாக விளங்கும் மதுரைவீரன், இருளன், கருப்பன் முதலியவர்களின் வணக்கம் நடுகல் வழிபாட்டிலிரந்து உருவான எச்சங்களாக இருக்கலாம். சங்க இலக்கியம் உருவான காலம் போர் மிகுந்த காலம் என்பர். அதனால் அதற்கேற்ப நடுகல்லைத் தொட்டு வழிபடும் வழக்கமும் சான்று தருகிறது. வீரநிலைக் காலத்துக் குடி மக்களிடம் நடுகல்லை வழிபடும் வழக்கமே நிலவியிருந்தது, கண்ணால் காண முடியாத கற்பனையில் உருவான தெய்வங்களை வழிபடுவதை விடக்கண்ணுக்கு முன்னால் வாழ்ந்து வழிகாட்டித் தம்மவர்க்கு வெற்றி தந்து மறைந்திருக்கிற வீரர்களை வழிபடுவதே சிறந்தது என போற்றி வந்தனர்.

இத்தகைய மறவர்களுக்குச் சிறப்புச் செய்யும் மரபு தமிழகத்தில் மட்டுமல்லாமல் கிரேக்கம் முதலிய நாடுகளிலும் நிலவியிருந்தது. பெரிக்கிளிசு தன்னுடன் போரில் ஈடுபட்டு வீர மரணம் அடைந்த மறவர்களின் வீரத்தைக் குறித்து ஆற்றிய சொற்பொழிவு இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்டும் கூட அதனைச் சிறந்த சொற்பொழிவாகக் கருதும் நிலைக்கு உயர்வு பெற்றுள்ளதாக வெ. சாமிநாதசர்மா கூறுவார். இவ்வாறு நடுகல்லைத் தெய்வங்களாக்கி வழிபடும் உயர்ந்த மரபைச் சங்ககால மக்களின் வாழ்க்கைத் தரத்தை நிர்ணயிப்பதற்குரிய அளவுகோலாகக் கொள்ளலாம்.

**நீதி**

நீதி வழங்குதல் முறை செய்தல் எனப்பட்டது. அறநெறி தவறாமைக்கு அடையாளமாகக் கொள்ளப்பட்டது. அக்கால மக்கள் எவ்வித வேறுபாடும் இல்லாமல் தப்புச் செய்தவர்களுக்குத் தண்டனை வழங்கினார்கள். நீதி வழங்கும் இடம் மன்றம் எனப்பட்டது. நீதிமன்றத்தில் காவிதிப்பட்டம் பெற்ற அமைச்சர்கள் இருந்தனர்.

அவர்கள் நடுநிலையில் நின்று நீதி வழங்கினர். நீதி வழங்கும் இடம் அறங்கூரையம் அல்லது நீதிமன்றம் எனப்பட்டது. **“அறம்அறக் கண்ட நெறி மாண் அவையத்து”**[91] என்கிறது புறம். அக்காலத்தில் பொய்யான சாட்சி கூறுதல் தவறு. அன்றியும் தேவையான சாட்சியைத் தெரிந்தும் கூறாமல் இருத்தலும் தவறு என்று சுட்டுகிறது நற்றிணை. நீதியை நான் என் இதயத்திற்குள்ளேயே ஒருநீதிமன்றம் அமைத்து மௌனமாக விசாரணை செய்து கொண்டிருக்கின்றேன் என்கிறார் மகாத்மா காந்தி. பாண்டிய மன்னன் நீதி தவறியபோது உயிரைவிடவும் துணிந்தான். ஆராயாது கோவலனைக் கொன்ற பாண்டியனின் உயிர் உடனே பிரிந்தது. இதனை,

**“பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட**
**யானோ அரசன்! யானே கள்வன்**
**மன்பதை காக்கும் தென்புலங் காவல்**
**என்முதற் பிழைத்தது கெடுக! என் ஆயுள்”**[92]

என்ற இப்பாடல் நீதி தவறியமைக்குப் பாண்டியன் தன் நெஞ்சிற்குத் தண்டனை வழங்கியதைச் சுட்டுகிறது. மேலும் குற்றம் செய்தமைக்காதகத் தன் கையைக் குறைத்துக் கொண்டான் பொற்கைப் பாண்டியன். மனிதனுக்கு மட்டுமின்றி விலங்குக்கும் நீதிவழங்க வேண்டும் என வற்புறுத்தும் வரலாறுகள் மனுநீதிச்சொழன் வரலாறும் சிபியின் வரலாறுமாகும்.

மன்னனால் நாட்டு வழக்குகள் அனைத்தையும் கேட்டு நீதி வழங்க இயலாத நிலையில் அரசன் நீதிமன்றத்தை அமைத்து அந்நீதிமன்றங்களில் அறிவார்ந்த சான்றோர்களை நடுவராக அமைத்து மக்களுக்கு முறையான நீதி கிடைக்க வழிவகுத்தான். மன்னன் நீதிபதிகளைத் தேர்ந்தெடுத்ததை, **“அறம்நிலை திரியா அன்பின் அவைத்துத் திறனில் ஒருவனை நாட்டிமெலிதோல் செய்தேனாகுக”**[93] என்று குறிப்பிடுகிறது புறம். மேலும் சான்றோராக இருப்பதற்குச் சில தகுதிகள் இருக்க வேண்டும் என்கிறது மதுரைக்காஞ்சி.

**‘குன்றுபல குழிஇப் பொலிவன தோன்ற**
**அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி”**[94]

இப்பாடலில் அச்சம். ஆவலம், காட்சிக்கு எளியவராக இருப்பதைத் தகுதிகளாகக் குறிப்பிடுகிறது. மேலும் சான்றோராக இருப்பதற்குக் குடிப்பிறப்பு, கல்வி. ஒழுக்கம். வாய்மை, தூய்மை, நடுநிலை, அழுக்காறின்மை அவாவின்மை போன்ற தகுதிகள் வேண்டப்படுகின்றன. மன்னன் நீதி தவறினால் நாட்டில் மழை பெய்யாது. அதனால் முறையறிந்து மன்னன் நீதி வழங்கி நாட்டில் வளர்ச்சியை உண்டாக்கினான். இதனை,

**“கோவில்நிலை திரியின் கோள்நிலை திரியும்**
**கோள்நிலை திரிவறங் கூறும்”**[95]

என்கிறது மணிமேகலை.

சங்க காலத்தில் ஆன்முலையறுத்தல், மகளிர் கருச்சிதைத்தல் போன்றவை பெருங்குற்றங்களாகக் கருதப்பட்டன. களவுக்கு அப்பாற்பட்ட காதலில் ஏமாறியவர்கள் காதலைச் சேர்த்து வைக்க நீதிமன்றத்தை நாடினர். இதனை,

**"திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனி லாளன் அறியேன் என்ற**
**திறன்இல் வெஞ்சூள் அறிகரி கடாஅய்"**[96]

என்கிறது அகம். மேலும் கற்பைக் கவர்ந்தவர்கள் அதனை இல்லை என்று மறுத்த நிலையில் தண்டனை வழங்கப்பட்டது. 'கள்ளூர் என்னும் ஊரில் இளம்பெண் ஒருத்தியின் கற்பைக் கவர்ந்தவன் அவளைத் தெரியாது என்று சூளுறைத்தான். அவையத்தார் அவன் செயலை ஆராய்ந்து அவனுக்குத் தண்டனை வழங்கினர் என்பைதச் சுட்டுகிறது அகநானூறு. இவற்றின் மூலம் அக்காலத்தில் நீதி எவ்வுயிர்க்கும் பொதுவாக இருந்ததை அறிய முடிகிறது.

மனிதன் வரையறுத்துக்கொண்ட ஒழுக்க நெறிமுறைகளின் தொகுதியே அறம் எனப்படுகிறது. அறக்கருத்துக்கள் மனிதனின் மனதைச் செம்மையுறச் செய்கிறது. அறம் என்பது நீதியை உணர்த்துவதோடு பழந்தமிழர் பண்பாட்டையும், உயர்ந்த நெறியையும் வாழ்வியல் தத்துவத்தையும் உணர்த்துகிறது. இவ்வுலகிற்கு நல்வழிகாட்டியாக உலக மக்களால் பெரிதும் போற்றப் பெறுவதாகிய இறையாற்றலையும் உணர்த்துகிறது. அறம் செய்ய விரும்பு என்கிறார் ஔவையார். அறம் என்ற சொல் தமிழ் இலக்கியத்தில் ஒழுக்கம், நீதி புண்ணியம் ஈகை அறக்கடவுள் சமயம் என்னும் பல பொருளில் வழங்கப்படுகின்றன. இந்தியப் பண்பாட்டுத் தளத்தில் அடிப்படையாகத் தர்மம் என்ற சொல் வழங்கப்படுகிறது. நிலை நிறுத்தப்பட்ட மனித கடமைகளை வலியுறுத்துவது அறம். மேலும் மதம், மரபு, பாரம்பரியம் பழக்கவழக்கங்கள் வாழ்க்கை முறை நடைமுறைச் செயற்பாடுகள், நீதிநெறிமுறை, குணச்சிறப்புகள், குணத்தன்மைகள், சமுதாய ஒழுக்க நெறிமுறைகள் இன்னும் பல்வேறுபட்ட கடமைகள் முதலிய பலவும் அறம் என்ற சொல்லில் அடங்கும்.

**"அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்**
**மறவாது இதுகேள் மன்னுயிர்கெல்லாம்**
**உண்டியும் உடையும் உறையுளும்"**[97]

என்று அறத்திற்கு சிறந்ததோர் உதாரணம் காட்டுகிறது மணிமேகலை. தனக்கும் உலகிற்கும் நன்மை தரும் பொருட்டு தீமை தராத வழியில் சென்ற பொருள் ஈட்டி இன்பம் அனுபவிக்கும் கிடைக்கக் கூடிய அடிப்படை விதிகளைப் பெற்று வாழ்வதும் அறமாகும்.

அறமாவது காலம், இடம், சூழ்நிலைப் பொறுத்து அமையும் அறம், இல்லறம், துறவறம், சொல்லறம், நட்பறம், போர் அறம், வேட்டல் அறம் போன்ற பல துறைகளிலும் பேசப்படுகிறது. மனம், சொல், செயல் எனப்படும் மூன்று நிலைகளிலும் தடம் புறளாத தவமே அறமாகும் தவறுகள் தடுக்கப்படுவதற்கும் மனிதநேயம் வளர்வதற்கும் அறக்கருத்துக்கள் காரணமாக அமைகின்றன என்பதை,

**“அறவை ஆயின் ‘நினது’ எனத்திறத்தல்**
**மறவை ஆயின், போரொடு திறத்தல்**
**அறவையும் மறவையும் அல்லையாக**
**திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்”**[98]

என்கிறது புறம். விரும்பிச் செய்யும் செயலால் நன்மையே விளையும் என்பதால் அறத்தை விரும்பி செய்ய வேண்டும். இதனை முகம் மலர்ந்து மனத்தின் அடி ஆழத்திலிருந்து இனிமையான சொற்கள் சொல்வதுமான அறம் என்கிறார் வள்ளுவர்

**“முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்**
**இன்சொ லினிதே அறம்”**[99]

என்கிறது. உயர்ந்த குறிக்கோள் கொண்டு மனிதன் வாழ வேண்டுமானால் அவன் அறநெறியைப் போற்றி வாழ்தல் சிறப்பு “தனி மனிதனையும் சமுதாயத்தையும் வளம்பெறச் செய்வதும் மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதும் அமைதியோடு வாழச்செய்வதும் அறம், தவம் என்னும் இரு உயர் முறைகளேயாகும்” என்கிறார். வேதாத்ரி மகரிஷி மேலும் வாழ்க்கை வட்டத்தில் போகிற போக்கில் அறத்தைச் செய்ய வேண்டும் என்கிறார் நாலடியார்,

**“பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்குடன்**
**ஓசை யவிந்தபின் ஆடுதும் என்றாற்றல்**
**இல்செய் குறைவினை நீக்கி அறவினை**
**மாற்றி வாம் என்றிருப்பின் மாண்பு”**[100]

தனி மனிதவாழ்வில் அமைந்த சிறிய செயல்களைச் செய்துவிட்டுப் பின் அறம் செய்வோம் என்பது இழிசெயல் என்றும் அலை ஓய்ந்தபின் கடலில் நீராடல் என்பதற்கு ஒப்பானது என்பது நாலடியாரில் விளக்கப்படுகிறது. அறமாகிய நற்செயல்களை வாழ்வின் கடமைகளை நிறைவேற்றியப்பின் செய்வோம் என்பது மூடத்தனம். முனித வாழ்வின் அடிப்படையாக அறத்தைக் கைக்கொள்ள வேண்டும் இதனால் மனித சமூகம் முழுமையும் எல்லாச் செயல்களையும் உண்மையான அறத்துடன் மேற்கொண்டால் முழுப்பயனை அடைய வழிவகை ஏற்படும்.

**மன்னர்**

புன்செய் நிலப்பகுதியின் உடைமையாளர்களான இவர்கள் ஆண்டநிலப் பகுதி **“புன்புலம் தழீஇய அம்குடிச்சீறூா”**[101], என்றும், **“புன்புலச் சீறூர் நெல்விளையாதே”**[102], என்றும் கூறப்பட்டுள்ளது. வரகு, தினை, கொள், அவரை மட்டுமே விளைகின்றன. மன்னனும் அவன் மனைவியும் மக்களோடு மக்களாக வாழந்தனர். இவர்கள் வீரம்சார்ந்த பெயர்களாலும் மன்னர் என்ற பெயராலும் குறிப்பிடப்படுகின்றனர். கொடுப்பதற்குப் பொருள் ஏதுமில்லாத நிலையில் வரகுக் கடன்பெற்றும் வாளையும், சீறி யாழையும் பணயமாக வைத்தும் விருந்து பேணும் பண்பினராக இருந்தனர்.

விதைக்காக வைத்திருந்த தினையைக் கூட இடித்துச் சமைத்து உணவு பரிமாறுபவளாகச் சீறூர்த்தலைவி இருந்தாள் என்பதைப் புறநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. இனக்குழுச் சமுதாயத்தின் பொதுப்பண்பு ‘பொதுவில் வைத்து உண்ணுதல்’ என்பதாகும். இதன் தொடர்ச்சி இன்றும் கிராமப்புறங்களில் காணக்கூடியதாக உள்ளது. வேந்துவிடு தொழிலில் ஈடுபட்டவர்கள் இவர்கள். (புறம். 319, 320, 326) இந்தத் தொழில் ஈடுபடாத பாரி மூவேந்தர்களால் அழிக்கப்பட்டதைச் சீறூர் மன்னர் அழிவிற்கான அடையாளமாகப் புறநானூறு பதிவு செய்துள்ளது. மன்னர் வாழ்ந்த இனக்குழச் சமுதாயத்தில் வீரவணக்கம் பெருவழக்குடையதாகும். மாடுபிடி சண்டையில் இறந்தவர்களுக்கு நடுகற்கள் வைக்கப்பட்டன. இதனை வழிபடுவது வீரவணக்கமாகும்.

**“நல்லவர் கடந்த நாணுடை மறவர்**
**பெயரும் பீடும்எழுதி அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்**
**வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்”**[103]

வேந்தர் சமுதாயத் தாக்கம் ஏதுமற்ற இனக்குழுச் சமுதாயத்தில் மாடுபிடி சண்டையில் இறந்த வீரர்கள் தம்மோடு வாழ்கின்றனர் என்ற நம்பிக்கை வகைப்பாட்டை வழிபாடாகக் காணமுடிகிறது.

ஆவியர், மழவர், வேளிர் போன்ற பல்வேறு தொல்குடிவழி வந்தவர்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் குறிப்பாக மலையும் மலைசார்ந்த பகுதிகளையும் ஆட்சி செய்தனர். நன்னன், அதியமான், பாரி, காரி, ஆய் அண்டிரன், பேகன், கண்டீரக்கோப்பெருநள்ளி, இளவிச்சிக்கோ, ஓரி, குமணன், பிட்டங்கொற்றன், ஏறைக்கோன், கொண்கானங்கிழான் முதலியோரைப் பற்றிப் புறநானூறு பேசுகின்றது. சங்ககால மக்களின் சமூக அடையாளமாகக் குறுநில மன்னர்கள் பின்பற்றியக் 'கொடை', சிறப்புடைய அறமாகத் திகழ்ந்தது. வேந்தர்களின் நாடு கொள்ளும் ஆசையில் குறுநில மன்னர்கள் பலியாயினர்.

வேந்தர்கள் சமுதாயம் என்பது பாண்டியர், சேர, சோழர் என மலர்ந்தது எனலாம். குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு என அழைக்கப்படும் நிலப்பரப்பில் பாண்டியர் ஆட்சி இருந்தது. சோழ அரசினர் இருவேறு குடிகளாகப் பிரிந்து உறந்தையையும், அழுந்தூரையும் ஆட்சி செய்தனர். சேர மரபினரும் இருகுழுவினராக, இரும்பொறை, கருவூரிலிருந்தும், உதியன் சேரன் குழுமூரிலிருந்தும் ஆட்சி செய்துள்ளனர். சிறுசிறு தலைவர்களையெல்லாம் வென்று உயர்ந்ததன் நோக்கம்,

**"தென்குமரி வடபெருங்கல்**
**குணகுட கடலா எல்லைத்**
**தோன்று மொழிந்து தொழில் கேட்ப**
**வெற்றமொடு வெறுத்து ஒழுகிய**
**கொற்றவர்தம் கோன் ஆகுவை"**[104]

என மதுரைக்காஞ்சி குறிப்பிடுவது போல, தமிழ்மொழி பேசப்படும் இடமெல்லாம் தம் கீழ்க் கொண்டுவர வேண்டும் என்பது தான். மேலும் குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாராட்டும் முகமாகப் பாடினார். வேந்தர்களைப் புலவர்கள், **"விழுநீர் வேலிநாடு கிழவோன"**[105], **"கடல் ப∴றோரத்த நாடுகிழவோய"**[106], **"நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்து"**[107], எனக்கடலை வேலியாக உடைய நிலத்துக்கு உரியவன், கடல்தரு பல்வளம் உடையவன், மண்ணாள் செல்வம் அடைந்தவன் எனப் புகழ்கின்றனர். நால்வகை

நிலங்களையும் தனித்தனியே ஆண்ட நிலைமாறி நானிலத்தையும் ஒருவரே பொதுவின்றி ஆண்ட நிலை உருவானது. பாண்டிய நெடுஞ்செழியன் நானிலத்தோடு வழிபடுமளவிற்கு ஆட்சி செய்தவனாக அறியப்படுகிறான்.

**"நாடன் என்கோ? ஊரன் என்கோ?**
**பாடுஇமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ?**
**யாங்கனம் மொழிகோ, ஓங்கு வாள் கோதையை?**
**புனவர் தட்டை புடைப்பின், அயலது**
**இறங்கு கதிர்அலமரு கழனியும்,**
**பிறங்கு நீர்ச் சேர்ப்பினும், புள் ஓருங்கு எழுமே!"**[108]

எனச் சேரன் கோக்கோதை மார்பனாக பேசப்படுகிறான். குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய மூன்று நிலங்களும் பொருளாதார மேம்பாட்டிற்காக அடிப்படையாக இருந்த காரணத்தால் வேந்தர்களின் போர் நோக்கமானது அவைகளைக் கைப்பற்றுவதாகவே இருந்தது. போரில் மருத நிலங்களையும் நீர் நிலைகளையும் அழிப்பதும், கழுதை ஏர் பூட்டிக் கடுகு விதைத்தலுமாகிய செயல்கள் வேந்தர்களின் கொற்றம் காக்க நடந்த நிகழ்ச்சிகளாகப் புறப்பாடல்கள் பதிவு செய்துள்ளன.

பேரரசுகள் உருவான காலத்தில் வேளாண்மையை விட வணிகம் இன்றியமையாதாகிறது. நேரடி உற்பத்தியில் ஈடுபடுகின்ற வேளாண் வர்க்கத்திற்கு மாறாக, வணிக வர்க்கம் உள்நாட்டு வணிகம், அயல்நாட்டு வணிகம் என்னும் இரண்டிலும் பெருமளவில் ஈடுபட்டது. இதற்கான சான்றுகளைப் பட்டினங்களின் பெருவளர்ச்சியும், துறைமுகங்களின் உருவாக்கமும் உறுதிப்படுத்துகின்றன. சேர, சோழர்களின் கடல் வணிகம் பொருளாதார வளர்ச்சியையும் அயல்நாட்டினராகிய யவணர் தமிழகம் வந்து தமது வணிகத்தை மேம்படுத்திய நிலையையும் அறிய முடிகிறது. பாண்டியரின் மதுரை வீதிகளில் நாளங்காடி, அல்லங்காடி முதலியன வணிக வளத்தைப் பதிவு செய்துள்ளன.

### 3.5 மரபும் விழுமியமும்

சங்ககாலத் தமிழகப் போர் முறைகளில் சில வியத்தகு மரபுகள் காணப்படுகின்றன. வேந்தர்கள் அடையாளப் பூச்சூடுவதோடு பூவையும் சூடுதல்,

படைவீரர்கள் அடையாளப் பூச்சூடுதல் ஆகியன தொல்காப்பியராலேயே குறிக்கப்பெறுகின்றன. தமிழர் வாழ்வில் அகத்திலும் புறத்திலும் மலர்கள்வு சூடி மங்கலப் பொருள்களாகவும் மகிழ்ச்சிக்குரியனவாகவும் பயன்படித்தியுள்ளனர்.

கண்ணியும் கோதையும், தொடையலும் பிணையலும், தாரும் மாலையும் ஆரமும் என்றின்ன பலவகையான மலர்களைச் சேரக்கட்டிப் புறத்திணை நிகழ்ச்சிகளில் ஆடவரும், அகத்திணை நிகழ்ச்சிகளில் மகளிரும் புனைந்துக்கொள்ளும் இயற்கை வாழ்நெறியைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. புறத்திணைப் போர் நிகழ்ச்சி ஒவ்வொன்றிலும் ஒரு குறிப்பிட்ட மலர் சூடும் வழக்கம் பிறமொழி இலக்கியங்களில் எங்கும் இல்லை என்பது கருதத்தக்கதாகும். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி என்னும் ஆறுவகை மலர்கள் புறத்திணையில் இடம் பெறுவன. பண்டைக் கிரேக்க வீரர் வெற்றிக்குப் பின் தலைக்கவசத்தின் மேல் இறகு சூடிக்கொள்ளும் வழக்கம் தமிழர் வாகை மலரைச் சூடும் வழக்கத்தை ஒத்துள்ளது. போர்ச்செயல் ஒவ்வொன்றுக்கும் ஒரு குறிப்பிட்ட மலர் சூடும் வழக்கம் வேறு எங்கும் இருந்ததில்லை. போருக்குப் புறப்படுவோன் ஊர்க்கயத்தில் நீராடி வெள்ளையாடை உடுத்திச் செல்லும் மரபை,

**“மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி**
**மன்ற வேம்பி னொண்குழை மலைந்து”**[109]

**“வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்”**[110]

என்ற பகுதிகள் எடுத்தியம்பக் காணலாம். போர்க்குப் புறப்படு முன் விரிச்சி கேட்டலும், புள் முதலியவற்றால் நிமித்தம் காணலும். உன்னமரத்தின் நிலை நோக்கலும், நிமத்தம் பார்த்தலும் ஆகிய நம்பிக்கைச் செயல்கள் உண்டு.

**“காலனும் காலம் பார்க்கும் பாராது**
**வேலீண்டு தானை விழுமியோர் தொலைய**
**வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே”**[111]

என்ற பகுதிகளால் அறியலாம். களரும் மணலும் பரந்த பெருவெளிகளான பறந்தலை எனப்படும் இடங்களிலேயே வேந்தர் போர்க்களத்தை அமைத்துக் கொண்டனர் என்பது வாகைப்பறந்தலை, வெண்ணிப் பறந்தலை, தலையாலங்கானம் ஆகிய களப் பெயர்களால் அறியப்படும். போர்கள் அனைத்தும் பகற்பொழுதிலேயே நடைபெற்றிருக்கின்றன.

இரவுப்பொழுதில் போர் தவிர்த்துப் பாசறை எனப்படும் கட்டூரின்கண் வீரர்கள் ஓய்வெடுப்பதும், புண்பட்ட வீரர்களைக் கண்டு தலைவன் ஆறுதல் கூறுவதும் வழக்கமென அறிகிறோம். போர்க்குரிய வேனிற் காலத்தில் பொருதலைத் தொடங்குவோர் கார்காலம் வந்தவுடன் போரை நிறுத்திவிட்டு ஊர் திரும்புவர், வாடைப் பாசறையில் தங்கியிருத்தலுமுண்டு. கார்காலத்தில் போக உணர்வு காரணமாகப் படைவீரர்கள் ஊர் திரும்புவார் என்பதினும், கார் காலத்தில் படைகளின் இயக்கம் செம்மையாய் இராது என்பதால் போரை நிறுத்தி ஊர் நண்ணுவர் என்பது பொருத்தமான காரணமாக அறிய முடிகிறது.

தொல்காப்பியம் காட்டும் சமுதாயத்தை இனக்குழச் சமுதாயம் என்றும் நிலயுடைமைச் சமுதாயம் என்றும் வகைப்படுத்தலாம். இனக்குழச் சமுதாயத்தை முல்லைநிலம், சார்ந்த புறநானூற்றுப் பாடல்கள் காட்டுகின்றன. குறிஞ்சி நிலம் சார்ந்த குறுநில மன்னர் சமுதாயங்களிலும் இந்த வாழ்வின் எச்சங்களைக் காணமுடிகிறது. மூதின்முல்லை, வல்லாண்முல்லை ஆகிய துறைகளைச் சார்ந்த பாடல்கள் சங்க இனக்குழச் சமுதாய வாழ்வை வரையறுக்க உதவும் அடிப்படைச் சான்றுகளாக உள்ளன. இவ்விரு துறைகள் சார்ந்த பாடல்கள் காலத்தில் முற்பட்டவையாக உள்ளன. இவைகாட்டும் சமுதாயம், மன்னர் என்ற அரசியல் தலைவனுக்குரிய பண்புகளற்ற சீறூர் மன்னர் எனப்படும் இனக்குழுத் தலைவர்தம் செயற்பாடுகளையும் பொது வாழ்வில் ஈடுபட்டு விருந்து பேணும் அறமாண்பினராக, வீரம் செறிந்த முதுகுடி மகளிராக விளங்கிய தலைவியரின் அறமறம் சார்ந்த சமுதாயச் செயற்பாடுகளையும் கொண்டுள்ளன.

**அறம்**

அறம் என்ற சொல்லுக்குக் கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, அறநூல், அறக்கடவுள், தருமதேவதை, தீப்பயன் உண்டாக்காத செயல் போன்ற பொருளைக் கழகத் தமிழ் அகராதி தருகிறது. அறம் என்ற சொல் தோன்றும் முன்னர் இச்சொல்லைக் குறிக்க, பழமொழி, முதுமொழி, மூதுரை, வாயுறைவாழ்த்து, நன்றி, நன்று, நன்மை, நல்லது, முறை, முறைமை, நயம், நன்னெறி, நெறி, ஒழுக்கம், கடமை, புண்ணியம், ஈகை, அறக்கடவுள், சமயம் ஆகியவை வழங்கி வந்தன. பிற்காலத்தில் வடமொழிக் கலப்பால் ‘நீதி’ என்ற சொல்லும் வேரூன்றிவிட்டது. அறம் என்ற சொல்லுக்கு ‘எதிக்ஸ்’ எனப்படும் ஆங்கிலச் சொல்லுக்குத் தரப்படும் விளக்கம் பாருத்தமானதாக உள்ளது.

அறம் என்பது ‘அறு’ என்னும் அடிச்சொல்லிலிருந்து பிறந்தது. ‘அறு’ என்றால், அறுத்துச்செல், வழி உண்டாக்கு, துண்டி, வேறுபடுத்து எனப்பல பொருள் கொண்டது. எனவே, மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளில் ஆளுவோரும் சமயங்களும் தாக்கம் எற்படுத்துவதும் உண்டு.

தனிமனிதனின் உரிமைகளும் கடமைகளும் சமூக இணைப்பும் பழக்கவழக்கங்களும், விருப்பு வெறுப்பு ஆகிய இயல்புகளும் என எல்லாம் அறக்கோட்பாட்டால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. ஆயினும் இவ்வறக்கோட்பாட்டை உருவாக்குவதும், வழி நடத்துவதும் சமூகத்தின் பொருளாதார உறவு முறைகளேயாகும். பொருளாதார வளர்ச்சியைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்போர் அவர்களது நலன்களைப் பாதுகாத்துக் கொள்ள சமூகத்தின் கருத்துக்களையும் தன்கட்டுப் பாட்டுக்குள் வைத்திருக்கின்றனர்.

பொருளாதார வளர்ச்சியால் சமூகத்தில் ஏற்படும் மாற்றங்களை நெறிப்படுத்துவதே ‘அறம்’ என்பதன் தலைமையான நோக்கமாகும். ஆயினும் அது சில நேரம் ஆள்வோரின் சாதகமானதாக மாறிவிடுகிறது. இருப்பினும் சமூக வளர்ச்சியில் ‘அறம்’ என்ற கருத்தாக்கத்தின் செயல்திறன் குறிப்பிடத்தக்க மதிப்பு வாய்ந்ததாக உள்ளது. உலகின் பல்வேறு பகுதிகளில் வழக்காற்று ஒழுக்கநெறியைச் (Customary morality) சிறப்பாக விளக்கும். மூதுரை, முதுமொழி, பழமொழிகள் தோன்றிப் படிப்படியாக வளர்ந்துள்ளன. இவ்வாறே தமிழ்ப்பண்பாட்டிலும் திருக்குறள் முதலான அறத்தை நேரடியாகச் சொல்லும் நூல்கள் தோன்றுவதற்கு முன்னர் முதுமொழி, பழமொழி, வாயுரை வாழ்த்து போன்ற அறநெறியுணர்த்தும் செய்யுள் வகைகள் தோன்றியிருத்தல் வேண்டும். அந்த வகையில் பழமையான இலக்கண நூலான தொல்காப்பியம் முதுமொழி என்பதற்கும் வாயுரை வாழ்த்திற்கும் இலக்கணம் இயம்பியுள்ளது. இதனை,

**“நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்**
**எண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்**
**குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்**
**ஏதுநுதலிய முதுமொழி என்ப”**[112]

**“வாயுரை வாழ்த்தே வயங்க நாடின்**
**வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்**

**தாங்குதலின்றி வழிநனி வயங்குமென்று**
**ஓம்படைக்கிளவியின் வாயுறுத்தற்றே"**[113]

சங்க இலக்கியங்களிலும் பழமொழி, முதுமொழி பற்றிய குறிப்புகள் உள்ளன. இவற்றிலிருந்து அவை தோன்றிய காலத்திற்கு முந்தைய அறங்களைச் சுட்ட முதுமொழி, பழமொழி முதலியன பயன்படுகின்றன.

**ஆட்சிஅறம்**

அரசன் வரிவிதிப்பில் கவனமாக இருக்கவேண்டும். ஆட்சி அறத்தோடு நடந்தால் செங்கோலாட்சி என்றும் அறம் பிறழ்ந்த ஆட்சியாக இருந்தால் கொடுங்கோலாட்சி என்றும் வருணித்தனர். வேண்டியவர், வேண்டாதவர் என்றெல்லாம் நீதி சொல்லும்போது கவனிக்கக் கூடாது. ஆராயாமல் தீர்ப்புக்கூறக் கூடாது என்றெல்லாம் அறம் வகுத்து அதன் வழியில் ஆட்சி செய்தல் வேண்டும். பாண்டியன் அறிவுடைநம்பிக்கு அறிவுரை கூறும் பிசிராந்தையார், "உனக்கு இருக்கும் அதிகாரத்தினை உன் சுற்றத்தினரும் பயன்படுத்திக் கொண்டு ஆளாளுக்கு வரிவிதித்து மக்களைத் தொல்லை செய்கின்றனர். ஆகவே எதிலும் ஒரு நியதி வேண்டுமென்று வைத்துப்பாடியுள்ளார். அவ்வாறே அறவழிப்பட்ட ஆட்சியினால் பொருளும் இன்பமும் பெறலாம் என்பதை,

**"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்**
**அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல"**[114]

என்ற பாடலடி விளக்குகிறது.

**3.6. சமூக அறமும் புறநிலை விழுமியமும்**

அகவாழ்க்கைக்கும், பறவாழ்க்கைக்கும்பொதுவானது 'சமூக அறம்' ஆகும். ஆயினும் அகப்பாடல்களைக் காட்டிலும் புறப்பாடல்களில் தான் சமூக அறம் பற்றிய சிந்தனைகள் பெருமளவு பதிவு செய்யப்பட்டள்ளன.

"ஆற்றுப்படை நூல்களில் விருந்தோம்பல் வேறுசில வேந்தர்களிடம் காணப்பட்டாலும் இதன் ஊற்றுக்கண் மன்னர்களிடம் பரவலாக இருந்த பண்பாகும். விருந்து வரவேண்டும்

என்று நடுகல்லை வழிபட்ட சீறூர்த்தலைவியின் பண்பு குறிப்பிடத்தக்கது. ஆகவே இனக்குழச் சமூகத்தின் பழக்கம் சீறூர் மன்னர் காலத்தில் சமூகப் பண்பாடாக உயர்ந்தது. சங்ககாலத்தில் விருந்தோம்பலும் கொடையும் அறமாக மலர்ந்தது''.115 கொடைப்பண்பைப் பொருத்தவரை கொடை ஒரு பழக்கமாக சங்ககால மக்களின் சமூகத்தில் இருந்தாலும் கடையேழு வள்ளல்களிடையே கொடைமடமாக வளர்ந்திருந்தது. அதியமான் இறந்த போது ஔவை,

**"பனித்துறைப் பகன்றை நறைக் கொள் மாமலர்**
**சூடாது வைகியாங்கு, பிறர்க்கு ஒன்று**
**ஈயாது வீயும் உயிர் தவப் பலவே!"** [116]

என அதியனின் சிறப்பை எடுத்துக்கூறி, இனிப்பாடுநரும் இல்லை. பாடுநர்க்கு ஒன்று இல்லை என்று குறிப்பிடுகிறார். குமணனைப்பாடும் பெருஞ்சித்திரனார் கடையேழு வள்ளல்களுக்குப் பிறகு ''பாடுநரைப் புரக்கும் புரவலன் நீ'' என்று வேந் தன் என்று பாடுவதிலிருந்து கொடைப்பண்பின் தொடர்ச்சியைக் காணமுடிகிறது. பாணர்க்கும், பொருநர்க்கும் கூத்தர்க்கும் விறலியருக்கும், கோடியருக்கும், வயிற்றியருக்கும் பொருள் வழங்கி அறம் செய்துள்ளனர். பிற்கால வேந்தர் காலத்தில்,

**"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்**
**ஈயேன் என்றல் அதினினும் இழிந்தன்று"**[117]

எனப்பொருள் கேட்டும் கொடுக்கப்படாத மன்னர்களை, அறம் காவாது மன்னர்களைப் புலவர்கள் கண்டித்துள்ளனர். வேந்தர்கள் காலத்தில் கொடைப்பண்பு சமூக அற நிறுவனமாகி வேளாண்மை உற்பத்திப் பெருக்கத்திற்கு வழிவகை செய்தது. பாடாண்திணை, சமுதாயத் தோற்றத்தில் நிகழ்ந்த பல்வேறு சமுதாய மாற்றங்களைப் பதிவு செய்துள்ளது. இத்திணையில் உள்ள துறைகளாக ஆற்றுப்படை, பரிசில் கடா நிலை, பரிசில்துறை, கொடுப்போர் ஏத்திக் கொடா ஆப்பழித்தல், சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவற்கு உரைத்த கடைநிலை, செவியறிவுறூஉ, பரிசில் கடைஇய கடைகூட்டு நிலை, இருவகை விடை எனப் பல்வேறு துறைகளைப் பாடாண் திணை அக்காலச் சமூக சூழலைப் பதிவு செய்துள்ளது. இத்தகைய சூழலைப் பதிவு செய்ததாகத் தான் புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது.

**"நல்அறிவு உடையோர் நல்குரவு**
**உள்ளுதும், பெரும யாம், உவந்து, நனி பெரிதே"[118]**

செவியறிவுறூஉப் பாடல்கள் புறநானூற்றில் 8 பாடல்கள் உள்ளன. அவற்றில் பெருஞ்செல்வம் உடைய வேந்தர்கள் குறிப்பிட்ட சில புலவர்களோடு மட்டும் தொடர்பு கொண்டுள்ளனர். புலவர்கள் சிலர் அவர்களுக்கு அறிவுரை கூறுகின்றனர். இதில் சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டும், ஆட்சி அறநெறியுடன் இருத்தல் வேண்டும், கொடைத்தன்மை கொண்டவராக இருக்க வேண்டும், செல்வம் அறவழியில் வந்ததாக இருத்தல் வேண்டும் போன்ற அறிவுரைகள் மிகுதியாக அமைந்துள்ளன.

**"காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே,**
**மாநிறைவு இல்லதும், பல்நாட்கு ஆகும்;**
**நூறுசெறு ஆயினும், தமித்துப் புக்கு உணினே,**
**வாய்புகுதவனினும் கால்பெரிது கெடுக்கும்;**
**அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே,**

---------------------------------------------------------------

**யானை புக்க புலம் போல,**
**தானும் உண்ணான், உலகமும் கெடுமே"[119]**

என வரும் பாடல் செவியறிவுறூஉ வகைமைக்குச் சான்றாகும். பொருண்மொழிக்காஞ்சித் துறையில் உள்ள பாடல்களும் வேந்தனுக்கு அறிவுறுத்தும் பாங்கில் அமைந்துள்ளன. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி பாடும்போது, இவ்வுலகம் நிலைபெற்று வாழ்தல் என்பது சுயநலப்போக்கு விஞ்சிப்போன சமுதாயத்தில் கூட சிலரேனும் தமக்கென முயலா நோன்தாள், பிறர்க்கு என முயலுநர் இருப்பதால்தான் என்று கூறுவதும், மோசிகீரனார் பாடிய பாடலில் மன்னன் மக்களுக்கு உயிராக மதிக்கப்படும்போது இத்தனை மக்களுக்கும் தான் உயிர் என்று நினைத்து அறவழியில் ஆட்சி செய்ய வேண்டும் என்று கூறப்படும் செய்தி அறியத்தக்கது. எவ்வளவு செல்வம் சேர்த்தும், அதிகாரம் இருந்தும், நாடுகளையெல்லாம் தன் ஒரு குடைக் கீழ்க்கொண்டு வந்துள்ள வேந்தனுக்கும் அத்தகைய தன்மையன்றி ஒவ்வொருநாள் உணவிற்காகக் காட்டில் இரவும்பகலும் ஓடித்திரியும் ஒருவனுக்கும்,

**“உண்பது நாழி, உடுப்பவை இரண்டே**
**பிறவும் எல்லாம் ஓா் ஒக்கும்மே**
**செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்பேம் எனினே தப்புந பலவே”[120]**

என்று நக்கீரா் கூறும் அறநெறியை அடிப்படையாகக் கொண்டதாகும். சமூகத்தில் பிறப்பும் இறப்பும், புணா்தலும் பிரிதலும் என இருவகைப்பட்ட முரண்காட்சிகள் நடந்த வண்ணம் இருக்கும். ஆயினும் வாழ்க்கையைப் பற்றற்ற நிலையில் வெளியிலிருந்து அதன் போக்குகளைக் கவனிக்கத் தெரிந்தவா்களுக்கு அது அச்சுறுத்துவதாக இருக்கும் எனப் பக்குடுக்கை நன்கணியாா் குறிப்பிடுகிறாா்.

பண்பும், ஒழுக்கமும் உள்ள உயா்ந்தவா்களின் வாழ்க்கை நெறி முன்னோா்கள் சொன்ன சொற்களைப் பொன்போல் போற்றி வாழ்க்கையை நடத்துவதால், இல்லறம் நல்லறமாக விளங்கும் என்பதை தொல்காப்பியா், **“பெரியோா் ஒழுக்கம் பெரிது எனக்கிளந்த”[122], “மையறு சிறப்பின் உயா்ந்தோா்பாங்கின்”[121].** என்பதன் மூலம் உயா்ந்தவா்களிடம் பற்றும், மரியாதையும் கொண்டு, அவா்கள் கூறிய நற்கருத்துக்களைப் பின்பற்றி வாழ்ந்தனா் என்பதை அறியலாம். சமுதாயத்தில் வாழ்கின்ற பண்புள்ளவா்கள், உயா்ந்தவா்கள், சான்றோா்கள் இவா்களைப் பேணுவது தலையாயக் கடமையாகக் கொண்டனா் என்பது புறவிழுமியமாக அறியமுடிகிறது.

**காடு வாழ்த்து**

**“மலா்தலை உலகத்து மரபுநன்கு அறியப்**
**பலா்செலச் செல்லாக் காடுவாழ்த் தொடு”[123]**

என்பது தொல்காப்பியம். அகன்ற இடத்தினையுடைய பிரிந்த அனைவரும் வரலாற்று முறைமையினைப் பலரும் பெரிதும் வருந்துபடியாகப் பிறந்தோரெல்லாரும் இறந்து போகவும் எஞ்ஞான்றும் இறப்பின்றி நிலைபெற்ற புறங்காட்டினை வாழத்துதலாலும் என்பது நச்சினாா்க்கினியா் தரும் விளக்கமாகும். இடம் அகன்ற உலகத்தின் மரபு நன்கு விளங்கப் பலரும் மாயத் தான் மாயாத புறங்காடு வாழ்த்தலும், என்பது இளம்பூரணா் கருத்தாகும். புறப்பொருள் வெண்பாமாலையாா் காஞ்சித் திணையுள் காடு வாழ்த்துக் கூறாது யாவருக்கும் பொதுமையான பொதுவியற்பாலுள் அத்துறையைக் கூறியுள்ளாா்.

**“பல்லவர்க் கரங்கும் பாடிமிழ் நெய்தல்**
**கொல்லென ஒழிக்கும் காடுவாழ்த் தின்று”**[124]

என்பது புறம்பொருள் வெண்பாமாலை. எஞ்சியோர் பலரும் உணரும் பொருட்டு முழங்கும் பெரிய முழக்கத்தையுடைய சாப்பறை கல்லென்று முழங்கா நின்ற சுடுகாட்டை வாழ்த்தியதைப் புலப்படுகிறது. உலகின் நிலையாமை கூறச் சுடுகாட்டின் நிலைமைத் தன்மையை உணர்த்துவது காடு வாழ்த்து என்னும் துறையெனலாம்.

**“நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்**
**என்புபடு சுடலை வெண்ணீது அவிப்ப**
**எல்லார் புறனும் தான்கண்டு உலகத்து**
**மன்பதைக் கெல்லாம் தானாய்த்**
**தன்புறம் காண்போர்க் காண்புஅறி யாதே”**[125]

என்ற பாடலில், களரிநிலம் பரந்து, கள்ளிகள் மிகுந்து, பகலிலும் கூகைகள் கூவுமாறு இருள் அடர்ந்து, பிளந்த வாயையுடைய பேய்மகனும் ஈமத்தீயும் நிறைந்து, புகை படர்ந்த இம் முதுகாடு மனங்கலந்த காதலர்கள் அழுது அழுது பெருக்கிய கண்ணீரால் சுடலையிலே வெந்து நீரான சாம்பலை அளிக்கவுமாக விளங்குகிறது. தன்னை எதிர்த்த எல்லாரையும் வெற்றிக் கண்டு. உலக உயிர்களுக்கு எல்லாம் தானே முடிவிடமாய் விளங்குவது. தன்னைப் புறங்கண்டு மீள்வோரை என்றும் கண்டறியாதது என்பதை அறிய முடிகிறது.

## முடிவுரை

- உள்ளம் என்பது அகமாகும். இது எல்லாஉயிர்களுக்கும் இன்பம் தருவது. அகம் கேட்போரின் மணவுணர்களுக்கு ஏற்ப மாறுபட்டு ஒலிப்பதாகும்.

- தோழி என்பவள் செவிலி மகளாவாள். தலைவிக்கு உதவுபவள், தலைவனுக்கு உதவுபவர்கள் பாங்கன், சான்றோராவர். காதலர்களின் உணர்ச்சிகளுக்கு அறிவும் அறிவுப் பாத்திரங்களாவர்.

- இறப்பு, நிகழ்வு காலங்களைக் கணித்து தாய்போல் நின்று எடுத்து உரைப்பவள் செவிலி ஆவாள். செவிலித்தாய் தலைவியின் களவு கால வாழ்விற்கு நற்றாயிடம் அறத்தொடு நிற்பவள் என்பதை அறியமுடிகிறது.

- தலைவன், தலைவி களவு வாழ்வில் ஈடுபடும்போது, மறைமுகமாக செவிலி இற்செறிக்கிறாள்.

- அன்பின் முதிர்நிலையே காமாகும். நல்அறிவை இழப்பது காமமாகும். ஆதலால் நாணம் ஏற்பட்டு பசலை அடைவதாகும்.

- களவு மணத்தின் ஆதரிக்கப்பட்டு குடும்ப வாழ்வை பேணுவர். இக்காலத்தில் அன்பு, ஒழுக்கம், கற்பு, பொறை, விருந்தினர் ஓம்பல் முதலிய தன்மைகளைக் காணமுடிகிறது.

- மக்களைப் பெற்றவர் சிறப்பான வாழ்வும், மக்களை ஈன்றெடுக்காதவரின் வாழ்வு என்றுமே சிறப்பதில்ரைல எனச் சங்க இலக்கியத்தால் அறியமுடிகிறது.

- வறுமைநிலை வாழ்வது அருளுள்ளம் பெறாதவர் என்றும், அவர்கள் இழிநிலைக்கே தள்ளப்பட்டதாக காண முடிகிறது.

- செல்வ மிகுதியால் பெருமிதவாழ்வு தோன்று அப்பொழுது கல்வி, தறுகண், புகழ், கொடை போன்றவை ஏற்படும் என்பது புலனாகிறது.

- தோழி சங்க அகவாழ்வில் நுண்மான் நுழைபுலம் மிக்க அறிவாற்றலோடு தலைவி களவு வாழ்வை இல்லற வாழ்வாக மாற்றுவதில் பேரிடம் பெறுகிறாள். தலைவி நாணம் மீதுரத் தன் காதலுணர்வை வெளிப்படுத்தும் திறன் இல்லாதவள். அவளது காதலைக் குறிப்பால் அறிந்து தலைவனோடு சேர்த்து

வைக்கும் தோழியின் வாழ்விற்குப் பெருந்துணை புரியும் கருவிகளாக அமைகின்றன.

- ❖ சங்ககாலச் சமுதாயத்தில் பெண்ணின் உணர்வுகள் பெண்களால் மதிப்பளித்தும் போற்றியும் காக்கும் நிலையைச் சங்க அக இலக்கியங்களில் காணப்படும் பெண் பாத்திரங்களான நற்றாய் செவிலி, தலைவி – தோழி மூலம் அறியலாம்.

- ❖ பழந்தமிழரின் திருமண முறை களவு, கற்பு என்ற இரு நிலைகளைக் கொண்டது. களவு என்பது திருமணத்திற்கு முன்பு, பிறருக்குத் தெரியாமல் மேற்கொள்ளும் காதல் வாழ்க்கை. கற்பு என்பது திருமணம் முடித்து வாழும் இல்லற வாழ்க்கை.

- ❖ களவு வாழ்வில் பொய்களும், வழுக்களும் தோன்றியதால் ஊர்ப்பெரியவர்களின் முன்னிலையில் திருமணம் என்கிற ஒப்பந்தச் சடங்கை நிகழ்த்தும் சூழல் உருவானது என்கிறது தொல்காப்பியம்.

- ❖ வாயில்களாகத் தோன்றுபவர்களுள் தோழிக்கும், பாங்கனுக்கும் மிகுந்த பங்குண்டு. ஆதலால் அவர்களைப் பற்றிய செய்திகளைத் தனித்து ஆராயலாம். எந்நிலையிலும் தலைவன் தலைவி உறவிற்கு

- ❖ தொல்காப்பியர் களவு, கற்பு எனும் இரு வகைக் கைகோளுக்கும் உரிய பிரிவு வகைகளைப் பொது நிலையில் சுட்டியிருப்பினும் பிற்காலத்தில் இவை களவுக்கும், கற்புக்கும் எனத் தனித்தனியே வரையறுக்கப்பட்டுள்ளது.

- ❖ தொல்காப்பியர் தூதிற்பிரிவு என்பதைப் பொதுவகையில் சுட்டியிருப்பினும், அது கற்புக் காலத்திற்கே பெரும்பான்மையும் உரியது என்பதை அறிய முடிகிறது. ஊடல் காலத்தில் மனம் வேறுபட்டிருக்கும் தலைமக்கள் இணைக்கும் பணியில் ஈடுபடுவோராகிய வாயில்களைத் தூதாகக் கொள்ளலாம்.

- ❖ கைக்கிளை, பெருந்திணை ஆகியவை அகத்திணைகளாக இருந்தாலும் அன்பின் ஐந்திணை என்னும் வரையறைக்குள் அடங்காததால் பிற்காலத்தில் புறத்திணையில் இணைக்கப்பட்டன.

- ❖ வீரயுகப் பாடல்கள் வெறும் வெற்றிகளை மட்டும் பாடாமல், போரினால் ஏற்பட்ட அழிவுகளையும், அவலங்களையும் சுட்டியுள்ளன. சங்க காலத்தில் போரினால் வரும் தீமைகளும் உணரப்பட்டன.

- போரைத் தவிர்க்க வேண்டி அமைதி முயற்சியில் ஈடுபட்ட ஔவையார். கபிலர், எயிற்றியனார், கோவூர்கிழார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். அத்தமிழ்ச் சான்றோர்கள் வேந்தர்கள் புறப்பகையும் உட்பகையும் இன்றி அமைதியாக நட்புறவுடன் வாழ வழிகூறினர். முயன்றனர். இக்காலத்தில் வேண்டப்படும் உலக அமைதிக்கு அச்சான்றோர்கள் வித்திட்டுச் சென்றுள்ளனர் என்பது செம்மையான கருதுகோளாகும்.

- தமிழ்ச் சமூகம் இயற்கையோடு இணைந்து வாழ்ந்த தன்மையையும் நால்வகை நிலப்பரப்பில் இனக்குழுவாக வாழ்ந்த சூழலையும் தொடக்ககால இலக்கியங்களான சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இனக்குழுச்சமூக எச்சங்களையும் குறுநில, அரச, மன்னர், வேந்தர்களின் ஆளுகைக்கு உட்பட்ட சூழலில் இருந்த மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளையும் தமது அனுபவ வெளிப்பாடுகளையும் அறம் என்ற பெயரால் பதிந்துள்ளனர். இதன் அடிப்படையில் வாழ்க்கையை அமைத்துக்கொண்டு உற்பத்தி உறவுகளை நெறிப்படுத்திக்கொண்டு அமைதியான வாழ்க்கை வாழ்ந்தனர். இதில் பகிர்ந்துண்ணல் எனப்படும் கூட்டுண்ணல், விருந்தோம்பல், கொடை, கண்ணோட்டம் (கருணை) போன்ற செயல்பாடுகள் தமிழர்தம் அறம் என்ற கருத்தாக்கம் உருவாக அடிப்படையாக இருந்தன.

- ஆளும் வர்க்கம் உருவான காலத்தில் அறக் கருத்தாக்கங்கள் ஆளுவோரையும் ஆளப்படுவோரையும் நெறிப்படுத்தின. வரம்பு மீறிய அதிகாரம் செலுத்தும் போது எச்சரிக்கை செய்ய அறங்கள் துணைநின்றன. எப்போதுமே அதிகாரத்தின் பிரதிநிதியாக அறம் இருக்கும் என்பதற்கு மாற்றாக அறத்தின் அடிப்படையில் அதிகாரம் அமைதல் வேண்டும் என்ற நிலைப்பாடு இருந்தது. ஆகவே தான் தமிழ்ச்சமூகம் அறவழியில் இன்றும் நிலைபெற்றுள்ளது என்றால் அதற்கான அடிப்படையைச் சங்க இலக்கியங்கள் ஆழமாகப் பதிவு செய்துள்ளன என்பதை அறிய முடிகிறது. அவற்றுக்கு முன்னர் அனுபவ மொழிதலாக , மூதுரை, பழமொழி, வாயுரை வாழ்த்து, செவியறிவுறூஉ முதலியன தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன.

# இயல் - மூன்று

## அகப்புற சமூக மரபுநிலை விழுமியங்கள்

### அடிக்குறிப்பு

1. தொல்.பொருள்.நூ.1169 ப – 472
2. தொல்.புறத். 50
3. தொல்.பொருள்.கள. 23
4. நற். 34: 7 – 11, ப - 44
5. குறுந். 162: 3 – 5, ப - 205
6. தொல். 1091
7. மேலது – 1089
8. கலித் -2: 21 – 22
9. அகம் - 86: 5 – 7
10. மேலது - 2
11. மேலது – 101, 10 – 12
12. அகம் - 387
13. அகம் - 86: 1 – 2, ப - 35
14. அகம். 136: 1 – 2, ப - 35
15. தொல்.கற்பு. 1088 ப - 363
16. தொல். 269
17. குறிஞ். 21 – 22
18. கலித்- 114: 19 – 21
19. பரி பா- 11: 41 – 42
20. குறுந் - 135: 1 – 2
21. ஐங் - 405: 1 – 2
22. அகம் - 225: 1 – 3
23. புறம் - 188: 1 – 7 ப - 317
24. பதிற்- 74: 21 – 22
25. புறம் - 9: 3 – 4
26. நற் - 40: 5 – 9
27. குறுந் - 85:
28. ஐங் - 65
29. தொல்.பொருள்.கள. நூ.1103 ப – 448

30. தொல்.பொருள்.களா. நூ.1171 ப – 424
31. குறள் - 1303, அதி.131 ப – 269
32. நற். 210: 5 – 9, ப - 284
33. தொல்.பொருள்.களா. நூ.1070 ப – 424
34. மேலது – 1063 ப – 422
35. மேலது – 1084 ப – 428
36. குறுந் - 136: 1 – 4
37. நற் - 160: 1 – 3, 10
38. மதுரை – 192 – 194
39. குறுந் - 15: 1 – 6, ப - 40
40. குறுந் - 236
41. குறுந் - 175
42. நற் - 47: 7 – 11
43. தொல்.பொருள்.களா. நூ. 1076 ப – 426
44. தொல்.அகம். நூ. 983 ப – 364
45. குறுந் - 7
46. நற் - 110: 6 – 8
47. அகம். 268: 6 – 7
48. பரி:9 15 – 16
49. தொல்.பொருள்.களா. 23
50. குறுந் - 40
51. தொல்.பொருள்.களா. நூ. 1083, ப – 402
52. கதிர்மகாதேவன் ப – 137
53. குறுந் - 3: 1 - 4
54. ரா.பி. சேதுப்பிள்ளை, ஊரும் பேரும் ப – 197
55. வ.சு.ப. மாணிக்கம், தமிழ்காதல் ப- 65
56. அகம் - 376, 5 – 9
57. கு.வெ. பாலசுப்பிரமணியன். ஆய்வுக்கோவை ப – 87
58. குறள் - 1100(இன்பத்துப்பால் - 110 -குறிப்பறிதல்) ப - 220
59. புறம் - 85: 1
60. தொல்.பொருள்.களா. நூ.1171 ப – 424
61. குறள் - 114(அறத்துப்பால் - 12. நடுவுநிலைமை) ப - 23
62. புறம் - 177: 1 - 2
63. புறம் - 336: 11 – 12, ப - 478
64. தொல்.பொருள்.களா. நூ.1025 ப – 392 நச். 24

65. தொல்.பொருள்.புற. ப – 131
66. புறம் - 349: 1 – 7, ப - 494
67. புறம் - 65: 1 – 9, ப - 173
68. புறம் - 230: 5 – 10, ப - 370
69. தொல்.பொருள்.புற. 1003, ப – 376
70. தொல்.பொருள்.புற. 1018, ப – 386
71. புறம் - 226: 1 – 6, ப - 365
72. தொல்.பொருள்.நூ. 1158, ப – 468
73. தொல்.பொருள்.புற. நூ. 1007, ப – 380
74. தொல்.பொருள்.புற. நூ. 1008 ப – 380
75. புறம் - 4: 18 – 19, ப - 81
76. புறம் - 5:1 – 3, ப - 82
77. புறம் - 30: 4 - 8
78. புறம் - 58: 24 – 28, ப - 164
79. புறம் - 367: 12 – 14, ப - 516
80. தொல்.பொருள்.புற. நூ. 1004, ப – 376
81. தொல். 76
82. தொல். 75
83. புறம் - 9: 1 – 6
84. புறம் - 167: 6 – 7
85. புறம் - 70: 7
86. தொல்.பொருள்.புற. நூ. 1006, ப – 378
87. புறம் - 74: 1 – 2
88. கலிங்கத்துப்பரணி – 484
89. மலைபடு – 394 – 396
90. அகம் - 35
91. புறம் - 224: 4
92. சிலம்பு – 20: 74 – 77
93. புறம் - 71: 7 – 8, ப - 181
94. மதுரை 489 – 490
95. மணிமே – 180
96. அகம் - 256: 16 – 18
97. மணிமே – 260
98. புறம் - 44: 11 – 14

99. குறள் - 93, (அறத்துப்பால் - 10. இனியவை கூறல்) ப - 19



100.நாலடி – 332
101. புறம் - 324: 8, ப - 464
102. புறம் - 328: 2, ப - 469
103. அகம் - 67: 8 – 11, ப - 151
104. மதுரை – 70 – 74
105. புறம் - 13: 13, ப - 92
106. புறம் - 30: 14, ப - 123
107. புறம் - 35: 12, ப - 137
108. புறம் 49: 1 – 6, ப - 151
109. புறம் - 79: 1 – 2
110. புறம் - 279: 8
111. புறம் - 41: 1 – 3
112. தொல்.செய். 177
113. தொல்.பொருள். 424
114. புறம். 31: 1 – 2, ப - 124
115. பெ.மாதையன்(சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்) ப – 52
116. புறம் - 235: 19 – 20, ப - 376
117. புறம் - 204: 1 – 2, ப - 337
118. புறம் - 197: 17 – 18, ப - 327
119. புறம் - 184: 1 – 11, ப - 327
120. புறம் - 189: 5 – 8, ப - 318
121. தொல். 148
122. தொல். 115
123. தொல்.புறம்.நச் - 24
124. புறம். பொதுவியற் படலம், கொளு – 35
125. புறம் - 356: 5 – 10, ப - 501

# இயல் - நான்கு

## வாழ்வியல் விழுமியங்கள்

**முன்னுரை**

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழினத்தின் சிந்தனைக் கொடியில் பூத்த சங்கப்பனுவல்களைக் கொண்ட மொழி தமிழ்மொழி, மற்ற மொழிகளில் எழுத்து, சொல், யாப்பு, அணி ஆகியவற்றிற்கு இலக்கணங்கள் உள்ளன. ஆனால் வாழ்வுக்குரிய பொருள் இலக்கணம் இல்லை. அது நம் தமிழ் இலக்கணத்தில் நிறைந்திருக்கிறது. இந்த வாழ்விலக்கணத்திற்கு இலக்கியமாகச் சங்கப் படைப்புகள் உள்ளன. இப்படைப்புகள் தோன்றிய காலத்தில் வாழ்ந்த பழந்தமிழர் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். வாழ்வில் இடம்பெற்ற இயற்கையை இலக்கியத்திலும் அமைத்தனர். இயற்கை அழகு சங்க இலக்கியங்களில் கண்ணுக்கினிய காட்சியாகத் தீட்டப்பெற்றிருக்கின்றன. இயற்கையோடு இணைந்த தம் அனுபவ உணர்ச்சியை இலக்கியமாகப் படைத்துக் காட்டியிருப்பதால் சங்க இலக்கியங்கள் உயிரோட்டம் பெறுகின்றன. அவை மனித வாழ்க்கையோடு தொடர்பு பெறுகின்றன. இயற்கையோடு ஒன்றாத வாழ்க்கை அழகற்றது. உணர்வற்றது என்ற உண்மையை உணர்த்துகின்றன.

‘‘இலக்கியம் என்பது வாழ்க்கையிலிருந்து பிறக்கிறது. வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது. வாழ்க்கைக்கு வழிகாட்டுகிறது என்றும், மொழியை ஊடகமாகக் கொண்டு வெளிவரும் வாழ்க்கை ஆய்வே இலக்கியம் என்றும், மனிதனை மனிதநேயப் பண்புடன் நேசிக்க வழிமுறைகளை வகுத்துத்தருவது வாழ்வியல் என்கின்றனர்’’ அறிஞர். இலக்கியம் மனித வாழ்வின் இலக்குகளை இயம்புவது இலக்குகளை மனிதமனம் ஏற்றுக்கொள்ளும்படி அழகாகச் சொல்லும் போது இலக்கியம் வெற்றிபெறுகிறது. சங்ககால மக்கள் தங்களுக்குப் பிடித்தமான நிலத்தைத் தேர்ந்தெடுத்து வாழத்தலைப்பட்டனர். வாழிடம் காடாக, மலையாக, கடற்கரையாக வயல்சூழ்ப்பகுதியாக இருந்தது. அவற்றை நாகரிகத்திற்கு ஏற்றாற்போல் மாற்றி அமைத்தனர். ஆனால் இயற்கையை அழிக்கவில்லை. புவி என்பது நிலம், நீர், தீ, காற்று, வானம் என்பதை அக்கால மக்கள் உணர்ந்திருந்தனர்.

**“மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்பு தைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரு மென்றாங்கு**
**ஐம்பெரு பூதத்து இயற்கைபோல”**[1]

என்று கூறுவதன் மூலம் அவர்களின் உலகம் பற்றிய பரந்த அறிவு புலனாகிறது. அக்கால மக்கள் தொழில்நுட்பத்தோடும், அழகியல் உணர்வோடும் வாழ்ந்தனர். அவர்களின் வாழ்வியல் முறை இயற்கையோடு இயைந்ததாக இருந்தது. நிலம் பொழுது தட்ப வெப்பத்திறகு ஏற்றவாறு வாழ்வியல் முறையை அமைத்துக் கொண்டனர். அத்தகைய மக்களின் உணவு, உடை, கல்வி, நட்பு, ஈகை, நம்பிக்கை, பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

### 4.1 வைகறையில் துயில் எழுதல்

பண்டையத் தமிழக மக்கள் கதிரவன் உதயமாவதற்கு முன்பு துயிலெழுந்தனர். அதிகாலைப் பொழுதை அறிவிப்பதற்குச் சேவலின் கூவலும் பிற பறவைகளின் ஒலியும் துணை செய்தன என்பதை ‘ஒண்பொறாச் சேவல் எழுப்ப ஏற்றெழுந்து’ என்கிறது. அந்தணர் மந்திரம் ஓதும் ஒலியும் யாழோர் எழுப்பும் இசையொலியும் மன்னனுடைய அரண்மனையில் ஒலிக்கும் காலை முரசும். அரசனை எழுப்புவோரின் பாடல்களும் மக்களைத் தூக்கத்திலிருந்து எழுப்புகின்றன என்பதை,

**“நான்மறைக் கேள்வி நவில் குரல் எழுப்ப**
**ஏம இன் துயில் எழுதல் அல்லதை**
**வாழிய வஞ்சியும் கோழியும் போலக்**
**கோழியின் எழாது எம்பேர் ஊர் துயிலே”**[2]

என்கிறது. பொய்கை மலரின் இன்னொலி செய்யும் வண்டைப்போல அந்தணர் வேதம்பாடத் தொடங்குகின்றனர். ஏனைய இடங்களில் கோழி போன்ற பறவைகளின் ஒலியும் மக்களைத் துயில் எழுப்புகின்றன. ஆனால் மதுரை மாநகரில் மறை ஒலியால் மக்கள் துயில் எழுகின்றனர் என்பதைப் பரிபாடல் உணர்த்துகிறது. இதனைப் போன்றே விடியற்காலைப்

பொழுதில் மதுரைமாநகரின் காட்சியையும், அப்பொழுது நடைபெறும் செயல்களையும் மதுரைக்காஞ்சி வருணிக்கிறது.

**"ஓதல் அந்தணர் வேதம் பாட**
**சீர் இனிது கொண்டு நரம்பு இனிது இயக்கி**
**பணைநிலைப் புரவி புல் உணாத் தெவிட்ட**
**தருமணல் முற்றத்து அரி ஞமிறு ஆர்ப்ப**
**மென் பூஞ் செம்மலொடு நன்கலம் சீப்ப**
**இரவுத் தலைப் பெயரும் ஏம வைகறை"**[3]

என்கிறது. **வைகறையில் துயில் எழு** என்ற ஔவையின் வாக்கிற்கு இணங்க விடியற்காலைப் பொழுதில் விழித்தெழப் பழகுதல் வேண்டும். இப்பழக்கத்தை வழக்கமாக்கினால் வாழ்வில் நிறைய நன்மைகள் வந்து சேரும் என்பதை ஆசாரக்கோவை வலியுறுத்துகிறது. அதிகாலையில் பெண்கள் சேவல் கூவுவதற்கு முன்பே எழுந்து தம் கடமைகளைச் செய்தனர் என்பதை,

**"அமைதியில் ஒளி அரும்பும் அதிகாலை – மிக**
**அழகான இருட்சோலை தனில்**
**எழுந்திருப்பீர் என்று"**[4]

என்கிறது. அமைதியான காலைப்பொழுதில் இருள் விலகுவதற்கு முன்பே எழுந்து தலைவி இல்லறக்கடமைகளைச் செய்து தலைவனை எழுப்புவதற்கு முன்பு கூவும் சேவலை எழுப்புகிறாள். இதன்மூலம் பின்தூங்கி முன் எழும் தலைவியின் காலைப்பொழுதை வருணிக்கிறார் பாரதிதாசன். பெரும்பாலும் அதிகாலையில் மனிதன் எழுந்து தம் கடமைகளை செய்ய முற்படும்போது நிறைய நன்மைகள் விளைகின்றன. உடலில் ஆரோக்கியமும், மனதில் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது. அன்றையபொழுது அருள் நிறைந்ததாக அமைகிறது.

**நீராடுதல்**

மனதிற்கும் உடலுக்கும் பத்துணர்ச்சியைத் தருவது நீராடல். ஊடலைச் சுத்தம் செய்வதற்குக் குளத்திலும், ஆற்றிலும் நீராடினர். மனதைச் சுத்தம் செய்வதற்கு வழிபாட்டை மேற்கொண்டனர். நீராடல் இன்று வரையிலும் முக்கியத்துவம் பொருந்திய ஒன்றாகக் கருதப்படுகிறது. நீராடுதல் குறித்த பழந்தமிழரிடம் பல சொற்கள்

காணப்படுகின்றன. அவை அருவியாடுதல், சுனையாடுதல், புனலாடுதல், துறையாடுதல், புதுநீர் ஆடுதல், புதுப்புனலாடுதல். இலவந்திகை, கடல்விளையாட்டு குளநீராடுதல் எனப் பலவகைப்படும். இவை தமிழர் நீராடிய நீர்நிலைகளைக் காட்டுவன. அக்கால மக்கள் நீராடுவதற்கென்று தனியான ஆடை, அணிகலன்களை அணிந்து நீராடினர். சிலர் பொன்னால் செய்த பூக்களை அணிந்தனர். சிலர் முன்னர் அணிந்திருந்த சந்தனச் சாந்தினை மாற்றிவிட்டு துகில் புகையினாலாகிய சாந்தினை தம் உடம்பில் மிகுதியாகப் பூசிப் புடவை அணிந்து நீராடினர் என்பதை,

**“அகில்கெழு சாந்தும் பூசுவோரும்**
**கார் கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும்**
**வேர் பிணி பலர் மலர் வேயுமோரும்**
**பட்னம் பொருந்துவ புனைகுவோரும்”**[5]

என்கிறது பரிபாடல். மேலும் நீராடலைத் தீர்த்தமாடுதல் எனவும் குறிப்பர். தீமை செய்தோர் தங்களது பாவச்செயலுக்குக் கழுவாயாகக் கடலிலோ அல்லது ஆற்றுநீரிலோ குளித்துப் பாவங்களைப் போக்கிக்கொண்டனர். இதனைப் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பரதவர் சினைச்சுறாவின் கோட்டினை நட்டு வழிபட்டுப் பின்னர் புகார்முகத்தே காவிரி கடலோடு கலக்குமிடத்தில் தங்களது பழவினை நீங்கக் கடலாடியதை,

**“தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்**
**மலியோதத் தொலிகூடற்**
**றீது நீங்கக் கடலாடியும்**
**மாசுபோகப் புனல்படிந்தும்”**[6]

என்கிறார். பாவம் செய்தோர் பாவங்கள் நீங்கக் குமரியில் நீராடுவதனை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை இரட்டைக் காப்பியங்கள் கதைமாந்தர்களின் செயலால் உணரமுடிகின்றது. சிலம்பில் மாடலன் குமரியும் பெருந்துறையில் நீராடியமை கொண்டும் கங்கையில் நீராடத் தேவந்தியின் கணவன் நீங்கியமை கொண்டும், நீராடிப் பாவம் தொலைந்தமை புலப்படுகிறது. மணிமேகலையில் சுதமதி தன்தீவினை போக்கக் கன்னியாகுமரியில் கடலாடியதை,

**"பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து**
**கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்**
**தென்றிசைக் குமரியாடிய வருவோன்"**[7]

எனச் சாத்தனார் சுட்டுகின்றார். மேற்சுட்டிய சான்றுகள் கடலில் நீராடிப் பாவம்போக்கும் அக்கால நம்பிக்கை வயப்பட்ட செயலைத் தெரிவிக்கின்றன. பண்டைய மக்கள் பாவத்தைப் போக்குவதற்கு நீராடியதோடு அழுக்கைப் போக்குவதற்கும் நீராடினர். உடம்பின் அழுக்கைப் போக்குவதற்குச் சீகைக்காய். அரைப்பு மற்றும் வாசனைப் பொருள்களைப் பயன்படுத்திக் குளித்தனர். அவற்றில் குளித்தலை 'நீராட்டு' என்றும், தலைமுழுக்கு நெய்யாட்டு என்றும் சொல்லப்பெறும் தலைமுழுக்கு அன்று தலையில் எண்ணெய் போவதற்கும் உடம்பில் அழுக்குப் போக்குவதற்கும் சீயக்காய் முதலியவற்றைப் பயன்படுத்தினர் என்பதை,**"மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப"**[8] என்கிறது மதுரைக்காஞ்சி. பெண்கள் தலையில் தடவிய எண்ணெய் நீங்குதவதற்காக நுண்ணிய அரைப்புத்தூளைத் தேய்த்தனர் என்பதை 'எண்ணெய் கழல இலை துகள பிசைவார்' என்கிறது பரிபாடல். மேலும் அரண்மனையில் வாழும் அரச மகளிரும், மாளிகையில் வாழும் செல்வப்பெண்டிரும் நாடகக் கணிகையரும், கோட்டம், துருக்கம் என்னும் ஐவகை நறுமணப் பொருள்களையும், நாவல் பூவந்தி என்னும் 32 வகை ஓமாலிகையையும் ஊறவைத்து நன்னீரில் குளித்து வந்தனர். இதனை,

**"பத்துத் துவரினும் ஐந்து வரையிலும்**
**முப்பத் திருவகை ஓமாலிகையினும்**
**ஊறிய நன்னீா் உரைத்தநெய்வாசம்**
**நாறிருங் கூந்தல் நலம்பெற ஆட்டி"**[9]

என்கிறது சிலப்பதிகாரம். மேலும் எப்பொழுதெல்லாம் நீராட வேண்டும் என்பதை ஆசாரக்கோவை வகைப்படுத்துகிறது. கடவுளை வணங்குமுன், கெட்டகனவு கண்டபின், தூய்மைகெட்டபோது, நீண்டநேரம் தூங்கி எழுந்தபோது, கூடிப்புணர்ந்தபின், மலம் சிறுநீா் கழித்தபின் நீராடி உடல்தூய்மை செய்தல் மிகவும் அவசியம் என்பதை,

**கணியன்**

கணியன் என்றால் நாள்கோள் நிலையைக் கண்டு வருங்கால நன்மை தீமைகளைக் கணிப்பவன் என்பது பொருள் சோதிடத்தைப் பண்டைத்தமிழா் 'கணியம்' என்றும் அத்தொழில்புரிந்தாரைக் 'கணியா்' என்றும் அழைத்தனா். சோதிடம் என்பது நாள்கோள் நிலைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றால் ஏற்படக்கூடிய இன்ப, துன்பங்களை முற்படக் கணித்துக் கூறுவதாகும்.

கணியன் பூங்குன்றனாா் என்பவா் சங்ககாலத்த வாழ்ந்த சிறந்த புலவா். இவா் தமது வானநூற் புலமையினைக் கொண்டு செய்துவந்த தொழில் கணிதத்தொழிலாகும். கணிதத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தாலும் கவியும் புனைந்து இருவகைக் கலைகளையும் இனிது பேணினாா். சங்ககால அரசவையில் இன்றியமையாத அலுவலா்களில் சோதிடரும் ஒருவராக இருந்தாா். அக்கால அரசா்கள் நற்சகுனங்களில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவராய் இருந்தனா். அதனால் அரசா்கள் சோதிடா்களைத் தமது அவையில் நிரந்தரமாக வைத்திருந்தனா். சோதிடரைக் 'கணி' என்றும் தலைமைச் சோதிடரைப் பெருங்கணி என்றும் கூறுவா். அரச காரியங்களைச் செய்வதற்குப் பொருத்தமான காலத்தக் கணித்துக் கூறுவது இவா்களது பணி. ஒரு நாளில் அமையும்பொழுதைக் கணக்கிட்டுக் கூறுபவா் நாழிகைக்கணக்கா் எனப்பட்டனா். இவா்களை, **"பொழுது அளந்தறியும் பொய்யா மாக்கள்"**[198] என்கிறது முல்லைப்பாட்டு. இருள்நிறைந்த இரவுப்பொழுதிலும் பொழுதை நன்கு அறிவா். இவ்வாறு பொழுதைக் கணிப்பதற்கு 'நாழிகை', 'வட்டில்' பயன்படுத்தப்பட்டன. இவற்றின் மூலம் பொழுதை அறிவதற்கு ஒரு பாத்திரத்தில் நீரைப் பரப்புவா். அவற்றில் ஒரு சிறு துளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்ட அந்நீரினை அளந்துகாணும் கருவியாகலின் 'நாழிகை வட்டில்', 'குறுநீா்க்கன்னல்' எனப்பட்டது. இதனை,

**"குறுநீா்க் கன்னல் எண்ணுதல் அல்லது**
**கதிா்மருங் கறியா தஞ்சுவரட் பாஅய்"**[199]

எனக் குறிப்பிடுகின்றது. பண்டைத் தமிழருடைய விழாக்காலங்கள் சூரியனால் ஏற்படும் பருவகாலங்களையும் சந்திரனால் உண்டாகும் பருவகாலங்களையும் பொறுத்து அமைவனவாக இருந்தன. கூடலூா் கிழாா் என்னும் புலவா் ஒருவிண்மீன் வெள்ளியைக் கண்டு சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இன்னநாளில் இறப்பான் என்று கணித்தறிந்து கூறியபடி மன்னன் இறந்துள்ளான். இதனை,

**“ஆடியல் அழற்குட்டத்து**
**ஆரிருள் அரையரவில்**
**முடப்பனையத்து வேர்முதலாக்**
**மேலோர் உலகம் எய்தினன்”**[200]

என்கிறது புறம். கடியலூர் உருத்திரங் கண்ணனார் காவிரி ஆற்றின் தனிச்சிறப்பினைக் கூறும்போது உலகம் வானத்தில் தொடங்கி அதன்மூலமாக விண்மீன்கள் நிலையையும் உலகம் நிலைபெறுவதற்குக் காரணம் மழை என்பதனையும் அம்மழை வரவினை அறிவிக்கின்ற வெள்ளி மீனாகிய சுக்கிரவன் தென்திசை நோக்கிச் செல்லுமானால் மழைவளம் குறையும் என்பதைக் கணித்திருக்கிறார்.

**“வசையில் புகழ் வயங்கு வெண்மீன்**
**திசை திரிந்து தெற்கு ஏகினும்”**[201]

என்கிறது பட்டினப்பாலை. பண்டைத் தமிழருடைய விழாக்காலங்கள் சூரியனால் ஏற்படும் பருவ காலங்களையும் சந்திரனால் உண்டாகும் பருவகாலங்களையும் பொறுத்து அமைவனாக இருந்தன.

**புலவர்**

மக்களையும் மன்னனையும் நல்வழிப்படுத்துதல் புலவர்களது தொழில். இவர்கள் கல்வி, கேள்வி, ஒழுக்கம் ஆகியவற்றில் சிறந்து விளங்கினர். கொடை வள்ளல்களும் அரசர்களும் புலவர்கள் கூறும் அறிவுரை கேட்டு அதன்வழி நடந்தனர். புலவர் வேந்தனைப் பாடிப் பரிசில் பெறுவதைத் தொழிலாகக் கொள்ளாமல் அவர்கள் தவறு செய்தவிடத்து அஞ்சாது அவர்களைக் கண்டித்து அறநெறியில் வழிநடத்தும் இயல்புடையவராக விளங்கினர். அக்காலத்தில் புலவர்கள் அரசியலில் தலையிட்டு மன்னனுக்கு அறிவுரை கூறியும் அரசரின் போக்கைத் திருத்தும் உரிமையும் பெற்றிருந்தனர். அரசர் குறுநில மன்னர் ஆகியோரின் குடும்ப வாழ்விலும் புலவர் தலையிட்டு அறிவுரை கூறும் ஆர்வம் கொண்டிருந்தனர் என்கிறார் மு. வரதராசனார். இதனை,

**“இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பா ரிலானுங் கெடும்”**[202]

எனக் குறிப்பிடுகிறார் வள்ளுவர். பரிசில் பெற்ற புலவர் மன்னனிடம் தவறு கண்டபொழுது தமக்குப் பரிசுகிடைத்ததை நினைத்துத் தாழ்ந்துவிடாமல் அவன் தவறை அறிவுறுத்துவர். அரசர்கள் புலவர்களைப் பெரும் புலமையாளராகவும், சான்றோராகவும் கருதிப் போற்றினர். வேந்தர் புலவர் தொடர்பு உயிர் ஒத்த நட்பாக இருந்தது. வேந்தன் உயிர்துறக்கும்பொழுது தாமும் உடனிருந்து உயிர்துறக்கும் அளவிற்கு நட்புக் கொண்டிருந்தனர். தன்னுடன் புலவர் பலர் வடக்கிருக்க உயிர் நீங்குமளவிற்கு அவர்தம் பேரன்பைப் பெற்றிருந்தனர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்கும்போது தனக்கு அருகில் பிசிராந்தையாருக்கு ஓர் இடம் ஒதுக்குமாற கூறினான். அருகில் இருந்தோர் தங்களை நேரில் ஒருநாளும் காணாத பிசிராந்தையார் எங்ஙனம் வருவார் எனக்கேட்டனர். அதற்கு

**“செல்வக்காலை நிற்பினும்**

**அல்லற் காலை நில்லலன் மன்னே”**[203]

என உறுதியாகச் சோழன் கூறினான். அவன் கூற்றுப் பொய்க்காதவாறு பிசிராந்தையார் வருகை தந்து அவனுடன் உயிர்துறந்தது புலவரின் நட்பின் மிகுதியைக் காட்டுகிறது. இதனை, ‘நினைக்குங்காலை மருட்கை உடைத்தே’ எனப்புலவர் பொத்தியார் வியந்து போற்றுகிறார். பாடிப்பரிசில் பெறும் புலவர் தமக்குப் பரிசில் வழங்கிய மன்னனை வாழ்த்துதர் இயல்பு. ஆனால் தனக்குப்பரிசில் கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை என மன்னனின் தவறை இடித்துரைத்து நல்லாட்சி புரிவதற்கு ஆலோசனை வழங்கும் புலவர்கள் பலர் இருந்தனர். அவர்கள் அவைகளப் புலவராக விளங்கினர் என்பது திண்ணம்.

**முடிவுரை**

- தனிமனிதத் தேவை அவன்வாழும் சமுதாயத்தேவையாகின்றது. இந்த அடிப்படையில் அரும்பி மலா்ந்து பயன்தருவது தொழில் சுழன்றும் ஏா்ப்பின்னது உலகம் என்றாா் வள்ளுவா். உணவினை நிறைய விளைவிக்கும் ஆற்றல் பெற்றவா்கள் செய்தல் போன்ற தொழில்களைச் செய்து உலகைக் காத்தனா்.

- பயிா்த்தொழிலோடு அறிவுக்கும் ஆற்றலுக்கும் வாழும் சூழலுக்கும் ஏற்றவாறு தொழில்கள் செய்து வாழ்ந்தனா். அவற்றில் நெசவு, தச்சு, ஓவியம், சிற்பம், கட்டடம் போன்ற தொழில்களை நுட்பத்துடன் செய்தனா் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

- அக்காலத்தில் கைத்தொழில் வல்லவா் குறைந்த மூலதனத்தைக் கொண்டு எளிய கருவிகளையும் திறனையும் பயன்படுத்தித் தத்தம் இருப்பிடத்திலேயே தொழில் செய்தனா். தொழிலில் ஏற்படும் உயா்வுக்கும், தாழ்வுக்கும் தொழிலாளியே பொறுப்பாவான். அதை உணா்ந்து உலோகத்தொழில், அணிகலத்தொழில், தோல்தொழில் இவற்றோடு செருப்புத்தைக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனா்.

- காலப்போக்கில் மனிதனின் தேவைகள் அதிகமானதால் பொருட்களை உற்பத்தி செய்து வாழ்ந்தனா். அவற்றிற்காகக் கால்நடைப்பேணல், உப்பு விளைவித்தல், மீன்வேட்டம், முத்தெடுத்தல், சங்கெடுத்தல் போன்ற தொழில்களில் ஆா்வமுடன் ஈடுபட்டனா்.

- நாட்டில் எந்த முயற்சி சமுதாயத்தின் தேவையை நிறைவு செய்கிறதோ நல்ல பண்பாட்டினை உருவாக்குகிறதோ அது ஆக்கவளமுள்ள உழைப்பாகக் கொள்ளப்படுகிறது. அதனால் வளா்ச்சிப்பாதையில் அந்தணா். அரசா், அமைச்சா, ஒற்றா், தூதுவா், காவலா் போன்றோரின் தொழில்கள் அமைந்துள்ளன.

- அறிவுத்துறையில் ஈடுபட்டு உழைப்பவர் அறிவர். ஆசிரியர், கணியர், புலவர் போன்றோர், இவர்கள் கற்றுவல்ல கலைத்திறத்தால் மக்களுடைய மனப்பண்புகளை வளர்ப்பதைத் தம்முடைய நோக்கமாகக் கொண்டு வாழ்ந்தனர்.
- தொழிலாளர்களின் வாழ்வில் தொழில்கள் சிறப்புப் பெற்றுச் செய்யும் தொழிலே தெய்வம் என வாழ்ந்த நிலையைக் காட்டுகிறது.

- சங்ககால மக்கள் இயற்கையுடன் அதிகாலையில் எழுந்து நீராடி ஆடை அணிந்த இயற்கை உணவை உண்டு நோயில்லாமல் கலை நயத்துடன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர் என்பதை அறிய முடிகிறது.

- உயிரினங்களுக்கு இல்லாத ஆய்ந்தறியும் தன்மை கொண்ட பகுத்தறிவு மனித இனத்திற்கு உண்டு. அத்தகைய அறிவின் வளர்ச்சிக்கு அடிப்படையான கல்வி சங்ககாலத்தில் சிறப்பான நிலையில் இருந்தது குறிப்பிடப்பட்டுள்ளது.
- விருந்தோம்பலும் ஈகையும் ஒன்றுடன் ஒன்று கலந்து வறுமையுறறவர்க்குச் சேவை செய்ய வேண்டும் என்பது கூறப்பட்டுள்ளது.

- நட்பு இல்லை என்றால் இவ்வுலக வாழ்வியல் இன்பம் இல்லை மனிதனிடம் துன்பமும் வறுமையும் உண்மையான நட்பின் தன்மையில் வெளிப்படுத்துகிறது. நட்போடு கலந்திருக்கும் உண்மையான காதலுக்கு அழிவில்லை என்பது கூறப்பட்டுள்ளது.

- திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட்டு ஆண், பெண் இருபாலரிடமும் விருந்தோம்பும் பண்பை ஊட்டி அறத்தோடு வாழ வழிவகை செய்கிறது.

- நீதி என்பது எல்லா மக்களுக்கும் பொதுவானதாகக் கருதப்பட்டது. மருத்துவத்தில் இயற்கையோடு அறுவை மருத்துவத்தையும் மேற்கொண்டனர். சோதிடம் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துள்ளது.

- புராணங்கள் பழமையான கருத்தை வேரூன்றியுள்ளது என்பது கூறப்பட்டுள்ளது.

- மன்னனது ஆட்சியில் வரி வசூலித்தல், வாணிபம் துறைமுகப் பட்டினங்களின் சிறப்பு கூறப்பட்டது. ஏற்றமதி, இறக்குமதி செய்யப்பட்டது. வாணிபத்தில் சுங்கவரி விதிக்கப்பட்டது.

- இறந்தவரின் உடலைப் புதைத்தனர். வீரத்தினை உயர்வாகப் போற்றியது நடுகல். நடுகல் பற்றியும், நடுகல் வழிபாடு பற்றியும் கூறப்பட்டுள்ளது.

- மனிதனைப் பிற உயிரினங்களிமிடருந்து வேறுபடுத்திக் காட்டுவது நாகரிகமும், பண்பாடும் உலக மக்களிடையே பழமையான நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் வழி வகுத்தது சங்க இலக்கியம் என்பது புலனாகிறது.

# இயல் - நான்கு

## வாழ்வியல் விழுமியங்கள்

**அடிக்குறிப்புகள்**

1. புறம் - 2: 1 – 6
2. பரி – 8
3. மதுரைக் - 656 – 660, 685 – 686
4. பாரதிதாசன் கவிதைகள் - 185
5. பரி – 12: 11 – 17
6. பட்டினப் - 97 – 100
7. மணி – 13: 5 – 7
8. மதுரை - 685
9. சிலம்ப – 6: 76 – 80
10. ஆசார - 10
11. தொல் - பொருள். கற்பு 1092 ப - 364
12. மதுரைக் - 686
13. கலித் - 59: 13
14. திருவெம்பாவை – 29
15. பரி – 11
16. தொல் - பொருள். மெய். 1205 ப - 410
17. குறள் - 298(அறத்துப்பால் - 30. வாய்மை) ப - 60
18. புறம் - 33: 1
19. மலைபடு – 166 – 169
20. சிறுபாண் - 193 – 195
21. பெரும்பாண் - 166 – 169

22. அகம் - 129: 6 – 8
23. குறுந் - 330: 1 – 3
24. நற் - 90: 2 – 4
25. அகம் - 34: 11 வரி
26. புறம் - 393: 17 – 18
27. நற் - 21: 1 – 2
28. குறிஞ்சி – 125வரி
29. புறம் - 189: 5வரி
30. சிலம்பு – 26: 137 – 138
31. மணி – 3: 120
32. நெடுநல் - 75 – 77
33. பெரும்பாண் - 322வரி
34. மேலது – 348வரி
35. சிலம்பு -8: 3- 4
36. கலித் - 135: 3 – 4
37. மணி –13: 135 – 136
38. திருமுருகு – 92 – 95
39. தொல் - பொருள். புறம். 1006 ப - 315
40. க்ரியாவின் தற்கால தமிழகராதி ப – 682
41. பதிற்று – 88
42. மணி -3: 130 – 131
43. அகம் -5: 20 21
44. நற் - 142: 9 – 11, ப - 188
45. புறம் - 33: 7 – 9, 472
46. குறள் - 90(அறத்துப்பால் - 9. விருந்தோம்பல்) ப - 18
47. புறம் - 11: 2 – 4
48. பொருந – 114 – 115
49. புறம் - 316: 4 - 5
50. குறுந் - 233: 3 - 4

51. மு. கருணாநிதி, சங்கத்தமிழ், ப – 79
52. குறள் - 45(அறத்துப்பால் - 5. இல்வாழ்க்கை) ப - 9
53. அகம் - 263: 1 – 2
54. கலித் - 40: 11வரி
55. தொல் - பொருள். புறம். 1034 ப - 334
56. குறுந் - 87: 1 – 2
57. புறம் - 52: 12 – 13
58. நெடுநல் - 43 – 44
59. திருமுருகு – 2: 8வரி
60. பெரும்பாண் - 289 – 290
61. புறம் - 2: 7
62. மேலது – 89:6
63. நற் - 240: 1வரி
64. மகாத்மாகாந்தி, பொன்மொழிகள் ப – 37
65. அகம் - 115: 1 – 2
66. கலித் - 83: 14 – 15
67. மணிமே -1: 5 – 9
68. அகம் - 141: 6 – 11
69. மணிமே – 1: 50 – 51
70. தொல் - பொருள். புறம். 1037 ப - 335
71. பட்டின – 99 – 100
72. பதிற்று – 48: 13 – 18
73. திருமந்திரம் - 162: 16 – 20
74. குறள் - 950(பொருட்பால் -95. மருந்து) ப - 190
75. சிறுபாண் - 162வரி
76. குறள் - 949(பொருட்பால் -95. மருந்து) ப - 190
77. புறம் - 281: 1, ப - 422
78. பதிற்று – 42: 1 – 4
79. பரிபாடல், ஆய்வுக்கோவை ப – 24

80. தொல் - பொருள். கள.1081 ப - 360
81. பெரும்பாண் - 441 – 442
82. பரி – 19: 46 – 47
83. புறம் - 60: 1 – 3, ப - 160
84. பரி – 11: 5
85. குறுந் - 395: 4
86. நற் - 128: 2
87. கலித் - 15: 17
88. பரி – 51 – 53
89. மதுரை – 193 – 194
90. சிலம்பு – 23: 135 – 137
91. பரி – 11
92. தமிழண்ணல், புதியநோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு ப – 90
93. தொல் - சொல். எச். 940 ப -288
94. பதிற்று – 11: 5 – 6
95. கலித் - 142: 27 – 28
96. பரி – 3: 24 – 25
97. மேலது – 3: 59
98. பெரும்பாண் - 29 – 30
99.கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள் ப – 81
100.சாலைஇளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள் ப – 29
101. குறள் - 388: (பொருட்பால் - 39. இறைமாட்சி) ப - 78
102. அகம் - 70: 11
103. கலித் - 143: 53 – 54
104. சிலம்பு – 25: 100 – 104
105. புறம் - 185: 5 – 6
106. மேலது - 181: 7 - 8
107. அகம் - 77: 7 – 8
108. குறள் - 12(அறத்துப்பால் - 12. நடுவுநிலைமை) ப - 24

109. அகம் - 127: 7 – 9
110. மதுரை – 120 – 123
111. பட்டின – 209 – 211
112. சிறுபாண் - 150 – 153
113. மேலது – 155
114. பட்டின – 210 – 211
115. நற் - 23: 5
116. அகம் - 27: 9
117. பட்டின – 122 – 126
118. மேலது – 120
119. சிலம்பு 25 – 36
120. புறம் - 51: 6
121. பதிற்று – 15: 19
122. பட்டின – 160
123. சீவகசிந்தா – 501
124. பட்டின – 171 – 175
125. மதுரை – 372 – 373
126. குறள் - 16: (அறத்துப்பால் - 2. வான்சிறப்பு) ப - 4
127. தொல் -பொருள். மரபு. 1581 ப - 542
128. புறம் - 18: 21
129. பாரதிதாசன் கவிதைகள் ப – 146
130. குறள் - 1033(பொருட்பால் - 104. உழவு) ப - 207
131. பெரும்பாண் - 196
132. மேலது – 199
133. நற் - 12
134. சிலம்பு – 9: 5
135. புறம் - 61: 1 – 3, ப - 167
136. ஐங் - 47: 1 – 3

137. நற் - 26: 2 – 4
138. புறம் - 274: 12 ப – 415
139. மலைபடு, 52
140. பெரும்பாண் - 69: 4
141. மேலது – 155
142. நற் - 64: 4
143. பெரும்பாண் - 69 – 71
144. நெடுநல் - 131 – 133
145. புறம் - 206: 11 – 12
146. மதுரை – 353 – 355
147. புறம் - 87: 2 – 3
148. அகம் - 234: 8
149. நெடுநல் - 79 – 86
150. மதுரை – 83 – 84
151. மேலது – 365
152. அகம் - 5: 20
153. நெடுநல் - 147
154. செ. வைத்தியலிங்கம், அழகுக்கலைகள், ப – 70
155. மதுரை – 510 – 512
156. கலித் - 22: 4 – 5
157. அகம் - 389: 6
158. நற் - 118: 7 – 8
159. புறம் - 204: 3 – 4
160. மதுரை – 723 – 724
161. அகம் - 331: 2
162. பெரும்பாண் - 147 – 154
163. மதுரை – 501 – 502
164. பட்டின – 142 – 144

165. புறம் - 228: 2 – 4
166. மேலது – 32: 8
167. மலைபடு – 474 – 475
168. அகம் - 165: 11
169. மேலது – 77: 7
170. புறம் - 297: 6
171. மேலது – 322: 5
172. நெடுநல் - 63
173. நற் - 84: 6
174. புறம் - 103: 3
175. மேலது – 238: 1
176. மேலது – 322: 5
177. நெடுநல் - 66
178. நற் - 153: 2
179. நெடுநல் - 112
180. சிறுபாண் - 241 – 242
181. அகம் - 110
182. நெடுநல்- 3 – 6
183. அகம் - 94: 4
184. குறுந் - 7: 3 – 4
185. பெரும்பாண் - 275 – 278
186. பரிற்று – 42: 10 – 12
187. அகம் - 89: 7 – 9
188. நற் - 90: 3 – 4
189. மதுரை – 233
190. புறம் - 10: 7 – 8
191. பட்டின – 44 – 50
192. மலைபடு – 366

193. அகம் - 321: 8
194. புறம் - 311
195. ஐங் - 203: 3 – 4
196. மதுரை – 761 – 762
197. பட்டின – 169 – 171
198. முல்லை – 55
199. அகம் - 43: 6 – 7
200. புறம் - 299
201. பட்டின – 1 – 2
202. குறள் - 448
203. புறம் - 217: 1

# ஆய்வு நிறைவுரை

- சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு ஆராய்ந்த போது கீழ்க்காணும் மெய்ம்மைகளின் முடிவுகளை ஆய்வின் முடிவாக நிரல்படுத்தப்படுகின்றது.

- தமிழ்மொழி, செந்தமிழ், வண்தமிழ், முத்தமிழ், நற்றமிழ், கன்னித்தமிழ், என்றெல்லாம் சான்றோர்களால் போற்றப்பெறுதற் சிறப்புக்குரியது.

- பழந்தமிழ் மக்களின் வண்ண ஓட்டங்களையும் பண்பாட்டுச் சிறப்புகளையும் உலகம் கண்டு கொள்ள உதவும் ஒப்புயர்வுப் பெற்ற கருவூலமாக திகழ்வது சங்க இலக்கியமாகும்.

- தமிழ்மொழியின் பழமைக்கும் புதுமைக்கும் அதனதன் வளத்திற்கும் சான்றுகளாக அமையப்பெற்று, வாழ்வியலுக்குரிய அகம், புறம் ஆகிய நெறிமுறைகளை விழுமியக் கூறுகளாக வகுத்துக் கூறுகின்றன.

- தமிழர் தம் மொழிக்காக அதன் வளர்ச்சியை பேணுவதற்காக சங்கம் வைத்து மொழியை ஆராய்ந்த உண்மை புலப்படுத்துகின்றது.

- மன்னர் - மக்கள் உறவு, விருந்தோம்பல் பண்பு கடமையில் சிறந்த விளங்கும் பண்பு, அருளும் தன்மை, பிறருக்கு உதவி செய்தல், அறநெறித்தன்மை, அன்பு காட்டுதல், நம்பிக்கை, காதல் போன்றவைகள் தெளிவாக உய்த்துணரக் காணலாகிறது.

- அறம், பொருள், இன்பம், வீடுபேற்றை உணர்த்தும் நிலைப்பாடுகள் உலகிற்கு எடுத்துக் கூறுதல் என்ற உண்மைத்தன்மை புலனாகின்றது.

- தமிழ்மொழி மிகத்தொன்மையானது, அப்பழமையான மொழி பேசிய மக்களின் வாழ்க்கை மரபுகள் உணர்வுகள் போன்றவற்றை இலக்கியமாகப் பதிவு செய்வதற்கு ஒரு இலக்கண வரையறையை வகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது என்பது சங்க இலக்கியத்தால் காணலாகிறது. ஆகவே, சங்க தமிழர்களின் வாழ்வியலைக் குறிப்பிட்டுக் காட்டும் கலைக்கண்ணாடியாக அமைந்துள்ளது.

- ஒவ்வொரு மனிதனுடைய நம்பிக்கைகள், எண்ணங்கள், கருத்துக்கள் என்பவற்றின் உருவாக்கத்தின் அடிப்படையில் அமைவதே விழுமியமாகும். அதுவே மதிப்பு(Values) என்று ஆய்நதறிய முடிகிறது.

- இம்மதிப்பு சங்க இலக்கியத்துள் ஆராயும் போது தனிமனித விழுமியம், சமூக பண்பாட்டு விழுமியமாக பகுத்தறியப்பட்டுள்ளதால் தெளிவாகின்றது.

- விழுமியமும், மரபும் ஒன்றையொன்று சார்ந்ததாக அமைந்துள்ளது. அகத்தைக் கொண்டு ஆராயும் போது விழு, விழும், விழுமம், விழுமிதின், விழுமிது, விழுமிய, விழுமியோர், விழுமியோன், விழுமியம் என்றும் புறத்தில் ஆராயும் போது சிறப்பான மேன்மையான, உயர்வான, புகழ் என்னும் பொருளில் சமூக பண்பாட்டு நிலைக்க இட்டுச் செல்வதைக் காண முடிகிறது.

- அருந்தமிழர்தம் தனிச்சிறப்புக்களுள் ஒன்று விருந்தோம்பல் என்னும் பெருந்திறல் விழுமியம் என்பது தெளிவாகின்றது.

- உள்ளதாலும் உள்ளாத உயிர்க்கொலை புலால் உண்ணல், வரைவின் மகளிர் நாட்டம், கள் உண்ணல், நாடு பிடிக்கும் பேராசையால் நடக்கும் போர்கள், போர்களால் ஏற்படும் உயிர், பொருள், இழப்புகள் போன்ற விழுமியங்களுக்குரிய செயற்பாடுகள் சங்க காலத்தில் இருந்துள்ளன என்பது ஆய்வினால் தெளிவுற முடிகின்றது.

- சங்க காலத்தில் ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறைவு, முறை, பொறை முதலான இல்லற அறப்பண்புகள் வாழ்வியலில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

- இல்லறஅறம் தவறாததிருந்தலையும் பொருளின் இன்றியமையாமையையும் விளக்கி இல்லற விழுமியங்களை வெளிப்படுத்துகின்றது.

- தமிழர்தாம் நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என ஐந்த வகையாகப் பிரிந்துள்ளனர். பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என ஐந்து ஒழுக்கங்களைக் கூறுகின்றனர்.

- அகப்பொருள் தலைமக்களின் ஒழுக்கத்தினைக் குறித்துள்ளது. திணை முதலானவை நிலம் சார்ந்த ஒழுக்கங்களாக திகழ்கின்றன. ஆகவே தலைமக்களின் அகவாழ்விற்கு ஆதாரமாகவும், இயங்குத் தளமாகவும் அமைபவை முதல், கரு, உரிப்பொருட்களாகும்.

- நானிலப்பரப்பும் அறுவகைப் பருவமும், அறுவகைப் பொழுதும் தலைமக்களின் அகவொழுக்கத்திற்கு முக்கிய காரணிகளாக இருந்துள்ளன. நிலம், காலம், உணவு முதலான சுற்றுச்சூழலின் அடிப்படையில் மக்களின் ஒழுக்கம் யாவும் கருப்பொருளாக நின்று இலக்கியத்திற்கு அழகு சேர்த்துள்ளன.

- அகவொழுக்கம் கைகோள் என்னும் பாங்கில் அமைந்து, பிறப்பு முதல் பத்து குணங்களைப் பெற்று அறம், பொருள், இன்பம் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்ட ஊழ் காரணமாக அமைந்து சிறந்திடும் ஒழுக்கமாக இருந்துள்ளதென தெளிவாகின்றது.

- நிலம் சார்ந்த தலைமக்களின் களவு வாழ்க்கை திருமணத்தில் முடிந்து கற்பு வாழ்க்கையில் தொடங்குகிறது. சங்ககாலத் திருமணாமானது திணை மரபுத் திருமணம் உடன்போக்குத் திருமணம் என்னும் முறையில் நடந்துள்ளது.

- புறவொழுக்கம் பொருண்மைணில் புறப்பொருளின் இலக்கணம் வீரம், கல்வி, புகழ், கொடை, வெற்றி, நிலையாமைகளைக் கொண்டு பண்டைத் தமிழரின் போர் முறைகளை புறப்பொருளில் விளக்கி அமைகின்றது.

- பண்டைக் காலத்தில் வீடு தேடி வரும் புதியவர்களே விருந்தினர் எனப் போற்றப்பட்டனர். அவர்களை அகமும், முகமும் மலர இனிதே வரவேற்று விருந்தளித்தனர்.

- தமிழர்கள் அகத்தையும், புறத்தையும் இருகண்களாகக் கண்டனர். அகம், புறம் என்னும் இரண்டும் ஒற்றுமை, வேற்றுமைகளைப் பெற்றிருப்பினும் புறத்தினும் அகமே சிறப்புடைதாகக் கருதப்பட்டது. புறத்திணைப் பொருளான வீரம் மக்களுள் சிலர்க்காக உரியது. ஆனால் அகத்திணைக்குப் பொருளான காமமோ ஆண் பெண் என்னும் பிரிவுகளைக் கொண்ட உயர்திணை, அஃறிணை உயிர்களுக்கெல்லாம் பொதுவானதாகும்.

- ஆண், பெண் இணைந்து வாழும் உயர்திணை வாழ்வினை இல்லறம் என சிறப்பிக்கின்றனர். இல்லறத்தில் தலைவனும் தலைவியும் இணைந்து அன்புநெறி பூண்டு விருந்தோம்பல், விட்டுக்கொடுத்தல், காத்திருத்தல், பகுத்துண்ணல், சுற்றத்தைக் காத்தல், கேட்டினை விலக்கல், ஈத்துவித்தல், புகழ்தேடல் முதலான உயரிய விழுமியங்களை வெளிப்படுத்த இல்லற மக்கள் கைக்கொள்ளும் ஒழுக்கங்களுக்கும் இடப்படும் சிறப்புப் பெயரே பண்பின் மரமாகக் கருதப்பட்டுள்ளது.
- சங்க இலக்கிய மரபானது காதல், கற்பொழுக்கம், புணர்ச்சி, கல்வியின்பம், உடல், மனரீதியில் அனுபவிக்கும் அனுபவங்கள் அதனால் ஏற்படும் மாற்றங்களுக்கும் முக்கியத்துவமானது சங்க இலக்கியம் இடம் தந்துள்ளதைக் காண முடிகிறது.

- ஆரம்பக் காலந்தொட்டே தமிழ் மக்களின் நாகரிகம், பண்பாடு பழக்கவழக்கங்கள், வாழ்வியல் முறை, அரசு, அமைச்சு, ஆட்சிமுறை, போர், வீரம். சூதல் போன்றவற்றைக் காட்டி நிற்கின்றது.

- மரபுவழிப்பட்ட நம்பிக்கைகள், வாழ்க்கைச் சடங்குகள், இறப்புப்பற்றிய எண்ணங்கள், நல்லன தீயன எனும் பாகுபாடுகள் வாழ்வியல் பற்றுவிடுதல் ஆகிய உணர்வுகள் இவை அனைத்தும் உள்ளடக்கியது நம்பிக்கையாகவும் அதுவே பின்னாளில் சமயமாக கருதுவதைக் காண முடிகிறது.

- தனிமனிதத் தேவை அவன் வாழும் சமுதாயத் தேவையாகின்றது. அதன் அடிப்படையில் அரும்பி மலர்ந்து பயன்தருவது தொழிலாகும். அவற்றில் உணவினை நிறைய விளைவிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் உழவர்கள். அவ்வுழவர்கள் உழுதல், விதைத்தல், நீர்ப்பாய்ச்சுதல், அறுவடைச்செய்தல் போன்ற தொழில்களைச் செய்து தமது உலக வாழ்வுநலனைக் காத்தனர் என்பது ஆய்வினால் தெளிவுற முடிகின்றது.

- உழவினால் விளைவிக்கப்படும் பொருட்களையும் கைத்தொழிலால் செய்யப்படும் உற்பத்திப் பொருட்களையும் உள்நாட்டில் பகிர்ந்தளித்தனர். வேளாண் பெருமக்களால் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களையும். உள்நாட்டு மக்களிடையே பகிர்ந்துக் கொள்வதற்கும் எஞ்சிய பொருட்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கவும் செய்தனர். வெளிநாட்டு பொருட்களை உள்நாட்டில் இறக்குமதி செய்வதற்கும், நாட்டு வளத்திற்கும் பெரும் செல்வத்தையும் ஈட்டவும் வாணிகமே சிறந்தது என்பதை மக்களும் மன்னரும் நன்கு உணர்ந்திருந்தனர்.

- சமூக அமைப்பில் மனிதன் வளமாக வாழ்ந்த காரணத்தாலும் மிகுந்த ஓய்வு கிடைத்ததன் காரணமாகவும் கலைகள் வளர்ந்தன. ஆன்றாட வாழ்க்கைக்குத்

தேவையான பொருட்களைச் செய்து கொடுத்தனர். தொழிலாளர்கள் தாம் செய்யும் தொழிலை தெய்வமாக மதித்து வந்தனர்.

- பண்டைத்தமிழர் இளவேனில் காலத்தில் திருமணம் நிகழ்த்துதல், திருமண வீட்டின் முன்பு மணால் பரப்புதல், புள்நிமித்தம் பார்த்து மணவினை நடத்துதல் போன்றவற்றை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

- விழாக்கள் வேனிற்காலத்தில் நிறைமதி வளர்பிறை நாட்களிலும் காலை, மாலை ஆகிய இருவேளைகளிலும் கொண்டாடப்பட்டுள்ளன. விழாக்கள், சடங்குகள் யாவும் நல்ல நாளில் நிகழ்த்துதலையே தமிழர் தம் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

- சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள எளிய மனிதரும் காதல் வாழ்க்கைக்கு உரியவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதை அறியமுடிகிறது.

- நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் உச்சகட்ட உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகக் காட்சி தருகின்றன.

- முதல்நிலையில் நினைவுச் சின்னமாயிருந்த நடுகல் காலப்போக்கில் வழிபாட்டு நிலைக்கு உயர்வாக கொண்டுள்ளன.

- சங்ககால மக்களின் அகப்புற நிலைகளை வெளிக்காட்டும் பண்பினதாக அமையும் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் மனிதக் வாழ்வியலோடு ஆராய்வதோடு தமிழரின் வாழ்வில் மாண்பின் மரபுகளாகவும் விழுமியக் கூறுகளாக அமைந்துள்ளன.

- தலைவன் எவ்வளவு தான் தவறு செய்தாலும் அவனை விட்டுக்கொடுக்காமல் அன்பு செலுத்தும் தலைவியின் குணம், சகிப்புத்தன்மை ஆகியவற்றை இன்றைய பெண்கள் கற்றுக்கொள்ள வேண்டிய பாடமாகும்.

- சங்ககால மக்களின் சமூக வாழ்வியலாக படம்பிடித்துக் காட்டும் சங்க இலக்கியம் கண்ணாடியாக விளங்குகின்றன. இன்று நாம் கடைபிடிக்கும் ஒவ்வொரு செயலுக்கும், பண்பாட்டிற்கும், நாகரிகத்திற்கும் அடித்தளமாக பாட்டும் தொகையுமாக விளக்குகின்றது.

- சங்க காலத்தில் இருந்த சமூக பிரிவு, தொழில்பிரிவு, திருமணமுறை, குடும்ப வாழ்வு, வணிகவளம், உணவு, உடை, உறையுள், இறப்பு, ஈமச்சடங்கு, நடுகல், கல்வி, தென்புலத்தார்கடன், வானியல் அறிவு, விளையாட்டு, பொழுதுபோக்கு, சமயவாழ்வு, ஆரியவேள்விநெறி, சங்க கால விழாக்கள், புலவர்களின் பண்பாடு, பழந்தமிழர்களின் நம்பிக்கைகள், நல்லறங்கள், இசைக்கலை, ஓவியக்கலை,

கூத்துக்கலை, மருத்துவக்கலை, நீதித்துறை எனப்பல துறைகள் சார்ந்த மரபுவழிச் செய்திகளை சங்க இலக்கியம் எடுத்தியம்புவதை நாம் இன்றும் பின்பற்றி வருகின்றோம் என்பதை ஆய்வினால் தெளிவாக காண முடிகிறது.

- மனிதனுக்கும் சமூகம், இயற்கை, பண்பாடு, பிரபஞ்சம் ஆகியவற்றிற்கும் இடையில மொழிச் செயல்பாட்டினால் உருவாகும் உறவு, அவ்வுறவுச் சார்ந்த கண்ணோட்டம், அக்கண்ணோட்டம் சார்ந்தக் கோட்பாடுகள், அவ்வகைக் கோட்பாடுகளைத் தொடர்ந்து உருவாகும். விதிகள், அவ்விதிகளைச் சோதித்தறிய கற்றுத்தரப்படும் வகைமைகள் இவையனைத்தும் இணைந்து ஒருகாலக்கட்டத்தின் மரபுச்சார்ந்த விழுமியச் சார்ந்த ஒழுங்கமைப்பினை உருவாக்குகின்றன என்று ஆய்வினால் புனலாகிறது.

**வருங்கால ஆய்விற்கான களங்கள்:**

1. சங்க இலக்கியத்தில் அறிவியல் கூறுகள்
2. சங்க இலக்கியம் காட்டும் தத்துவக் கூறுகள்
3. சங்க இலக்கியம் பேணும் காலமும் கருத்தும்

"சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும்" - ஓர் ஆய்வு என்னும் தலைப்பு தெரிவுச்செய்யப்பட்டு, ஆய்வில் கண்ட முடிவுகள் பின்வரும் ஆய்வாளரால் தொகுத்தளிக்கப்பட்டுள்ளது எனினும் பின்வரும் ஆய்வாளருக்கு மேலான ஆய்வுக் களங்களை ஆய்வளரால் மெய்ப்பிக்கப்பெறுகின்றது.

**ஆய்வு பயன்பாடு:**

அனைத்து உயிர்களிடத்தும் மனிதநேயத்தின் மரபு வேண்டும் என்ற உணர்வுகளையும், இவ்வேய்வேட்டினைக் கற்போர் பெறுவர். வெளிவந்துள்ள ஆய்வேடுகளுள் இவ்வாய்வேடும் சங்க இலக்கியத்திற்குப் பங்களிப்புச் செய்யும் சிறந்ததோர் ஆய்வேடாகும்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்:-


1. இராகவ ஐயங்கார் - **குறுந்தொகை விளக்கம்** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகா். பதிப்பு – 1993
2. இளம்பூரணர்(உ.ஆ) **தொல்காப்பியம்**, சாரதா பதிப்பகம், சென்னை. புதிப்பு – 2005
3. இராமசுப்பிரமணியன் வ.த. (உ.ஆ) **புறநானூறு** திருமகள் நிலையம், சென்னை பதிப்பு -2000
4. சுதாசவ ஐயர்.தி. **ஐங்குநூறு மூலமும் உரையும்**, உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை. பதிப்பு – 1999
5. சாமிநாதையர் உ.வே. **பரிபாடல் மூலமும் உரையும்**. உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை. பதிப்பு – 1918.
6. சிவசுப்பிரமணியன்.வே, **அகநானூறு மூலமும் உரையும்**. உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை. பதிப்பு – 1990.
7. நாராயண வேலுப்பிள்ளை. ஏம். **சங்க இலக்கியம் வழங்கும் பத்துப்பாட்டு,** நர்மதா பதிப்பகம். சென்னை.
8. பதிப்பாசிரியர்கள். **பாட்டும் தொகையும்** திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை. பதிப்பு – 2009.
9. பரிமளம். அ. மா. **சங்க இலக்கியம், பதிற்றுப்பத்து**. கோவிலூர் மடாலயம். கோவிலூர். பதிப்பு – 2003.
10. பிரபாகரபாபு,(உ.ஆ). **குறுந்தொகை**, தமிழ்க்கவி பதிப்பகம் சென்னை. பதிப்பு – 2003.
11. புலியூர்க்கேசிகன் (உ.ஆ). **புறநானூறு**, பாரி நிலையம் சென்னை. பதிப்பு – 1958.
12. வெங்கடராமன்.ப. (ப.ஆ). **நற்றிணை மூலமும் உரையும்**, உ.வே. சாமிநாதையார் நூல் நிலையம், சென்னை. பதிப்பு – 1989.

# பின்னிணைப்பு

## துணைமை ஆதாரங்கள்


1. அடைக்கலசாமி. எம்மார். **தமிழ் இலக்கிய வரலாறு**. ராசி பதிப்பகம். சென்னை. பதிப்பு – 1960.
2. அறவாணன். க.ப. **தமிழ் மக்கள் வரலாறு**, தமிழ்க்கோட்டம். சென்னை. பதிப்பு – 2006.
3. அகத்தியலிங்கம். ச. முனைவர். **சாகாத வரம் பெற்ற சங்க பாடல்கள்,** மெய்ப்பன் தமிழாவும் தமிழாய்வும். சிதம்பரம், பதிப்பு – 2002.
4. அப்பாதுரையார். கு. **சங்க இலக்கிய மாண்பும், சங்க புலவர்களும்**, வருந்த பதிப்பகம். சென்னை.
5. இராமகிருஷ்ணன். அ. **அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு**, சர்வோதயா இலக்கியப் பண்ணை. மதுரை.
6. இளங்குமரனார். இரா. புலவர். **தமிழர் வாழ்வியல் இலக்கணம்**, அமிழ்தம் பதிப்பகம். சென்னை. பதிப்பு – 2004.
7. குருசாமி. ம.ரா.போ., **சங்க காலம்**, மல்லி வெளியீடு, கோவை, பதிப்பு – 1967.
8. கோவிந்தன். கா. புலவர். **தமிழர் பண்பாடு**, தென்னிந்திய சைவசித்தாந்த நூல் பதிப்பகம் லிமிடெட், சென்னை.
9. கருணாநிதி.மு. சங்கத்தமிழ், ராக்போர்ட் பப்ளிகேஷன்ஸ். சென்னை, பதிப்பு – 1987
10. சசிவல்லி. வி.சி. **பண்டைத்தமிழர் தொழில்கள்**, உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை பதிப்பு – 1989.
11. சண்முகம் பிள்ளை. மு. **சங்கத்தமிழர் வாழ்வியல்**, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
12. சிதம்பரனார் சாமி. **பத்துப்பாட்டும், பண்டைத்தமிழரும்**, அறிவுப்பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2003
13. சிதம்பரனார். சுாமி, **எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,** அறிவுப்பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2003.
14. சுப்பிரமணியன் .ந. **சங்ககால வாழ்வியல்**. நியூ செஞ்சுவரி புக்ட ஹவுஸ் (பி). லிட், சென்னை. பதிப்பு – 1986

15. சுமதி கனகசபை. **குறுந்தொகை காட்டும் காதல் வாழ்க்கை**, செங்காமிர்தம் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 1996
16. செயராமன். நா. **சங்கத்தமிழ் செய்யுள் கோவை**, முத்துப்பதிப்பகம், மதுரை. பதிப்பு – 1996
17. நக்கீரன். அ. **பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும்**, தமிழ்மண் பதிப்பகம், சென்னை . பதிப்பு – 1966
18. நாராயண வேலுப்பிள்ளை, **உரைநடைத்தமிழில் சங்க இலக்கியம்(எட்டுத்தொகை**), நர்மதா பதிப்பகம், சென்னை.
19. தட்சிணாமூர்த்தி. அ. **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**, யாழ் வெளியீடு, சென்னை. பதிப்பு – 1994
20. தமிழண்ணல். முனைவர்**. உலகத்தமிழிலக்கிய வரலாறு(தொன்மை)**. முதல் கி.பி. 500 வரை) உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை. பதிப்பு – 2004
21. பழனிச்சாமி. செ. **புறநானூற்றில் தமிழர் பண்பாடு**, வாணி பதிப்பகம், கோவை, பதிப்பு – 1989
22. பாலசுப்பிரமணியன். கு.வெ. **சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்** மதராஜ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை, பதிப்பு – 1994
23. பாலசுப்பிரமணியன். கு.வெ. **சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும்**, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. பதிப்பு – 1998
24. பாலசுப்பிரமணியன். கு.வெ. **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்**, மெய்யப்பன் பதிப்பகம், மதராஜ் ரிப்பன் பிரஸ், பதிப்பு – 2000
25. மணி. பே.சு., **சங்கத்தமிழியல்**, மாதவி பதிப்பகம், சென்னை.
26. மாணிக்கம். வ.சுப. **சங்கநெறி**, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், பதிப்பு – 1987.
27. மாதையன். பெ, **தமிழ்ச்செவ்வியல் படைப்புகள்**. நியூ செஞ்சுவரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை. பதிப்பு – 2009
28. வரதாசன். மு. குறுந்தொகைச் செல்வம், பாரி நிலையம், சென்னை. பதிப்பு – 1958
29. வாசுதேவன். க. பண்முக நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, தேவன் பதிப்பகம், சென்னை. பதிப்பு – 2005
30. வேங்கடசாமி நாட்டார் நா.மு. **நல்வழி நறுந்தொகை**, சாரதா பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2005
31. ரவிச்சந்திரன். எம். எஸ். **சங்க இலக்கியம் (ஓர் அறிமுகம்**) பிரபாத் புக் ஹவுஸ், சென்னை. பதிப்பு – 2002

32. வாணி அறிவாளன். முனைவர். **சங்க இலக்கியத் தேடல்,** சபாநாயகம் பிரிண்டர்ஸ். சென்னை. பதிப்பு – 2009
33. ருக்குமணி. இரா. **நற்றிணை காட்டும் வாழ்வியல் சிந்தனைகள்**, ஜோதி பதிப்பகம்.
34. ராஜகோபாலன் சரளா. டாக்டர்., **சங்க இலக்கியத்தில் தோழி,** ஔப்பதிப்பகம், சென்னை. பதிப்பு – 1926
35. பாரதியார் கவிதைகள் உரை- டாக்டர். விஸ்வநாதம், வானவில் பாசுரம் சென்னை. பதிப்பு – 1980
36. திருக்குறள் தெளிவுரை, உரை – டாக்டர். இரா. ராமமூர்த்தி, இலக்கிய பீடப்பதிப்பகம், சென்னை. பதிப்பு – 2008
37. நற்றிணை, உரை – முனைவர். கதிர். மகாதேவன், கலாச்சேத்ர அச்சகம், சென்னை – 41 பதிப்பு - 2003
38. அகநானூறு, உரை – கவிஞர். ந. மீனவன, கலாச்சேத்ர அச்சகம், சென்னை. பதிப்பு – 2004
39. புறநானூறு , உரை. இரா. இளங்குமரன், கலாச்சேத்ர அச்சகம், சென்னை. பதிப்பு – 2003
40.

## களஞ்சியங்கள்

1. அருணாசலம். ப.(ப.ஆ), **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்**, தொகுதி 1 – 4, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
2. பாலுசாமி. நா (ப.ஆ)**, வாழ்வியற் களஞ்சியம்**, தொகுதி 1,2, 10, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

# அகராதிகள்

1. கதிர்வேற்பிள்ளை, **சூடாமணி நிகண்டு மூலமும் உரையும்**, வித்தியாகரநாக அச்சுக்கூடம், சென்னை, முதற்பதிப்பு – 1914.
2. குமார சுவாமிப்பிள்ளை, **இலக்கியச் சொல்லகராதி**, யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கம், சென்னை, முதற்பதிப்பு – 1980.
3. சிங்காரவேலு முதலியார். ஆ., **அபிதான சிந்தாமணி**, சாரதா பதிப்பகம், சென்னை. பதிப்பு – 2001.
4. சுப்பிரமணியக் கவிராயர், சே.தா. **தமிழ்ச்சொல் அகராதி**, மதுரைத் தமிழ்ச்சங்கம். மதுரை, முதற்பதிப்பு – 1923.
5. திவாகர முனிவர். **சேந்தன் திவாகரம்**, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த, நூற்பதிப்புக்கழகம், லிமிடெட், சென்னை, முதற்பதிப்பு – 1958.

# சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் - ஓர் ஆய்வு

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி – பகுதிநேரம்)
பட்டபேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**இரா. ஜோதி, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்.,**

No.Ph.D/Regn./ 100/PT/07/2014/10735

**நெறியாளர்**

**முனைவர் கு. வெங்கடேசன், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,**
முதல்வர், தமிழ்த்துறைத்தலைவர்,
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.






தமிழ்த்துறை
காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
கீழம்பி, காஞ்சிபுரம்.


**சூன் – 2019**

# சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் - ஓர் ஆய்வு

சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி – பகுதிநேரம்)

பட்டபேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**இரா. ஜோதி, எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்.,**

No.Ph.D/Regn./ 100/PT/07/2014/10735

**நெறியாளர்**

முனைவர் கு. வெங்கடேசன், எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,

முதல்வர், தமிழ்த்துறைத்தலைவர்,

காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,

கீழம்பி, காஞ்சிபுரம்.




தமிழ்த்துறை

காஞ்சி ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,

கீழம்பி, காஞ்சிபுரம்

**சூன் – 2019**

# ஆய்வு நிறைவுரை

- சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும் என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு ஆராய்ந்த போது கீழ்க்காணும் மெய்ம்மைகளின் முடிவுகளை ஆய்வின் முடிவாக நிரல்படுத்தப்படுகின்றது.

- தமிழ்மொழி, செந்தமிழ், வண்தமிழ், முத்தமிழ், நற்றமிழ், கன்னித்தமிழ், என்றெல்லாம் சான்றோர்களால் போற்றப்பெறுதற் சிறப்புக்குரியது.

- பழந்தமிழ் மக்களின் வண்ண ஓட்டங்களையும் பண்பாட்டுச் சிறப்புகளையும் உலகம் கண்டு கொள்ள உதவும் ஒப்புயர்வுப் பெற்ற கருவூலமாக திகழ்வது சங்க இலக்கியமாகும்.

- தமிழ்மொழியின் பழமைக்கும் புதுமைக்கும் அதனதன் வளத்திற்கும் சான்றுகளாக அமையப்பெற்று, வாழ்வியலுக்குரிய அகம், புறம் ஆகிய நெறிமுறைகளை விழுமியக் கூறுகளாக வகுத்துக் கூறுகின்றன.

- தமிழர் தம் மொழிக்காக அதன் வளர்ச்சியை பேணுவதற்காக சங்கம் வைத்து மொழியை ஆராய்ந்த உண்மை புலப்படுத்துகின்றது.

- மன்னர் - மக்கள் உறவு, விருந்தோம்பல் பண்பு கடமையில் சிறந்த விளங்கும் பண்பு, அருளும் தன்மை, பிறருக்கு உதவி செய்தல், அறநெறித்தன்மை, அன்பு காட்டுதல், நம்பிக்கை, காதல் போன்றவைகள் தெளிவாக உய்த்துணரக் காணலாகிறது.

- அறம், பொருள், இன்பம், வீடுபேற்றை உணர்த்தும் நிலைப்பாடுகள் உலகிற்கு எடுத்துக் கூறுதல் என்ற உண்மைத்தன்மை புலனாகின்றது.

- தமிழ்மொழி மிகத்தொன்மையானது, அப்பழமையான மொழி பேசிய மக்களின் வாழ்க்கை மரபுகள் உணர்வுகள் போன்றவற்றை இலக்கியமாகப் பதிவு செய்வதற்கு ஒரு இலக்கண வரையறையை வகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது என்பது சங்க இலக்கியத்தால் காணலாகிறது. ஆகவே, சங்க தமிழர்களின் வாழ்வியலைக் குறிப்பிட்டுக் காட்டும் கலைக்கண்ணாடியாக அமைந்துள்ளது.

- ஒவ்வொரு மனிதனுடைய நம்பிக்கைகள், எண்ணங்கள், கருத்துக்கள் என்பவற்றின் உருவாக்கத்தின் அடிப்படையில் அமைவதே விழுமியமாகும். அதுவே மதிப்பு(Values) என்று ஆய்நதறிய முடிகிறது.

- இம்மதிப்பு சங்க இலக்கியத்துள் ஆராயும் போது தனிமனித விழுமியம், சமூக பண்பாட்டு விழுமியமாக பகுத்தறியப்பட்டுள்ளதால் தெளிவாகின்றது.

- விழுமியமும், மரபும் ஒன்றையொன்று சார்ந்ததாக அமைந்துள்ளது. அகத்தைக் கொண்டு ஆராயும் போது விழு, விழும், விழுமம், விழுமிதின், விழுமிது, விழுமிய, விழுமியோர், விழுமியோன், விழுமியம் என்றும் புறத்தில் ஆராயும் போது சிறப்பான மேன்மையான, உயர்வான, புகழ் என்னும் பொருளில் சமூக பண்பாட்டு நிலைக்க இட்டுச் செல்வதைக் காண முடிகிறது.

- அருந்தமிழர்தம் தனிச்சிறப்புக்களுள் ஒன்று விருந்தோம்பல் என்னும் பெருந்திறல் விழுமியம் என்பது தெளிவாகின்றது.

- உள்ளதாலும் உள்ளாத உயிர்க்கொலை புலால் உண்ணல், வரைவின் மகளிர் நாட்டம், கள் உண்ணல், நாடு பிடிக்கும் பேராசையால் நடக்கும் போர்கள், போர்களால் ஏற்படும் உயிர், பொருள், இழப்புகள் போன்ற விழுமியங்களுக்குரிய செயற்பாடுகள் சங்க காலத்தில் இருந்துள்ளன என்பது ஆய்வினால் தெளிவுற முடிகின்றது.

- சங்க காலத்தில் ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறைவு, முறை, பொறை முதலான இல்லற அறப்பண்புகள் வாழ்வியலில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

- இல்லறஅறம் தவறாததிருந்தலையும் பொருளின் இன்றியமையாமையையும் விளக்கி இல்லற விழுமியங்களை வெளிப்படுத்துகின்றது.

- தமிழர்தாம் நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என ஐந்த வகையாகப் பிரிந்துள்ளனர். பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என ஐந்து ஒழுக்கங்களைக் கூறுகின்றனர்.

- அகப்பொருள் தலைமக்களின் ஒழுக்கத்தினைக் குறித்துள்ளது. திணை முதலானவை நிலம் சார்ந்த ஒழுக்கங்களாக திகழ்கின்றன. ஆகவே தலைமக்களின் அகவாழ்விற்கு ஆதாரமாகவும், இயங்குத் தளமாகவும் அமைபவை முதல், கரு, உரிப்பொருட்களாகும்.

- நானிலப்பரப்பும் அறுவகைப் பருவமும், அறுவகைப் பொழுதும் தலைமக்களின் அகவொழுக்கத்திற்கு முக்கிய காரணிகளாக இருந்துள்ளன. நிலம், காலம், உணவு முதலான சுற்றுச்சூழலின் அடிப்படையில் மக்களின் ஒழுக்கம் யாவும் கருப்பொருளாக நின்று இலக்கியத்திற்கு அழகு சேர்த்துள்ளன.

- அகவொழுக்கம் கைகோள் என்னும் பாங்கில் அமைந்து, பிறப்பு முதல் பத்து குணங்களைப் பெற்று அறம், பொருள், இன்பம் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்ட ஊழ் காரணமாக அமைந்து சிறந்திடும் ஒழுக்கமாக இருந்துள்ளதென தெளிவாகின்றது.

- நிலம் சார்ந்த தலைமக்களின் களவு வாழ்க்கை திருமணத்தில் முடிந்து கற்பு வாழ்க்கையில் தொடங்குகிறது. சங்ககாலத் திருமணாமானது திணை மரபுத் திருமணம் உடன்போக்குத் திருமணம் என்னும் முறையில் நடந்துள்ளது.

- புறவொழுக்கம் பொருண்மைணில் புறப்பொருளின் இலக்கணம் வீரம், கல்வி, புகழ், கொடை, வெற்றி, நிலையாமைகளைக் கொண்டு பண்டைத் தமிழரின் போர் முறைகளை புறப்பொருளில் விளக்கி அமைகின்றது.

- பண்டைக் காலத்தில் வீடு தேடி வரும் புதியவர்களே விருந்தினர் எனப் போற்றப்பட்டனர். அவர்களை அகமும், முகமும் மலர இனிதே வரவேற்று விருந்தளித்தனர்.

- தமிழர்கள் அகத்தையும், புறத்தையும் இருகண்களாகக் கண்டனர். அகம், புறம் என்னும் இரண்டும் ஒற்றுமை, வேற்றுமைகளைப் பெற்றிருப்பினும் புறத்தினும் அகமே சிறப்புடைதாகக் கருதப்பட்டது. புறத்திணைப் பொருளான வீரம் மக்களுள் சிலர்க்காக உரியது. ஆனால் அகத்திணைக்குப் பொருளான காமமோ ஆண் பெண் என்னும் பிரிவுகளைக் கொண்ட உயர்திணை, அஃறிணை உயிர்களுக்கெல்லாம் பொதுவானதாகும்.

- ஆண், பெண் இணைந்து வாழும் உயர்திணை வாழ்வினை இல்லறம் என சிறப்பிக்கின்றனர். இல்லறத்தில் தலைவனும் தலைவியும் இணைந்து அன்புநெறி பூண்டு விருந்தோம்பல், விட்டுக்கொடுத்தல், காத்திருத்தல், பகுத்துண்ணல், சுற்றத்தைக் காத்தல், கேட்டினை விலக்கல், ஈத்துவித்தல், புகழ்தேடல் முதலான உயரிய விழுமியங்களை வெளிப்படுத்த இல்லற மக்கள் கைக்கொள்ளும் ஒழுக்கங்களுக்கும் இடப்படும் சிறப்புப் பெயரே பண்பின் மரமாகக் கருதப்பட்டுள்ளது.
- சங்க இலக்கிய மரபானது காதல், கற்பொழுக்கம், புணர்ச்சி, கல்வியின்பம், உடல், மனரீதியில் அனுபவிக்கும் அனுபவங்கள் அதனால் ஏற்படும் மாற்றங்களுக்கும் முக்கியத்துவமானது சங்க இலக்கியம் இடம் தந்துள்ளதைக் காண முடிகிறது.

- ஆரம்பக் காலந்தொட்டே தமிழ் மக்களின் நாகரிகம், பண்பாடு பழக்கவழக்கங்கள், வாழ்வியல் முறை, அரசு, அமைச்சு, ஆட்சிமுறை, போர், வீரம். சூதல் போன்றவற்றைக் காட்டி நிற்கின்றது.

- மரபுவழிப்பட்ட நம்பிக்கைகள், வாழ்க்கைச் சடங்குகள், இறப்புப்பற்றிய எண்ணங்கள், நல்லன தீயன எனும் பாகுபாடுகள் வாழ்வியல் பற்றுவிடுதல் ஆகிய உணர்வுகள் இவை அனைத்தும் உள்ளடக்கியது நம்பிக்கையாகவும் அதுவே பின்னாளில் சமயமாக கருதுவதைக் காண முடிகிறது.

- தனிமனிதத் தேவை அவன் வாழும் சமுதாயத் தேவையாகின்றது. அதன் அடிப்படையில் அரும்பி மலர்ந்து பயன்தருவது தொழிலாகும். அவற்றில் உணவினை நிறைய விளைவிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் உழவர்கள். அவ்வுழவர்கள் உழுதல், விதைத்தல், நீர்ப்பாய்ச்சுதல், அறுவடைச்செய்தல் போன்ற தொழில்களைச் செய்து தமது உலக வாழ்வுநலனைக் காத்தனர் என்பது ஆய்வினால் தெளிவுற முடிகின்றது.

- உழவினால் விளைவிக்கப்படும் பொருட்களையும் கைத்தொழிலால் செய்யப்படும் உற்பத்திப் பொருட்களையும் உள்நாட்டில் பகிர்ந்தளித்தனர். வேளாண் பெருமக்களால் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களையும். உள்நாட்டு மக்களிடையே பகிர்ந்துக் கொள்வதற்கும் எஞ்சிய பொருட்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கவும் செய்தனர். வெளிநாட்டு பொருட்களை உள்நாட்டில் இறக்குமதி செய்வதற்கும், நாட்டு வளத்திற்கும் பெரும் செல்வத்தையும் ஈட்டவும் வாணிகமே சிறந்தது என்பதை மக்களும் மன்னரும் நன்கு உணர்ந்திருந்தனர்.

- சமூக அமைப்பில் மனிதன் வளமாக வாழ்ந்த காரணத்தாலும் மிகுந்த ஓய்வு கிடைத்ததன் காரணமாகவும் கலைகள் வளர்ந்தன. ஆன்றாட வாழ்க்கைக்குத்

தேவையான பொருட்களைச் செய்து கொடுத்தனர். தொழிலாளர்கள் தாம் செய்யும் தொழிலை தெய்வமாக மதித்து வந்தனர்.

- பண்டைத்தமிழர் இளவேனில் காலத்தில் திருமணம் நிகழ்த்துதல், திருமண வீட்டின் முன்பு மணால் பரப்புதல், புள்நிமித்தம் பார்த்து மணவினை நடத்துதல் போன்றவற்றை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

- விழாக்கள் வேனிற்காலத்தில் நிறைமதி வளர்பிறை நாட்களிலும் காலை, மாலை ஆகிய இருவேளைகளிலும் கொண்டாடப்பட்டுள்ளன. விழாக்கள், சடங்குகள் யாவும் நல்ல நாளில் நிகழ்த்துதலையே தமிழர் தம் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

- சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள எளிய மனிதரும் காதல் வாழ்க்கைக்கு உரியவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதை அறியமுடிகிறது.

- நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் உச்சகட்ட உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகக் காட்சி தருகின்றன.

- முதல்நிலையில் நினைவுச் சின்னமாயிருந்த நடுகல் காலப்போக்கில் வழிபாட்டு நிலைக்கு உயர்வாக கொண்டுள்ளன.

- சங்ககால மக்களின் அகப்புற நிலைகளை வெளிக்காட்டும் பண்பினதாக அமையும் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் மனிதக் வாழ்வியலோடு ஆராய்வதோடு தமிழரின் வாழ்வில் மாண்பின் மரபுகளாகவும் விழுமியக் கூறுகளாக அமைந்துள்ளன.

- தலைவன் எவ்வளவு தான் தவறு செய்தாலும் அவனை விட்டுக்கொடுக்காமல் அன்பு செலுத்தும் தலைவியின் குணம், சகிப்புத்தன்மை ஆகியவற்றை இன்றைய பெண்கள் கற்றுக்கொள்ள வேண்டிய பாடமாகும்.

- சங்ககால மக்களின் சமூக வாழ்வியலாக படம்பிடித்துக் காட்டும் சங்க இலக்கியம் கண்ணாடியாக விளங்குகின்றன. இன்று நாம் கடைபிடிக்கும் ஒவ்வொரு செயலுக்கும், பண்பாட்டிற்கும், நாகரிகத்திற்கும் அடித்தளமாக பாட்டும் தொகையுமாக விளக்குகின்றது.

- சங்க காலத்தில் இருந்த சமூக பிரிவு, தொழில்பிரிவு, திருமணமுறை, குடும்ப வாழ்வு, வணிகவளம், உணவு, உடை, உறையுள், இறப்பு, ஈமச்சடங்கு, நடுகல், கல்வி, தென்புலத்தார்கடன், வானியல் அறிவு, விளையாட்டு, பொழுதுபோக்கு, சமயவாழ்வு, ஆரியவேள்விநெறி, சங்க கால விழாக்கள், புலவர்களின் பண்பாடு, பழந்தமிழர்களின் நம்பிக்கைகள், நல்லறங்கள், இசைக்கலை, ஓவியக்கலை,

கூத்துக்கலை, மருத்துவக்கலை, நீதித்துறை எனப்பல துறைகள் சார்ந்த மரபுவழிச் செய்திகளை சங்க இலக்கியம் எடுத்தியம்புவதை நாம் இன்றும் பின்பற்றி வருகின்றோம் என்பதை ஆய்வினால் தெளிவாக காண முடிகிறது.

- மனிதனுக்கும் சமூகம், இயற்கை, பண்பாடு, பிரபஞ்சம் ஆகியவற்றிற்கும் இடையில மொழிச் செயல்பாட்டினால் உருவாகும் உறவு, அவ்வுறவுச் சார்ந்த கண்ணோட்டம், அக்கண்ணோட்டம் சார்ந்தக் கோட்பாடுகள், அவ்வகைக் கோட்பாடுகளைத் தொடர்ந்து உருவாகும். விதிகள், அவ்விதிகளைச் சோதித்தறிய கற்றுத்தரப்படும் வகைமைகள் இவையனைத்தும் இணைந்து ஒருகாலக்கட்டத்தின் மரபுச்சார்ந்த விழுமியச் சார்ந்த ஒழுங்கமைப்பினை உருவாக்குகின்றன என்று ஆய்வினால் புனலாகிறது.

**வருங்கால ஆய்விற்கான களங்கள்:**

1. சங்க இலக்கியத்தில் அறிவியல் கூறுகள்
2. சங்க இலக்கியம் காட்டும் தத்துவக் கூறுகள்
3. சங்க இலக்கியம் பேணும் காலமும் கருத்தும்

"சங்க இலக்கியத்தில் தமிழர் வாழ்வின் மரபும் சமூக விழுமியங்களும்" - ஓர் ஆய்வு என்னும் தலைப்பு தெரிவுச்செய்யப்பட்டு, ஆய்வில் கண்ட முடிவுகள் பின்வரும் ஆய்வாளரால் தொகுத்தளிக்கப்பட்டுள்ளது எனினும் பின்வரும் ஆய்வாளருக்கு மேலான ஆய்வுக் களங்களை ஆய்வளரால் மெய்ப்பிக்கப்பெறுகின்றது.

**ஆய்வு பயன்பாடு:**

அனைத்து உயிர்களிடத்தும் மனிதநேயத்தின் மரபு வேண்டும் என்ற உணர்வுகளையும், இவ்வேய்வேட்டினைக் கற்போர் பெறுவர். வெளிவந்துள்ள ஆய்வேடுகளுள் இவ்வாய்வேடும் சங்க இலக்கியத்திற்குப் பங்களிப்புச் செய்யும் சிறந்ததோர் ஆய்வேடாகும்.